ஓம்.

# பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சியுரை.

# A CRITICAL TAMIL COMMENTARY ON PERUMPARNATTUPPADAI.



இது

யாழ்ப்பாணத்துக் காரைநகர்

பண்டிதர், சு. அருளம்பலம் அவர்களால்

இயற்றப்பட்டு,

யாழ்ப்பாணம்,

ஸ்ரீ சண்முகநாத அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.



 **1937** [விலை ரூபா 1-25

# பொருளடக்கம்.

கணபதி துணை.

# முகவுரை.

பெரும்பாணாற்றுப்படை யென்பது, அமிழ்தினு மினிய நந்தமிழ்மொழியின்கண்ணுள்ள பழைய இலக்கிய நூல்களுள்ளே தண்டா நல்லிசைத் தண்டமிழ்ப் புலவர்கள் அருளிச் செய்த சங்கச் செய்யுட்களில் தலைமை பெற்ற பத்துப் பாட்டுக்களில் நான்காவதாயுள்ளது. இது பெரும் பாணன் ஒருவனை, காஞ்சிநகரத் தரசு புரிந்த தொண்டை மான் இளந்திரையனிடத்தே ஆற்றுப் படுத்தியதாக அவ் விளந்திரையனை, கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பாட்டாகும். இதன்கண்ணே காஞ்சிநகரின் மருங்கேயுள்ள பல்வேறு மரபினர் இருக்கைகள் மிகவுஞ் சுவைபட எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

இச்செய்யுளின் பொருள் எளிதிற் கற்றறிதற்பொ ருட்டு இதன் அடிகளைச் சிலசிலவாக எடுத்துக்கொண்டு பொழிப்புரை வரைந்தும், விளக்கவுரைக் குறிப்பில் இலக் கண முடிபுகளையும் சொற்களின் பொருள்களையும் விளக்கி யும் இருக்கின்றேன். செய்யுளின்கண்ணுள்ள சொற்களையும், சொற்றொடர்களையும் முன்பின்னாக மாற்றிக் கூட்டிப் பொருளுரையாது கிடந்தவாறே பொருள்கூறியுள்ளேன். ஐந்நூறு அடிகாறும் பரந்துகிடந்த பொருள்களையெல் லாம் சுருக்கிச் செய்யுட் பொருளை யாவரு மறிதற்பொருட் டுச் சுருக்க வரலாறு எழுதியுள்ளேன.

பெரும்பாணாற்றுப் படையைக் கற்போர் முதலிற் பாணருடைய வரலாறு அறிதல் ஒருதலையாக வேண்டப்படு தலின் பழைய இலக்கண இலக்கிய நூல்களிலிருந்து அவர் கள் வரலாற்றை விரித்துக் கூறியுள்ளேன்.

இப்பாட்டின்கட் போந்த சொற்களுக்கெல்லாம் பொருள் பொருட்பாகுபாட்டிற் கூறியிருப்பினும் இச்சொற்கு இதுவே பொருள் என ஐயமறத் தெளிதற் பொருட்டு, அருஞ்சொற்களையெல்லாம் அகரவரிசைப்படுத்தி அவற்றிற்கெல்லாம் பொருள் எழுதியுள்ளேன். நூலாசிரியர் இச்சொல்லை இப்பொருளிற்றான் வழங்கியுள்ளாரெனத் தெளிதற்பொருட்டு இச்செய்யுள் உண்டான காலத்தும் அதற்கு முன்பின்னையடுத்துவந்த காலத்தும் வழங்கிய நூல்களிலிருந்து மேற்கோள் காட்டியிருக்கின்றேன்.

நந்தாய்மொழியின் அருமை பெருமைகளைத் தமிழகத்தாரறிந்து அதன்கண் அவா மிக்கு, அதனை நன்கு பயில விரும்புமாறு செய்தலால் நந்தாய்மொழிக்குத் தொண்டாற்றும்பேற்றைப் பெறலாமென விழைந்த யான் அதனைப் பெறுதற்குத் தகுதியில்லேனாய் வைத்தும் 'ஆசை வெட்கமறியாது' என்னும் பழமொழிப்படி அவ்வழியிற் றொண்டாற்றத் தொடங்கி, பழந்தமிழ் நூல்களுள் முதன்மையவாகிய பத்துப் பாட்டுக்களையும் ஆராய்ச்சியுரையுடன் வெளியிட முயன்றேன். அங்ஙனம் முயன்ற எனக்கு உயர்திரு. மறைமலையடிகள் அவர்கள் வெளியிட்டுள்ள முல்லைப்பாட்டாராய்ச்சியுரையும் பட்டினப்பாலை ஆராய்ச்சியுரையும் முன்மாதிரியாகவும் பெரும்பொருளாகவும் புலப்பட்டன. இன்னுமவர்கள் வெளியிடுவதற்கு எழுதி வைத்திருப்பனவாகக் குறிப்பிட்டுள்ள குறிஞ்சிப்பாட்டு ஆராய்ச்சியுரையும், மலைபடுகடாம் ஆராய்ச்சியுரையும் எனது விழைவிற்குப் பெரிதும் துணை புரிவனவாகும். ஆகவே பத்துப் பாட்டுக்களுள் முதற்கண்ணதாகிய திருமுருகாற்றுப் படையை ஆராய்ந்து சில மாசங்களுக்குமுன் எழுதி வெளியிட்டேன். அதனைப் பல

தமிழன்பர்கள் வாங்கிப் படித்து என்னை ஊக்கப்படுத்து வாராயினர். ஏனைய பாட்டுகளையும் ஆராய்ந்து வெளியிட எண்ணியிருந்தபோது இப்பெரும்பாணாற்றுப்படை யாழ்ப் பாண ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்துப் பால பண்டித பரீக்ஷைக்குரிய பாடங்களுள் ஒன்றாக அமைக்கப்பட்டமை கண்டு பாட்டுக்களை முறையானே எடுத்துக்கொள்ளாது இதனை இப்போது வெளியிடலா னேன். இன்னும் யான் எழுதி வைத்திருக்கும் பொரு நராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை என்பவற்றின் ஆராய்ச்சியுரைகள் விரை வில்வெளிவருதற்கு எல்லாம் வல்ல இறைவன் திருவருளை வேண்டுகின்றேன்.

இவ்வாராய்ச்சியுரையிலும் திருமுருகாற்றுப்படை ஆராய்ச்சியுரையிலுமுள்ள பொருந்தாமைகளை எனக்குப் புலப்படுத்தும் தமிழன்பர்களுக்கு யான் பெரிதுங் கடமைப் பட்டிருத்தலோடு அடுத்த பதிப்பில் அவர்கள் தெரிவிக் கும் பொருந்துமாறுகளையும் வெளியிடுவேன் என்பதைப் பணிவாகத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

இவ்வுரையினை நன்கு பார்வையிட்டு உரைச் சிறப் புப் பாயிரம் உதவிய ஸ்ரீமத் சி. சுப்பிரமணியதேசி கர் அவர்களுக்கும், மதிப்புரை உவந்தளித்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்ப் பேராசிரியர்கள், பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களுக்கும், திரு. எஸ். சோமசுந்தர பாரதியார் M. A., B. L. அவர்களுக் கும், இதனை விரைந்து வெளியிடுதற்கு என்னைப் பெரி தும் ஊக்கப்படுத்திய தமிழ்ப் பெருஞ்செல்வர் திரு மயி லாப்பூர் சே. வெ. ஜம்புலிங்கம்பிள்ளை அவர்களுக்குப்

எனது மனமார்ந்தநன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகி றேன்.

இப்பணி இனிது நிறைவேறற்பொருட்டுத் தோன் றாத் துணையாயிருந்தருள்செய்த செந்தமிழ்த் தெய்வத்தை மனமொழி மெய்களால் சிந்தித்து வாழ்த்தி வணங்குகின் றேன்.

இங்ஙனம்,
சு. அருளம்பலவன்.

"திருமகள் விலாஸம்"
காரை நகர்
**20-9-37.**

## ஆராய்ச்சியுரைச்
# சிறப்புப் பாயிரம்.

இனிமையும் தனிமையும் நனிபெரும் பழமையும்
சிவநெறித் தொடர்பும் தவலரு நிறைவும்
வழிமொழி யுடைமையும் மொழியியல் வழாமையும்
என்றிவை முதலாத் துன்றிய வியலோடு
நிலவுல கத்தே தலைமையி னிலை இய
தமிழ்மொழிக் கடலி னமிழ்தெனத் திகழும்
பண்டைப் பனுவல் பல்லவற் றுள்ளும்
முதன்மையாம் பத்துப் பாட்டி னிதம்புணர்
பெரும்பா ணாற்றுப் படைக்கு விரும்பி
ஆராய்ச்சி யுரையோன் றதர்பட வகுத்தோன்
குலனருள் தெய்வங் கொள்கை மேன்மை
கலைபயி றெளிவு கட்டுரை வன்மையென்
றின்னே ரன்ன தொன்னெறி யன்னிய
திண்மைசே ராசான் வண்மைசேர் குரிசில்
மும்மைச் சங்கமும் மூவேந் தரும்போற்
பாண்டித் துரைமால் வேண்டி மதுரையில்
ஆக்கிய நான்காஞ் சங்கம் நோக்கிப்
பண்டிதப் பட்டம் வழங்கிய பான்மையன்
நற்றமிழ்க் கிடனு யுற்றயாழ்ப் பாணத்துக்
காரை நகரிற் சீரோடு வாழும்
அருளம் பலவனும் பொருவி லோனே.

# அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துத் தமிழ்ப் பேராசிரியர்
# பண்டித, ந. மு. வேங்கடசாமிநாட்டார் அவர்கள்
# அளித்த
# மதிப்புரை.

யாழ்ப்பாணத்திலுள்ள பண்டிதர் திரு. சு. அருளம்பலம் அவர்களால் எழுதப் பெற்ற 'பெரும்பாணாற்றுப் படை ஆராய்ச்சியுரை' என்னும் நூலினைப் படித்து மிக மகிழ்ச்சி யெய்தினேன். நூலின் தொடக்கத்தே பாணர் என்பாரைப் பற்றிய செய்திகள் பலவும் பழைய இலக்கிய இலக்கண மேற்கோள்களுடன் எழுதப்பட்டிருப்பது பண்டிதரின் ஆழ்ந்தகன்ற கல்வியையும் ஆராய்ச்சித் திறனையும் புலப்படுத்தி இன்புறுத்துகின்றது. 'பாவும் பாட்டின் நடையும்' என்ற பகுதியில், பெரும்பாணாற்றுப்படையில் அமைந்துள்ள தொடை விகற்பம் பலவற்றையும் எடுத்துக் காட்டியிருப்பது பாராட்டற்குரியது. பொதுவாக இந்நூற் பகுதிகள் பலவுமே கற்பார்க்கு இப் பாட்டின் இயல்புகளை விளக்குவதோடு ஆராய்ச்சியின்பத்தை ஊட்டிப் பயன் விளைப்பனவாகும். இவ்வாராய்ச்சியுரையின் ஆசிரியர் செந்தமிழ்த் தெய்வத்தின் திருவருளால் இத்தகு நற்பணி பற்பல புரிந்து சிறப்பெய்துவாராக.

## அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத்
## தமிழ்ப் பேராசிரியர்
## திரு. எஸ். சோமசுந்தர பாரதியார் அவர்கள் M.A., B.L.
## அளித்த
# மதிப்புரை.

---

பெரும்பாணாற்றுப்படை பத்துப் பாட்டுக்களில் கூர்ந்தாராயத்தக்க சரித நிகழ்ச்சிகள் பல பொதிந்து கிடக்கும் செய்யுளாகும். பண்டைத் தமிழர் இயல்புகளையும் தமிழகப் பழைய நிகழ்ச்சிகளையும் அறவே மறந்து தமிழறவுணர்ச்சி குன்றிப் பல துறைகளிலும் அடிமை வாழ்வை உகக்கும் இக்காலத்தில் சங்க இலக்கியக் கடலின் மூழ்கி முத்துக்குளித்தல் விரும்புவோர் சிலரே யாவர். அவருள்ளும் விருப்பு வெறுப்பின்றி நடுநின்று மெய்யவாயும் ஆராய்ச்சி வன்மையுடையார் மிகமிகச் சிலராவர். 'ஆய்தொறும் நூல்நயம் போலும்' என்னும் உண்மைக்கு இலக்காகும் இலக்கியங்களுள் பெரும்பாணாற்றுப்படை ஒன்று. அதை எளிய நடையில் புலத்துறை முற்றிய பண்டிதர்க்கு மட்டுமன்றி கலைநலம் விரும்பும் பிறருக்கும் பயன்படத் தக்கவாறு உரைநடையில் பொருட் பாகுபாடு செய்திருப்பது பாராட்டத் தக்கது. இப்பழம் பாட்டும் பாட்டின் நடையும் பற்றிய தங்கள் குறிப்புக்களும் சிந்திக்கத் தக்கன. முன்னுரையின் ஆராய்ச்சிக் குறிப்புக்கள் இறுதியில் தொகுத்திருக்கும் வரலாற்றுக் குறிப்புக்களுடன் இவ்வரிய செய்யுளை ஆராய விரும்புவார்க்கு வழுக்குநிலைத் தூண்டுகோல்போல உதவத் தக்கன. மாட்டெறிந்துடனப்போலக் கொண்டுகூட்டிப் பாட்டினை மதிகம் படிப்ப

வரை மயங்க வைக்கும் பழைய உரைபோலல்லாமல் நேரிய பொருளை நிரல்படத் தொகுத்துச் செல்லும் முறை தங்கள் ஆராய்ச்சி யுரைக்கு அழகு தருகின்றது. அரும் பத விளக்கம் ஒன்றுகூட்டுவது மாணவருக்குப் பயன் விளைக்குமென்று தோன்றுகிறது. தங்கள் தமிழ்த் தொண்டுக்கும் இத்தகைய ஆராய்ச்சிகளுக்கும் பல்லாண்டு கூறிப் பாராட்ட விரும்பும்

தங்கள் சொந்தன்,

S. S. BHARATI.

# பிழை திருத்தம்

| பக். | வரி. | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 4 | வல்லதாாதற்கு | வல்லாராதற்கு |
| 8 | 24 | அறியற்பாலது | அறியற்பாலன |
| 9,11 | 10 | வருவதனால் | வருவனவற்றால் |
| 12 | 14 | யாழிசைசை | யாழிசையை |
| 14 | 3 | முதலன | முதலான |
| 15 | 1 | வருவென | வருமேவென்ன |
| 16 | 21 | பகுதியான | பகுதியான் |
| 19 | 15 | வெற்றியனும் | வெற்றியியலும் |
| 20 | 25 | உடையை | உடையைக் |
| 21 | 20 | கொடுத்தானும் | கொடுத்தலும் |
| 22 | 7 | விறலியார் | விறலியர் |
| 22 | 18 | நுமலென | நுமரெனன |
| 23 | 7 | காஞ்கி | காஞ்சி |
| 27 | 6 | வருவதனால் | வருவனவற்றால் |
| 29 | 14 | குற்றிதனாற் | குற்றத்தினாற் |
| 29 | 20 | பண்ணுக்கு | பண்ணுக்கு |
| 30 | 19 | வருவது | வருவன |
| 31 | 3 | வருவது | வருவன |
| 31 | 7 | தமிழத்து | தமிழகத்து |
| 32 | 27 | நிறை | நிரை |
| 34 | 27 | பாடான் | பாடாண் |
| 41 | 14 | பல்லெருத | பல்லெருத் |
| 42 | 22 | வடா | வரடா |
| 43 | 21 | எயினக் | எயினர்க் |
| 44 | 4 | நாளா | நாளாத் |
| 47 | 8 | றம்புடை | றாம்புடை |

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 50 | 23 | பாற்சிலம் | பொற்சிலம் |
| 54 | 24 | கோள | கொள |
| 55 | 21 | யழுதொடு | யழுதொடு |
| 57 | 21 | கட்டிளையும | கட்டிளையும் |
| 58 | 28 | முழங்குகின்ற | முழங்குகின்ற |
| 60 | 2 | சிறுக் | சிறுகக் |
| 61 | 2 | தசையனுப் | தசையைப் |
| 61 | 15 | முதுகிளையும | முதுகிளையும் |
| 61 | 25 | புறத்திளையுய் | புறத்திளையும் |
| 61 | 29 | தேலாகிய | தோலாகிய |
| 62 | 9 | தேயந்த | தேய்ந்த |
| 70 | 29 | பாரியலோடு | பொரியலோடு |
| 79 | 3 | றுடையாத | அடையாத |
| 85 | 20 | கெண்டேனும் | கொண்டேனும் |
| 86 | 23 | செல்க | செல்கவென |
| 89 | 23 | இன்னும் | இன்னும், |
| 91 | 12 | பூளை | பூளா |
| 94 | 25 | உளவர் | உழவர் |
| 109 | 23 | பணிக்கும் | பனிக்கும் |
| 111 | 4 | பொருள் | பொருள |
| 122 | 23 | திலாகரத்தும் | திவாகரத்தும் |
| 123 | 14 | முழ்வு | முழவு. |
| 126 | 13 | பத்தினும் | பத்தானும் |
| 134 | 3 | பெருநராற்று | பொருநராற்று |
| 135 | 1 | வாழ் | வாய் |
| 135 | 1 | இரீஇப் | இரீஇ |
| 135 | 52 | முரல் | மூரல் |
| 140 | 24 | விரிச்து | விரித்து |

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 141 | 1 | கட்டனை | கட்டளை |
| 142 | 24 | பனமை | பன்மை |
| 144 | 2 | இருக்கலின | இருக்கலின் |
| 144 | 6 | தேய்ந்தகே | சேந்தகே |
| 146 | 23 | யிறை | யிரை |
| 148 | 10 | பகிகலில் | பக்கலில் |
| 150 | 1 | வெகுறு | வைகுறு |
| 154 | 11 | கவுளுடத்து | கவுளிடத்து |
| 155 | 16 | உன்னும் | என்னும் |
| 158 | 3 | பரிபாடலினும். | பரிபாடலினும், |
| 158 | 13 | பெறற்கரு | பெறற்கருங் |
| 158 | 15 | அத்திவெஃகா | அத்; வெஃகா |
| 166 | 9 | என்ப் | எனப் |
| 166 | 16 | அதுவ | அது |
| 165 | 23 | யுரவி | புரவி |
| 167 | 17 | முனிவரானை | முனிவரானை |

# பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சியுரை.

---

## முன்னுரை.

ஒரு நாட்டின் சிறப்பிற்குச் சங்கீதம் சிற்பம் சித்திரம் முதலான உயரிய நற்கலைகள் இன்றியமையாதன. இவைகளெல்லாம் நுண்ணறிவோடு சம்பந்தப்பட்டனவாகும். இக்கலைகளில் வல்லவராதற்கு அதிகங்கூடிய மதிநுட்பம் வேண்டற்பாலது. இந்நுட்பக் கலைகளில் எந்நாடு அதிகம் விருத்தியடைந்திருக்கின்றதோ அது நாகரீகம் நுண்ணறிவு முதலியவற்றில் மிக்கு விளங்கும். பண்டைக் காலத்திலே நம் தமிழ்நாட்டின் கண்ணே இந்நற்கலைகள் எல்லாம் பூரண அபிவிருத்தி யடைந்திருந்தன. சங்கீதம் மிகவும் மேலாக விளங்கியது.

சங்கீதத்தை விரும்பாதவர்கள் ஒருவரும் இல்லை. அது எல்லாருக்கும் அளவிலாத ஆநந்தத்தை அளிக்கின்றது. பசுக்களும் பாம்புகளும் அதனைக்கேட்டுப் பரவசமடைகின்றன. புல் பூண்டுகளும் கானத்தைக் கேட்டுக் களிப்படைகின்றன. நம் மனத்தின் கண்ணே தோன்றுகின்ற துன்பங்களெல்லாம் அதனைக் கேட்குந்தோறும் விட்டகல்கின்றன. நோயினாற் பிடிக்கப்பட்டு வருந்துகின்றவர்களும் அத்துன்பம்நீங்கி இன்பமடைகின்றனர். அதனால் மறத்தன்மை நீங்கி அறத்தன்மை யுண்டாகின்றது. திரிகரணங்களும் அசைவற்று நிற்கின்றன. இசையின்வாய்பட்டு இருதிணையுயிர்களும்நின்றன வென்பதைப்பழந்தமிழ்இலக்கியங்களிற் பரக்கக் காணலாம். "பொய்யன்புக் கெட்டாத

பொற்பொதுவினடம் புரியும்'' இறைவன்பால் மெய்யன்பை உண்டாக்குவது இசையே. எத்தனையோ அடியார்கள் இசைபாடி இறைவனை வழிப்பட்டு இடையறாத பேரின்ப நிலையைப் பெற்றார்கள். ஆனாய நாயனார் திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் முதலியோர் இசையால் வழிபட்டுப் பேரின்பம் பெற்றவர்களாவர். இறைவனே இசைவடிவி னன். "ஏழிசையாய் இசைப்பயனாய்" எனவும் "இயல் இசைப் பொருள்களாகி" எனவும் வருந் தேவாரப்பகுதி கள் இதனை வலியுறுத்தும். அவர் இசையில் அதிகம் விருப் புள்ளவர். அதனாலன்றோ இறைவனை வழிபடுதற்குரிய தோத்திரப் பாக்களெல்லாம் இசையுடன் கூடி விளங்கு கின்றன. இறைவனும் கீதத்தைக்கேட்டுத் திருவருள் சுரப் பார். "அளப்பிலகீதஞ் சொன்னார்க் கடிகள் தாமருளு மாறே" என்பது திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம். இராவணனும் இசைபாடி இன்பம் பெற்றான். கடவுள் இசையில் விருப்புள்ளவர். அவரது தட்சணாமூர்த்தி பேதங்களுள் வீணாகானதட்சணாமூர்த்தி என்பதும் ஒன்று. அவர் எப்பொழுதும் வீணை வாசித்துக்கொண்டே யிருப்பர். "எம்மிறை வீணைவாசிக்குமே" எனத் தேவா ரத்து வருவதுங் காண்க. இன்னும் இறைவன் இசையை எப்பொழுதும் கேட்கவேண்டிக் கம்பளர் அசுவதர் என்ற கந்தருவர் இருவரைத் தமது திருச்செவிகளில் தோடுக ளாக அணிந்திருக்கின்றார்.

சங்கீதமானது நமது நாட்டின் பழமை வாய்ந்த நற் கலையாகும். தமிழ்ச் சங்கங்களில் இசைத்தமிழை இயற்ற மிழ் நாடகத் தமிழ்களுக்கு நடுவணதாய் வைத்து வளர்த்து வந்தனர். அக்காலத்திலே இசை வல்லார் பலர் இருந்தனர். பரிபாடல் என்னும் பழந்தமிழ் இலக்கிய நூலிலுள்ள

பாட்டுக்களின் இடையில் இசை வகுத்தார் பெயரும் அதற்குரிய பண்ணின் பெயரும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இசை வகுத்தாருள் நன்னாகனார் பெட்டனாகனார் கண்ணனாகனார் நல்லச்சுதனார் பித்தாமத்தர் முதலியோர் சிலராவர். இசைப்புலவர்களை அரசர்கள் பெரிதும் ஆதரித்து வந்தார்கள். அரசர்கள் இசையை எப்பொழுதும் கேட்பதையே பெருஞ் செல்வமாக எண்ணினார்கள். *"இசை பெறு திருவின் வேந்தவை" என்பதற்கு 'இசையை எக்காலமும் கேட்கின்ற செல்வத்தினையுடைய அரசர்களுடைய அவைக்களம்' என்று எழுதிய நச்சினார்க்கினியர் உரை கண்டு அறியற்பாலது.

## பாணர்கள்

பண்டைக் காலத்திலே இசைபாடுதலையே தமது முதன்மையான தொழிலாக மேற்கொண்டு வாழ்ந்துவந்தவர்கள் பாணர்களாவார்கள். அவர்கள் பண்ணுக்குரியவராக இருந்த காரணத்தினாலேயே அப்பெயரைப் பெற்றார்கள். அவர்களைப்பற்றிய செய்திகள் பல பழந்தமிழ் இலக்கியங்களிலே கூறப்பட்டிருக்கின்றன. அவர்கள் தமிழ் நூல்களில் பலவாறு வழங்கப்பட்டுள்ளார்கள். பாணர்களில் ஆண்மகன் பாணன், பாண்மகன் என்னும் பெயர்களால் வழங்கப்பட்டுள்ளான். இதனைப் "பாணன் சூடிய பைம்பொற்றாமரை" (புறம் 141) எனவும் "கைவளம் பழுநிய நயந்தெரி பாலைக் கைவல் பாண்மகன்" எனவும் வருவனவற்றால் அறியலாகும். பெண்மகள், பாண்மகள், பாடினி, பாட்டி, விறலி, பாணிச்சி என்னும் பெயர்களால் வழங்கப்பட்டுள்ளாள் என்பதை "முள்ளெயிற்றுப் பாண்மகள்" (ஐங் 47) எனவும், "பாணன்

---

* பத்துப்பாட்டு மலைபடுகடாம் 39

சூடான் பாடினி யணியாள்'' (புறம் 242) எனவும் "பாணர் வருக, பாட்டியர் வருக'' (மதுரை 749) எனவும் "சில் வளைக்கைச் செவ்வாய் விறலி'' (பு. வெ. மா. 219) எனவும் "பாணர் வருவாராக பாணச்சியார் வருவாராக'' (மது 749 நச். உரை) எனவும் வருவனவற்றால் அறியலாகும்.

## பாணர் தாழ்ந்தவர்

பண்டைக்காலத்திலே தமிழ்நாட்டில் விளங்கிய குடிகளுள்ளே பாணரும் ஒரு வகுப்பினராவர். அவர்கள் மிகவும் பழமையானவர்கள். தமிழ் நூல்களுள் மிகவும் பழமை வாய்ந்த தொல்காப்பியத்தின்கண்ணே பாணர்கள் கூறப்பட்டிருக்கின்றனர். அவர்கள் இசைப் பயிற்சியில் உயர்ந்தவர்களாயிருப்பினும், சாதியில் தாழ்ந்தவராகவே கருதப்பட்டு வந்தனர்.

"துடியன் பாணன் பறையன் கடம்பனென்
றிந்நான் கல்லது குடியு மில்லை'' (335)

என்னும் புறப்பாட்டில் தாழ்ந்த வகுப்பினராய துடியன் பறையன் முதலானவர்களோடு பாணர்கள் ஒருங்கு எண்ணப்படுதலால் பாணரும் தாழ்ந்தவர் என்பது அறியலாகும். இன்னும்,

"இழிபிறப்பாளன் கருங்கை சிவப்ப
வலி துரந்து சிலைக்கும் வன்கட் கடுந்துடி'' (170)

எனவும்,

"துடியெறியும் புலைய
வெறிகோல் கொள்ளு மிழிசின'' (287)

எனவும் புறப்பாட்டில் வருவதனால் துடியர் இழிசினராவர் என்பது இனிது புலனாகும். பாணரும் அத்தன்

மையமோ. பாணர்கள் ஊருக்குப் புறம்பான இடங்களில் ஒருசேரவிருந்து வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் வசிக்கும் இடம் பாண்சேரி எனப்பட்டது.

"வெண்மணல் லரிஞர் தண்ணுமை வெரீஇக்
கண்மடற் கொண்ட தீந்தே னிரியக்
கள்ளரிக்குங் குயஞ் சிறுசின்
மீன் சீவும் பாண்சேரி (348)

எனப் பாணர் வசிப்பிடம் பாண்சேரியென வழங்கப்பட்டிருத்தல் காண்க.

தாழ்ந்த சாதியார் ஊருக்குப் புறம்பே ஒதுக்கமான இடங்களில் வசித்து வருதலை நாம் இன்றும் பற்பல பகுதிகளில் காணக்கூடியதாயிருக்கின்றது. பண்டை நாளிலே பாணர்களும் ஊருக்குப் புறம்பேயே வசித்து வந்தார்களென்பது

"அகலிரு வானத் திமிழ்ந்தினி திசைப்பக்
குருகு நரல மனை மரத்தான்
மீன்சீவும் பாண் சேரியொடு
மருதஞ் சான்ற தண்பணை சுற்றி யொருசார்"
(267—70)

என்னும் மதுரைக்காஞ்சியினால் அறியக்கிடக்கின்றது.

பாணர்கள் தாழ்ந்தவர்களாகக் கருதப்பட்டமையினாலேயே அவர்கள் 'புலையன்', 'புலைமகன்', 'புலைப்பாணன்', 'புலைஆத்தின்னி' என நூல்களில் வழங்கப்பட்டுள்ளார்கள். இதனை,

"புதுவன வீகை வளம்பாடிக் காலிற்
பிரியாக் கவிகைப் புலையன்றன் யாழின் (95)

எனக் கலித்தொகையினும்

'வைகொண்டஊசிகொற்சேரியின்விற்றெம்மில் வண்ணவண்ணப்
பொய்கொண்டு நிற்கலுற்றோ புலையாத்தினி போந்ததுவே'

எனத் திருக்கோவையாரினும் "பாடு பெறுநர் முன்பாடு புலைத்தொழிற் பாண்மகனே" எனச் சிராமலைக்கோவையினும் "வன்பான் மனப் புலைப்பாண செல்லிம் மனை வாயில் விட்டே" எனக் குளத்தூர்க்கோவையினும் வருவனவற்றாலறிக.

பாணர் தாழ்ந்தவர்களாக இருந்தமையினாலே பாண் என்ற சொல் தாழ்மை என்ற பொருளிலும் வந்துள்ளது. "செயிர்பொடி சிவந்து நோக்கி" என்னும் சீவகசிந்தாமணிச் செய்யுளுரையில "பாண்செய்ததன்றோ" என்பதற்குத் 'தாழ்ச்சிசெய்தது' என நச்சினார்க்கினியர் பொருள் உரைத்தவாறு காண்க. இன்னும் அப்பொருளில்,

"காணுமாறு காணே னுன்னை
யந்நாட் கண்டேனும்
பாணே பேசி யென்றன்னைப் படுத்த
தென்ன பரஞ்சோதி" (திருவாசகம்)

என மாணிக்கவாசகசுவாமிகளும் அருளியிருத்தல் காண்க. பெரிய புராணத்தில் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராகக் கூறப்பட்ட திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாரும் திருவிளையாடற் புராணத்திற் கூறப்பட்ட பாணபத்திரரும் பாண வகுப்பைச் சேர்ந்தவர்களே. இவர்கள் இசைப் பயிற்சியிலே மிகவும் திறமை வாய்ந்தவர்களாக விளங்கினார்கள். திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாரும் அவரது மனைவியான விறலியாரும் திருஞானசம்பமூர்த்தி நாயனாருடன் சென்று அவர் பாடும் பத்திரசம் ததும்பும் பண்களை யாழிற் சேர்த்து வாசித்து வருவார்கள். திருஞானசம்பந்தர் ஒருதினம் "ஆலம் வைத்த கண்டத்தவர்

கொண்டாராய்" திருநீலநக்க நாயனாரது இல்லத்துக்குச் சென்றார். அவருடன் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் மனைவியாரும் கூடச் சென்றார்கள். ஞானசம்பந்தர் திருநீலநக்கரால் பெரிதும் உபசரிக்கப்பட்டு அன்றிரவு அங்கே தங்கினார். அப்போது தம்முடன் வந்த யாழ்ப்பாணருக்கும் விறலியாருக்கும் இடங் கொடுக்குமாறு அவருக்குக் கூற அவர் வீட்டுக்கு நடுவிலிருக்கும் வேதிகையின் பக்கத்தே இடங்கொடுக்க அவர்கள் அங்கே துயின்றனர். இதனை,

"நின்ற அன்பரை நீலகண்டப்பெரும் பாணர்க்
கின்று தங்கவோர் இடங்கொடுத் தருளுவீர் என்ன
நன்றும் இன்புற்று நடுமனை வேதியின் பாங்கர்ச்
சென்று மற்றவர்க் கிடங் கொடுத் தனர்திரு மறையோர்"

"ஆங்கு வேதியில் அறாதசெந் தீவலஞ் சுழிவுற்
றோங்கி முன்னையில் ஒருபடித் தன்றியே ஒளிரத்
தாங்கு நூலவர் மகிழ்வுறச் சகோட யாழ்த் தலைவர்
பாங்கு பாணியா ருடன் அருளாற்பள்ளி கொண்டார்"

எனப் பெரியபுராணத்து வருவனவற்றால் அறியலாகும். வேதிகையிலுள்ள செந்தீயானது வலஞ் சுழித்து முன்னையிலும் ஓங்கி விளங்கியது எனச் சிறப்பித்துக் கூறுவதனால் திருநீலகண்ட யாழ்ப்பாணர் வருணத்திற் குறைந்தவ ரென்பதும் அதனாற் செந்தீயானது முன்னையிற் குறைவு படாது அவரது பக்தியின் உயர்வால் முன்னையிலும் ஓங்கி யெழுந்தது எனவும் அறியக் கிடத்தலால் பாணர் தாழ்ந்த வகுப்பினரேயாவர்.

பாணபத்திரன் யாழ்வாசித்தலில் மிகவும் திறமை வாய்ந்தவன். மதுரைச் சோமசுந்தரக் கடவுளிடத்து

இடையறு அன்பு பூண்டவன். அதனால் நாடோறும் அக் கோயிலை அடைந்து இடப தேவருக்குப் பின் நின்று இசைபாடிக் கடவுளை வழிபட்டு வருவானாயினன். ஒரு தினம் மழை மிகுதியாகப் பெய்துகொண்டிருந்தது. பாண பத்திரன் எத்தகைய இடையூறு வரினும் தன்னியமந் தவறுதவனாதலின் அம்மழையிலும் மிகுதியும் நனைந்து வந்து இடப தேவருக்குப் பின்னின்று சரீரம் நினைந்து நடுக்குற, நரம்பு மழையில் நனைந்தலினால் இசை மழுங்க, இசைபாடினன் என்னும் இவ்வரலாற்றினால் பாணபத் திரன் திருக்கோயிலினுள்ளே செல்லுவதற்கு அருகனல்ல னென்பதும் அதனாலேயே மழைவந்தபோதும் உள்ளே செல்லாது இடப தேவருக்குப் பின்னதாக நின்று யாழ் வாசித்தான் என்பதும் அறியக்கிடக்கின்றன.

## பாணரின் வகை

பாணர்களில் இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண் டைப்பாணர் எனப் பல பிரிவினர் உண்டு. அவர்களில் இசைப்பாணர் வாய்ப்பாட்டு பாடுகின்றவர்களாவார்கள். இவர்கள் 'பாடற்பாணர்' எனவும் 'அகலவன்' எனவும் 'அம்பணவர்' வழங்கப்பட்டுள்ளார்கள். "பண்ணியாழ்ப் புலவர் பாடற்பாணர்" எனவும் "பாடும் பாணரிற் பாங் குறச் சேர்ந்து" எனவும் சிலப்பதிகாரத்தும் "அகலவன் பெறுக மாவே" எனப் பதிற்றுப்பத்தினும் வருதல் காண்க. 'அகலவன்—பாடும் பாணன்' எனவரும் பதிற்றுப் பத்துரையும் 'பாடும் பாணர்—அம்பணவர் எனவரும் சிலப்பதிகார அரும்பதவுரையும் ஈண்டு அறியற்பாலது.

யாழ்ப்பாணர்கள் யாழினைத் தமது இசைக் கருவி யாகக்கொண்டு இசை பாடிச் சீவிப்பவர்கள். இவர்களில்

பெரும்பாணர் சிறுபாணர் என இருவகையினர் உண்டு. பெரும்பாணர் பேரியாழைக் கருவியாகவும் சிறுபாணர் சீறியாழைக் கருவியாகவும் கொண்டவராவர். இதனை,

"பொன் வார்ந்தன்ன புரியடங்கு நரம்பி
னின்குரற் சீறியா ழிடவயிற் றழீஇ
நைவளம் பழுநிய நயந்தெரி பாலை
கைவல் பாண் மகன்" (34-7)

எனச் சிறுபாணாற்றுப்படையிலும், "இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பி" எனப் பெரும்பாணாற்றுப் படையிலும் வருவதனால் அறியலாகும்.

பாணர்கள் பண்டைக்காலத்திலே மிகவும் வறியவர்களாயிருந்தமையால் அவர்களிற் சிலர் பிச்சைப் பாத்திரத்தைக் கையிலேந்திப் பிச்சையேற்றுக் காலங்கழித்துவந்தனர். அவர்கள் கையிலுள்ள பாத்திரம் மண்டை எனப்படும். மண்டையைக் கைக்கொண்டமையால் அவர்கள் மண்டைப்பாணர் எனப்பட்டனர். "பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்" எனவும் "அருந்தலை யிரும்பாணர் அகன்மண்டைத் துளையுரீஇ" எனவும் "ஏலாது கவிழ்ந்த என்னிரவன் மண்டை" எனவும் வரும் புறப்பாட்டடிகள் அறியற்பாலன. பாணர்கள் அப்பாத்திரத்தைப் பிச்சையேற்றற்கு மாத்திரம் உரியதாகக் கொள்ளாது அதனையே உண்கலமாகவும் உபயோகித்துவந்தனர். இதனைப் "பொழுதிடைப் படாஅப் புலரா மண்டை" என்னும் புறநானூற்றுரையுள், 'ஒருபொழுதும் ஓயாமல் உண்ணவும் தின்னவும் படுதலான் ஈரம் புலராத மண்டை' என வரும் அத

னுரையானும் அறியலாகும். (103)* "புழற்பெய் மண்டை" என மணிமேகலையில் வருவதுங் காண்க. இப்பாத்திரத்திலே பாணர்கள் மதுவை வார்த்துப் பருகுதலுமுண்டு.‡

## பாணரின் தொழில்

பாணர்கள் தம் வாழ்க்கையை நடத்துவதற்கு மேற்கொண்ட தொழில்களில் பாட்டுப்பாடல் யாழ்வாசித்தல் மீன்பிடித்தல் என்பன முக்கியமானவை. பாணர்கள் பாட்டுப்பாடுதலில் மிக வல்லவர்கள்; கேட்டாரைப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்கும் வகையில் மிகவும் இனிமை பொருந்தப் பாடும் திறமையுடையவர்கள். அதனால் அவர் "பாடுவன் மகாஅர்" எனப் (புறநானூறு 291) கூறப்பட்டிருத்தலுங் காண்க. அவர்கள் பாடிக் கேட்டோரைப் பிணிக்கும் தகைமையது என்பது,

"புதுவன வீகை வளம்பாடிக் காலிற்
பிரியாக் கவிகைப் புலையன்றன் யாழி
னிகுத்த செவி சாய்த்து"

என்னும் கலித்தொகைக்கு 'யாழோசை கேட்டாரை அகப்படுக்குமாறுபோல இவன்பாட்டும் அகப்படுத்தலின் யாழிற்பாடி யென்றாள்' என நச்சினார்க்கினியர் எழுதிய விசேடவுரையான் அறியலாகும்.

பாணர்கள் யாழ்க்கலையில் நன்கு பயின்றவர். அவர்கள் யாழிசை மிக்க இன்பத்தைப் பயக்கும் தன்மையது. "பாணர் நரம்புளர் முரற்கைபோல வினிதாலம்ம" என

* மணிமேகலை 6:92, புழல்-ஒருவகைச் சிற்றுண்டி.
‡ புறநானூறு 261, 352.

வருதலுங் காண்க. (ஐங். 402.) அவர் யாழிசையிலே யானையும் அடங்கி நடக்குமென்பது,

"காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்
யாழ்வரைத் தங்கி யாங்கு"

எனக் கலித்தொகையினும்,

"மகரயாழ் வல்ல மைந்த னொருவனைக் கண்ட மத்தப்
புகர்முகக் களிற்றின் மன்னவன் முனிவனை வணங்கி"

என மேருமந்தரபுராணத்தும் வருவதனாலறியலாகும்.

முன்னைநாளிலே பாலைநிலத்து வழியின்கண்ணே தறுகண்மையையுடைய ஆறலைகள்வர் கையிற்படைக்கலங்களைத் தாங்கி அவ்வழிச் செல்லும் வழிப்போக்கரது பொருளைப் பெறுவர். அவ்வாறு பெறுவதற்கு அவர்பாற் பொருளில்லாதவிடத்துத் தங்கள் அம்பினை அவர்கள் மேல் விடுத்து அதனாற் பதைப்பதைக் கண்டு மனமகிழ்வர். அவர்கள் தன்மையை,

"வலிமுன்பின் வல்லென்ற யாக்கைப் புலிநோக்கிற்
சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தைய
அற்றம்பார்த் தல்கும் கடுங்கண் மறவர்தாங்
கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலிற்
புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை" (4)

என்னும் கலித்தொகையான் அறியலாகும். இத்தகைய மறத்தன்மை பொருந்திய ஆறலை கள்வர்களும் பாணரது யாழோசையைக் கேட்பின் தம் கையிற் படைக்கலங்களை விட்டு மறநிலை நீங்கி அறநிலையாவர் என்பது,

"ஆறலை கள்வர் படைவிட அருளின்
மறுதலை பெயர்க்கும் மருவின் பாலை" (21-2)

என்னும் பொருநராற்றுப்படையானும் 'வழியை அலைக்கின்ற கள்வர் தம் கையிற் படைக்கலங்களைக் கைவிடும்படி அருளினது மாறாகிய மறத்தினை அவர்களிடத்து நின்று பெயர்க்கும் மருவுதலினிய பாலையாழ்' என்னும் அப்பகுதிக்கு எழுதிய நச்சினார்க்கினியர் உரையானும் அறியலாகும். இங்ஙனம் யாழ்வாசித்தலில் மிகவும் முதிர்ந்த அறிவினராயிருந்தமையால் பாணர்கள் * 'யாழ்ப்புலவர்' எனப்பட்டனர்.

மாலைக்காலத்திலே பாணர்கள் வீடுகளிற் சென்று யாழ்வாசித்து வருதலும் உண்டு. அப்போது தலைவன் தலைவியர்கள் பிள்ளையோடு முற்றத்திலேயிருந்து பாணரது யாழிசையைக் கேட்டு மகிழ்ந்துவந்தார்கள். இது

"மாலை முன்றிற் குறுங்காட் டின்னகை
மனையோ டுணைவி யாகப் புதல்வன்
மார்பி னூரு மகிழ்நகை யின்பப்
பொழுதிற் கோத்தன்று மன்னே
மென்பிணித் தம்ம பாணன தியாழே" (410)

என்னும் ஐங்குறுநூற்றினால் அறியக்கிடக்கின்றது.

இனி, அவர்கள் தம் வாழ்க்கையில் மேற்கொண்ட தொழில்களில் மீன்பிடித்தலும் ஒன்று என்பது,

"பச்சூன் பெய்த சுவல்பிணி பைந்தோற்
கோள்வல் பாண்மகன் றலைவலித் தியாத்த
நெடுங்கழைத் தூண்டி னடுங்க நாண்கொளீஇ

* பண்ணியாழ்ப் புலவர் (சிலப். 5:185)

கோடுவா யிரும்பின் மடிதலை புலம்பப்
பொதியிரை கதுவிய போழ்வாய் வாளை’’
(பெரும்பாண் 283-7)

எனவும்,

“அம்ம வாழி தோழி பாணன்
சூழ்கழி மருங்கி னாணிரை கொளீஇ
சினைக்கயன் மாய்க்குந் துறைவன்’’ (ஐங். 111)

எனவும் *“மீன் சீவும் பாண்சேரி’’ எனவும், வருவனவற்றால் அறியலாகும்.

பாணர்கள் வலையினாலும் தூண்டிலினாலும் பிடித்துக்கொண்டுவரப்படும் மீன்களைப் பாணிச்சியர் வெளியே கொண்டு சென்று விற்று அதன் விலைக்கு நெல் பயறு முதலான தானியங்களைப் பெற்று வந்தார்களென்பது,

“அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்
சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்
யாண ரூர........................’’ (49)

எனவும்

“முள்ளெயிற்றுப் பாண்மக ளின்கெடிறு சொரிந்த
வகன்பெரு வட்டி நிறைய மனையோ
ளரிகாற் பெரும்பயறு நிறைக்கு மூர’’ (47)

எனவரும் ஐங்குறுநூற்றினால் அறியக் கிடக்கின்றது. இன்னும் பாணர்கள் தமது தொழில்களில் ஒன்றாகத் தையற் தொழிலையும் மேற்கொண்டிருந்தனர் என்பது “சதுர்முகப் பாணன் றைக்குஞ் சட்டை’’ என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கால் அறியலாகும்.

---

* மதுரைக்காஞ்சி 269. புறநானூறு 348.

# அகப்பொருட்பகுதி.

பாணரைப்பற்றிய அகப்பொருட் செய்திகள் கலித்தொகை அகநானூறு ஐங்குறுநூறு ஐந்திணையைம்பது நற்றிணை முதலன அகப்பொருள் சம்பந்தமான நூல்களிற் கூறப்பட்டுள்ளன. இல்லற வாழ்க்கைக்குரிய வாயில்களுள் பாணரும் ஒருவராவர். அது

"தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
பாணன் பாடினி யிளையர் விருந்தினர்
கூத்தர் விறலிய ரறிவர் கண்டோர்
யாத்த சிறப்பின் வாயில்க ளென்ப." (கற்பு **52:**)

என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தால் அறியலாகும். இல்லற வாழ்க்கையில் தலைவன் தலைவியர்களுக்கிடையில் ஊடல் ஏற்படுவதுண்டு. அவ்வாறு ஊடல் ஏற்பட்ட காலத்துப் பாணன் தனது திறமையால் அதனைப் போக்குவான். தலைமகன் பரத்தமை காரணமாகத் தலைவிக்கு ஊடல் ஏற்படுங்காலத்து, தலைமகன் பாணனை வாயில் வேண்ட அவன் தலைமகள் மாட்டு வாயிலாக ஊடல் தீர்த்தற் பொருட்டுச் செல்வான். சென்று தலைமகன் கொடுமைகூறிய தலைவிமாட்டு நீர் கொடுமை கூறவேண்டா நும்மேல் அருளுடையாரெனத் தலைமகன் காதன்மை கூறிச் சமாதானஞ் செய்வான். தூதாகச் சென்ற பாணனைத் தலைவி 'பொய்யன்' எனவும் 'பலகூளினன்' எனவும் வெகுண்டு கூறுதலுமுண்டு. வாயில் வேண்டிச் சென்ற பாணனோடு தலைமகள் வெகுண்டு கூறுதலும், தலைமகள் வெகுண்டுரையா நிற்பப் பாணன் வாயில் பெருமையில் புலந்து கூறுதலும் முறையே "பாணனோடு வெகுளுதல்" "பாணன் புலந்துரைத்தல்" என்னுந் துறைகளாகத் திருக்கோவையாரில் வருதல் காண்க.

தலைமகன், இன்னகாலத்து வருவென எனப் பருவங் குறித்துத் தலைவியைப் பிரிந்து செல்வான். குறித்த காலத்துக்குத் திரும்பிவாராது காலந் தாழ்ப்பின் தலைவி அவனிடத்துத் தூதாகப் பாணனை அனுப்புவாள்.

"காண்மதி பாணநீ யுரைத்தற் குரியை
துறைகெழு கொண்கன் பிரிந்தென
விறைகே ழெல்வளை நீங்கிய நிலையே. (ஐங்:140)

என்பது பாணன் தூதாகிச் செல்லவேண்டுங் குறிப்பினளாகிய தலைமகள் அவற்குத் தன் மெலிவுகாட்டிச் சொல்லியதாகும். தலைவனது பிரிவாற்றாமையால் வேறுபட்ட தலைவியினது மெலிவுகண்டு பாணன் பெரிதும் இரங்குவதுண்டு இதனை,

"தொடிநிலை கலங்க வாடிய தோளும்
வடிநல னிழந்தவென் கண்ணு நோக்கிப்
பெரிதுபுலம் பினனே சீறியாழ்ப் பாணன்" (475)

என்னும் ஐங்குறு நூற்றினால் அறியலாகும். இவ்வாறு வேறுபட்ட தலைவிக்குப் 'பிரிவாற்றாமை அவற்கு முளதன்றோ; நீர் வேறுபடுகின்றதென்னை'? எனப் பாணன் ஆறுதல் கூறித் தலைமகட்குத் தூதாகத் தலைமகன் வதியும் பாசறைக்கட் சென்று,

"நினக்கியாம் பாணரு மல்லே மெமக்கு
நீயுங் குருசிலை யல்லை மாதோ
நின்வெங் காதலி தன்மனைப் புலம்பி
யீரித ழுண்க ணுகுத்த
பூசல் கேட்டு மருளா தோயே" (ஐங்: 480)

எனப் பாணன் தலைமகனை நெருங்கிச் சொல்லுவது முண்டு.

இனி, பரத்தையரில்லின்கண்ணே சென்று தங்கி அங்கே யாழ்வாசித்தலும் பாணனது தொழிலாகும். அது "நின்பெண்டி ரில்லி னெழீஇய யாழ்தழீஇக் கல்லாவாய்ப் பாணன்" எனனும் கலித்தொகையானும் (90) 'பரத்தையரில்லிலே வாசித்த யாழைத் தழுவிக்கொண்டு வாயிலாய்த் திரிகின்றதொழியப் பாட்டைத் திருந்தக் கல்லாத வாயினையுடைய பாணன்' என்னும் அதன் உரையானும் அறியலாகும். பரத்தையரிடத்தே சென்று ஒழுகுதற்குரியவற்றைப் பாடிக்காட்டித் தலைவனை அவருடன் சேர்ப்பிப்பவனும் பாணனே. அது கலித்தொகையில் "ஏந்தெழின் மார்ப" (96) என்னும் செய்யுளின் "மிகநன்றினியறிந்தேன்" என்னும் பகுதியின் விசேடவுரையில் 'பாணன் தூதாடவந்த' என்றதனான் அவன்கூட்டிய புதிய பரத்தையரென்பதூஉம்' எனவும் "இணைபடநிவந்த" என்னும் செய்யுளின் "யாமழப்பண்ணினுற் களிப்பிக்கும் பாணன்" என்னும் பகுதியின் விசேடவுரையில் 'யாம் அழப் பண்ணினுற் களிப்பிக்குமென்றது இல்லறம் நிகழ்த்துவதற்கு உரியனவற்றைப் பாடிக்காட்டி யாம் வருந்தாதபடி பண்ணுது பரதையரிடத்தே ஒழுகுதற்கு வேண்டுவனவற்றைப் பாடிக்காட்டிக் களிப்பிப்பவனென்றவாறு எனவும் வரும் நச்சினார்க்கினியர் உரைப்பகுதியான் அறியலாகும். பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனோடு காமக்கிழத்தி 'அன்பிலன் அறனிலன்' என வெகுண்டு கூறுங்கால் அங்ஙனம் அவன் கூறப்படான் எனக் கூறி அவனது புகழைப் பாடுதலும், தலைவன்பால் பரத்தைக்குள்ள ஊடல் வேறுபடுங்கால் தூதாகச் சென்று அதனைத் தீர்த்தலும், பரத்தையரைத் தேரிலேற்றிக் கொண்டு செல்லுதலும் பாணனது தொழில்களாகும்.

## புறப்பொருட்பகுதி.

விளங்குகின்ற வாட்படையை யுடைய அரசர்கள் நண்ணிய பயிற்சித்திறனால் மண்டியபோரில் அடுதொறும் களிறினைப் பரிசாகப்பெற்ற பாணன் தண்ணுமை கொட்டு தலும் உண்டு. அது,

"ஒளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்
வெளிறில் கற்பின் மண்டம ரடுதோறுங்
களிறுபெறு வல்சிப் பாண னெறியுந்
தண்ணுமை...................." (அகம் 108)

எனவும்

"கன்றுபெறு வல்சிப் பாணன் கையதை
வள்ளுயிர்த் தண்ணுமை" (நற்றிணை 310)

எனவும் வருவனவற்றாலறியலாகும். தம்மையாதரித்த அரசர்கள் பகையரசர்களோடு பொருதுபட்டு வீழ்ந்த விடத்து அத்துன்பத்திற்காற்றாது கையகத்து யாழை முறித்து எறிதலும் உண்டு. வெட்சிவீரர் பகைவரிடமிருந்து தாம் கைப்பற்றிய ஆனிரையைப் பாணன் துடியன் முதலாயினோர்க்குப் பகிர்ந்து கொடுப்பர். பாணர்கள் தாம் பெற்ற யானைகளையும் பசுக்கூட்டங்களையும் தமக்கு அரியனவாகப் பேணாது அவற்றினைத் தாம் வாங்கும் கள்ளின் விலைக்குக் கொடுத்து விடுவர். அது

"அங்கட் கிணையன் றுடியன் விறலிபாண்
வெங்கட்கு வீசும் விலையாகும்—செங்கட்
செருச்சிலையா மன்னர் செருமுனையிற் சீறி
வரிச்சிலையாற் றந்த வளம்"

எனவும்,

"ஈண்டி யெருவை யிறகுளரும் வெங்களத்து
வேண்டியாங் கொண்ட விறல்வேலும்—வேண்டாள்
வளைகள் வயிரியம்பும் வாட்டானை வேந்தே
விளைகட் பகர்வாள் விலை"

எனவும் வரும் புறப்பொருள் வெண்பாமாலையான் அறிக. செங்களத்துச் செழுஞ் செல்வத்தை யாழ்ப்பாணர் கூறுவதுண்டு. அது 'களவழிவாழ்த்து' என்று கூறப்படும். யானையையெறிந்து பறந்தலையிற்பட்ட வீரர்க்குப் பாணர் நெருப்பை முழங்கமூட்டி விளரிப்பண்ணைப் பாடுவார்கள். இதனை,

"தளரிய றுய்புதல்வர் தாழுண ராமைக்
களரிக் கனன்முழங்க மூட்டி—*விளரிப்பண்
கண்ணினுர் பாணர் களிறெறிந்து வீழ்ந்தார்க்கு
விண்ணினுர் செய்தார் விருந்து."

(புற. வெ. 137)

என்பதனுல் அறிக. இது "பாண்பாட்டு" என்னும் துறையாகும். வாளமரின்கண்ணே பகைவர் சேனையைத் துகைத்து வலிய புலியை யொப்பப்பட்டானைப் பார்த்து யாழ்ப்பாணர் அவன் பட்டபழியைச் சொல்லுவதுமுண்டு. இதற்குரிய துறை 'கையறுநிலை' எனப்படும்.

போரிற்சிறந்தா னொருவீரன் இறந்துபட்டபொழுது உரிய கல்லை ஆராய்ந்து அதனை அவ்வீரனது உருவாக்கி

* விளரிப்பண்—இரங்கற்பண். அது 'விளரியென்பூர், விளரி இரங்கினுர் பாடும் பண்ணுதலால்—இது 'விளரிப்பண் கண்ணினுர் பாணர் என்று வந்தது போலும்.' (சிலப். அடி. நல். உரை கானல்வரி) என்பதனுல் அறிக.

அதில் அவன் பெயரும் பீடும் எழுதி நன்னீராட்டித் தூய்மை செய்து குறித்த ஒரு இடத்தில் நாட்டி அக்கல்லைத் தெய்வமாகக் கருதி அதற்குப் பெருஞ் சிறப்புச் செய்து வாழ்த்தல் பண்டைய வழக்கம். இதனை "ஆடவர் பீடும் பெயருமெழுதி யதர்தொறும்—பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்" என அகப்பாட்டில் வருவதனால் அறிக. இந்நடுகல்லினைப் பாணர் சுற்றத்தாருடனே தொழுது போவதாகப் புறப்பொருள் வெண்பாமாலையால் அறியக் கிடக்கின்றது.

பாணர் அரசர்க்கு விடியற்காலத்தே துயிலெழுமங்கலம் பாடல் வழக்கமாகும். இதனை,

"விறலியும் பாணனும் வேந்தற்குத் தில்லையிறை யமைத்த
திறலியல்யாழ் கொண்டுவந்து நின்றார்."

என்னும் திருக்கோவையாராலும் 'விறலியும் பாணனும் தில்லையிறையாலமைக்கப்பட்ட வெற்றியலும் யாழை நம் வேந்தற்குத் துயிலெழு மங்கலம் பாடக் கொண்டுவந்து நின்றார்கள்' என அதற்கெழுதிய பேராசிரியர் உரைப் பகுதியாலும் அறியலாகும்.

## பாணர் பேணப்பட்டமை.

பாணர்கள் மிகவும் வறியவர்கள். அதனால் அவர்கள் பசிமிக்க சுற்றத்தாருடனே ஓரிடத்திராமல் யாழ்களுடன் பழுமரந்தேரும் பறவைபோல வள்ளியோரை நினைந்து வழிபல கடந்து செல்வர். அவர்கள் வறுமை காரணமாகத் தம்மையே வெறுத்துக் கூறுவதுமுண்டு.

"கையது கடனிறை யாழே; மெய்யது
புரவல ரின்மையிற் பசியே; யரையது
வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்
ரோம்பி யுடுத்த வுயவற் பாண" (69)

எனவும்,

"ஆனினங் கலித்த வதர்பல கடந்து
மானினங் கலித்த மலைபின் னொழிய
மீனினங் கலித்த துறைபல நீந்தி
யுள்ளி வந்த வள்ளுயிர்ச் சீறியாழ்
சிதாஅ நுடுக்கை முதாஅரிப் பாண" (38)

எனவும் வரும் புறப்பாட்டுக்களினால் பாணரின் வறுமை நிலையும் பரிசிலரை விரும்பிச் செல்லும் முறையும் அறியப்படும்.

பண்டைத் தமிழ் அரசர்கள் பாணரின் பசியாற்றுதலையே தமது இன்றியமையாத கடமையாக மேற்கொண்டிருந்தனர். அதனால் அரசர்களைப் 'பாண்பசிப் பகைஞன்' (புறம் 180) எனவும் 'பாணர் மைதற் சுற்றத்துப் பசிப்பகை' (புறம். 212) எனவும் புலவர்கள் சிறப்பித்துப் பாடுவாராயினர். பாணர்க்கு உணவும் மதுவும் பொற்கலத்திலே வழங்கினார்கள். அதனோடமையாது தாமும் பக்கத்தே நின்று அவர்களை உண்ணப்பண்ணினார்கள். "ஊன்சோற்றமலை பாண்கடும் பருந்துஞ் செம்மல்" எனப் புறப்பாட்டில் (33) வருவதுங் காண்க.

பாணரின் உடையானது கிழிந்ததனால் பலமுறை தைக்கப்பட்டிருக்கும். அவ்வுடையை களைவித்து உயரிய பட்டாடைகளை அரசர்கள் நல்குவர். "பாசிவேரின் மா

டொடு குறைந்த, துன்னற் சிதாஅர் நீக்கித் தூய கொட்டைக் கரைய பட்டுடை நல்கி" (பொரு: 153-5) என வருதல் கண்டு அறியற்பாலது.

அரசரின் நாளோலக்கம் பாணரின்றிப் பூரணமாகாது. அதனால் அவர்கள் எப்போதும் அரசசபையில் இருப்பார்கள். ஒரு அரசனது சபையைப் 'பாணர் நாளவை' எனச் சிறப்பித்து ஒரு புலவர் கூறியுள்ளார். அரசர்களாற் பாணருக்குக் கொடுக்கப்படும் பரிசில்களுள் சிறந்தது பொற்றாமரைப் பூவாகும். இதனை,

"அழல்புரிந்த வடர்தாமரை
யைதடர்ந்த நூற்பெய்து
புனைவினைப் பொலிந்த பொலனறுந் தெரியல்
பாறுமயி ரிருந்தலை பொலியச் சூடிப்
பாண்முற் றுகநின் நாண்மகி ழிருக்கை" (புறம் 29)

எனவும்,

"எரியகைந் தன்ன வேடி றாமரை
சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி"

(பொரு: 159-60.)

எனவும் வருவனவற்றா லறியலாகும். இத்தாமரைப் பூவை பகைவருடைய யானையினது பட்டத்திற் கிடந்த பொன்னைக்கொண்டு செய்துகொடுத்தலும் உண்டு என்பது "ஒன்னார் யானை யோடைப் பொன்கொண்டு, பாணர் சென்னி பொலியத் தைஇ, வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர்" என்னும் புறப்பாட்டால் தெரிகிறது. பாணர்கள் அரசர்களாற் கொடுக்கப்பட்ட பொற் பூவைத் தாம் புனைந்து கொள்ளுங் காரணத்தால் தமது குலத்தைப் "பூப்புனை

நற்குலம்'' எனப் புகழ்ந்து பாராட்டிக்கொள்ளுவார்கள். இவ்வாறு பாராட்டும் வழக்கத்தினை "பூப்புனைய நற் குலத்துட் டோன்றிய நல்லிசையாழ்த் தொல் புலவீர்'' (பு.வெ: 31) என ஒரு பாணன் தம் சாதியினரை விழித் துக்கூறும் முறையால் அறியலாகும். பாடினி பொன் மாலையும் முத்துமாலையும் பரிசாகப் பெறுவள். "பாடு விறலியார் பல்பிடி பெறுக'' எனப் பதிற்றுப்பத்தில் வரு வதனால் விறலியர் பாடிப் பல யானைகளைப் பரிசாகப் பெற்றார்களென்பது அறியக்கிடக்கின்றது.

அரசர்கள் பாணருக்கு இவைகளேயன்றி இன்னும் அரிய பல பொருட்களையும் ஓம்பாது வீசினார்கள் போரில் வெற்றியாகப் பெறும் பொருட்களையும் அவர்களுக்கே கொடுத்து அன்னார் மிடியகற்றி வந்தனர். பகைவரது அரிய அரண் அவரிடத்ததாகவும் அதனை அழித்துக் கொள்ளுவதன் முன்னே நம்முடையதெனப் பாணர்க் குக் கடனுகக் கொடுக்கும் வென்றியோடு கூடிய வண்மை யுடையோராய் அரசர் இருந்தனர். இதனை "ஒன்னார் ஆரெயி லவர்கட்டாகவும் நுமதெனப் பாண்கடன் இறுக்கும் வள்ளியோய்'' என நெய்தலங் கானலிளஞ்சேட் சென்னியை ஊன்போதி பசுங்குடையார் என்னும் புல வர் புகழ்ந்து பாடியவாற்றான் அறிக.

"பேரியவாயினு மமர்கடந்து பெற்ற
வரியவென்னு தோம்பாது வீசி'' (44)

எனப் பதிற்றுப்பத்தினும்

அரிய வெல்லா மெளிதி னிற்கொண்
டுரிய வெல்லா மோம்பாது வீசி (145-6)

என மதுரைக்காஞ்சியிலும் வருவன கண்டு அறியற்பாலன. இவ்வாறு வரையாது பாணர்க்குக் கொடுத்தமையினாலே 'பாணர் புரவல' எனவும் 'பரிசிலர் வெறுக்கை' (பதிற். 65) எனவும் அரசர்களைப் புலவர்கள் புகழ்வாராயினர். பாணர்கள் பல பெரிய யானைகளையும் பரிசாகப் பெற்றார்கள். "பாணருவப்பக் களிறுபல தரீஇ" என மதுரைக்காஞ்சியில் வருவதுங்காண்க. இவைகளேயன்றித் தேர் குதிரை முதலியவற்றையும் பரிசாகப் பெற்றார்கள்.

பாணர்கள் தமக்குக் கிடைத்த உயர்ந்த பரிசில்களை காப்பாற்றி வைத்திராது செலவிட்டு ஒரு அரசனிடத்தினின்றும் இன்னொரு அரசனை நாடிச் செல்வார்கள். அரச சபையில் பாணன் யாழ் வாசித்துப் பாட்டுப்பாடுவான். விறலி நடனஞ் செய்வாள்.

"வண்டுபடு கூந்தன் முடிபுனை மகளிர்
தொடைபடு பேரியாழ் பாலை பண்ணிப்
பணியா மரபி னுழிஞை பாட" (பதிற். 46)

என வருவதனால் விறலியர் யாழுடன் பாடுதலுமுண்டு என்று தெரிகிறது. அரசர்கள் தங்கள் சபையிலே இருக்கக்கூடிய வசதிகள் பலவற்றைச் செய்தாலும் பாணர் ஓரிடத்திலிருப்பதில்லை. அவர்கள் மூங்கிற் கோல்கொண்டு சபையிலே செல்லுதலும் உண்டு. இவ்வழக்கத்தினை,

"மன்றம் படர்ந்து மறுகுசிறை புக்குக்
கண்டி நுண்கோல் கொண்டு களம்வாழ்த்தும்
அகவலன்..............................'(43)

என்னும் பதிற்றுப்பத்தினாலும் "வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர்" என்னும் குறுந்தொகையாலும் அறியலாகும்

தம்மினும் மிக்க பெரியோரை வழியனுப்பும்போது ஏழடி நடந்து சென்று வழியனுப்புதல் பண்டைய அறிஞர் மரபு. இம்மரபினை "எழுமேழடி யூக்கி நடந்து செலா" என்னும் சீவகசிந்தாமணியானும "ஏழடி யெழுதலாற்றா தாயினும்" என்னும் பெருங்கதையானும் அறியலாகும். பாணர்களை வழியனுப்பும்போதும் அரசர்கள் தம் காலால் நடந்து ஏழடி பின்னே சென்று வழியனுப்பினார்கள். இதனால் பாணரின் பெருமதிப்பும் அரசர்கள் அவர்களைச் சமத்துவமாகவும் அன்பாகவும் பேணிய முறையும் இனிது புலனாகும்.

## யாழ்கள்

பாணர்கள் முடியுடை வேந்தர்களாலும் குறுநில மன்னர்களாலும் நன்கு உபசரிக்கப்பட்டமைக்குக் காரணம் அவர்கள் இசைக்கலையிற் சிறந்து விளங்கியமையேயாகும். அவர்கள் தமது இசைக்கருவியாகக் கொண்டு செல்லும் யாழ்கள் இரண்டு வகைப்படும். ஒன்று பேரியாழ்; மற்றொன்று செங்கோட்டியாழ்; இவைவளில் பேரியாழ் 'பரவையாழ்' எனவும் 'பெருங்கலம்' எனவும் வழங்கப்படும். இதனை 'திருவ மேகலை தெள்ளரிக் கிண்கிணி' என்னும் சிந்தாமணிச்செய்யுளில்வரும் பரவையாழ் என்பதற்குப் பேரியாழ் என நச்சினார்க்கினியரும், சிலப்பதிகார வுரையில் பெருங்கலமாவது பேரியாழ் என அடியார்க்கு நல்லாரும் கூறியவாற்றானறிக. செங்கோட்டியாழ் சீறியாழ் எனவும்படும். இவ்விருயாழ்களின் பின்னர்த் தோன்றியவை மகரயாழ், சகோடயாழ் என்பனவாகும். இவை நான்கும் பெரும்பான்மைய; சிறுபான்மையான் வருவன பிறவுமுள; என்னை,

"பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன்
சீர்பொலியுஞ் செங்கோடு செப்பினார்—தார்பொலிந்து
மன்னுந் திருமார்ப வண்கூடற் கோமானே
பின்னு முளவே பிற"

என்றாராகலின்.

இந்நால்வகை யாழிற்கும் நரம்பு கொள்ளுமிடத்துப் பேரியாழுக்கு *இருபத்தொன்றும் மகர யாழிற்குப் பத்தொன்பதும் சகோட யாழிற்குப் பதினான்கும் செங்கோட்டி யாழிற்கு ஏழுங் கொள்ளப்படும். இதனை "ஒன்று மிருபது மொன்பதும் பத்துடனே, நின்ற பதினான்கும் பின்னேழும்—குன்றாத, நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே, மேல்வகை நூலோர் விதி" என்னுஞ் செய்யுளால் அறியலாகும்.

## பேரியாழ்

யாழ்களின் இயல்பைப் பற்றிப் பெரும்பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, மலைபடுகடாம் என்னும் செய்யுட்களிலும், சிலப்பதிகாரத்திலும் காணலாகும். பேரியாழ், அணைவற்றி உள்ளிருண்டாலொத்த இருள் செறிந்த உண்ணாக்கில்லாத வாயமைந்த நீலமணி புரைநிறலொத்த கருமை நிறமமைந்த வளைந்தேந்திய கோட்டினையும், முதற்பிறை பிறந்து வந்திருந்தாற்போன்ற பின்புறம் வந்திருக்கின்ற கவைக்கடையினையும், மகளிரின் முன்கையிலணியுங் குறிய தொடியை

* மூவேழ்துறையுமென்றது, இருபத்தொரு நரம்பாற் றொடுக்கப்படும் பேரியாழெனினு மமையும். (புறம் 152 உரை) என வருதல் கண்டு அறியற்பாலது.

யொப்ப நெகிழவேண்டிய வழி நெகிழ்ந்து இறுகவேண்டிய வழி இறுகும் திவவினையும், பொன்கம்பியாய் ஒழுகிறுலொத்த முறுக்கடங்கின நரம்பினையும், வரகின் கதிர் ஒழுகின தன்மைத்தாக நெருங்கின நுண்ணிய துளைகளை யிருத்தி, அத்துளைகள் நிரம்பும்படி சுள்ளாணிகளை இறுகத் தைத்து யானைக் கொம்பாற் செய்த யாப்பை அமையப்பண்ணி பற்றேடே கூட்டிப் போர்த்த பொன்னிறம் போலும் நிறமமைந்த தோலையுடைய ஒலித்தலமைந்த பத்தலினையும், கட்கு இனிதாய்த் தனக்குக் கூறுகின்ற அளவிலே வேறுபடாமற் பகுத்தலுண்டாக அகத்திட்ட உயர்ந்து வளர்ந்த உந்தியினையும் உடையது. பேரியாழின் தன்மையை,

> "பாசிலை யொழித்த பராஅரைப் பாதிரி
> ..............................................
> ..............................................
> தொடையமை கேள்வி" **(4-16)**

என இப்பெரும்பாணாற்றுப்படையிலும்,

> "தொடித்திரி வன்ன தொண்டுபடு திவவிற்
> கடிபகை யனைத்துங் கேள்வி போகாக்
> குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பி
> னரலை தீர வுரீஇ வரகின்
> குரல்வார்ந் தன்ன நுண்டுளை யிரீஇச்
> சிலம்பமை பத்தல் பசையொடு சேர்த்தி
> யிலங்குதுளை செறிய வாணி முடுக்கிப்
> புதுவது புனைந்த வெண்கை யாப்பமைத்துப்
> புதுவது போர்த்த பொன்போற் பச்சை
> வதுவை நாறும் வண்டுகம ழைம்பால்
> மடந்தை மாண்ட நுடங்கெழி லாகத்
> தடங்குமயி ரொழுகிய வவ்வாய் கடுப்ப

ளகடு சேர்பு பொருந்தி யளவினிற் றிரியாது
கவடுபடக் கவைஇய சென்றுவாங் குந்தி
நுணங்கர நுவறிய நுண்ணணீர் மாமைக்
களங்கனி யன்ன கதழ்ந்துகிள ருருவின் [(21-37)
வணர்ந்தேந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியாழ்’’

என மலைபடுகடாத்துள் வருவதனு லறிக. இவ்வியாழ் மூன்று தானங்களிலும் ஏழு ஸ்வரங்களை ஒலிக்கும் இருபத்தொரு நரம்புகளை உடையது.

இனி, ஆயிரங்கோல் தொடுத்தியலும் பேரியாழ் கோட்டினதளவு பன்னிரு சாணும் வண்ணரளவு சாணும் பத்தரளவு பன்னிரு சாணும் இப்பெற்றிக்கேற்ற அகலமும் திண்மையும் உந்தியும் பெற்று அமைவது. இதனை,

‘‘ஆயிர நரம்பிற் றதியா ழாகு
மேனை யுறுப்பு மொப்பன கொளலே
பத்தர தளவுங் கோட்டின தளவு
மொத்த வென்ப விருமுன் றிரட்டி
வணர்சா ணொழித்தென வைத்தனர் புலவர்’’

எனவும்,

‘‘தலமுத லூழியிற் றானவர் தருக்கறப்
புலமக ளாளர் புரிநரம் பாயிரம்
வலிபெறத் தொடுத்த வாக்கமை பேரியாழ்’’

எனவும் வருவனவற்றா லறிக.

பாணர் வலிவு மெலிவு சமமென்னும் மூன்று தானத்திலும் ஏழு ஸ்வரங்களையும் முடித்துப் பாடுவாராயினர். ஏழு ஸ்வரங்களுக்குரிய பெயர்களாவன: குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. இவற்றினை ‘‘குரலே துத்தம் கைக்கிளை யுழையிலேடே, இளி யொடு விளரி தாரம் என்பவேழிசையி னுமம்’’ என்னும்

சூடாமணி நிகண்டினாலும் அறிக. இவ்வேழு ஸ்வரங்களும் வடமொழியிலே ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்று வழங்கப்படும். இவற்றுள் முதற்றோன்றியது தாரம் என்பது. தாரத்து உழை பிறக்கும்; உழையிற் குரல் பிறக்கும்; குரலுள் இளி பிறக்கும்; இளியுள் துத்தம் பிறக்கும்; துத்தத்துள் விளரி பிறக்கும்; விளரியுட் கைக்கிளை பிறக்குமென்க. இதனை,

"தாரத்துட் டோன்று முழையுழை யுட்டோன்று
மோருங் குரல்குரலி னுட்டோன்றிச்—சேருமிளி
யுட்டோன்றுந் துத்தத்துட் றேன்றும் விளரியுட்
கைக்கிளை தோன்றும் பிறப்பு"

(சிலப்: உரை: மேற்கோள்)

என்னுஞ் செய்யுளா லறிக.

இக்குரன்முதலேழினதும் மாத்திரைகளைப் பாணர் அறிந்து யாழ் வாசிப்பாராயினர். இவற்றின் மாத்திரைகளைப் பின்வரும் பாட்டால் அறியலாகும்.

"குரறுத்த நான்கு கிளைமூன் றிரண்டாங்
குரைபா வுழையிளி நான்கு—விரையா
விளரியெனின் மூன்றிரண்டு தாரமெனச்சொன்னார்
களரு சேர் கண்ணுற் றவர்"

குரலும் துத்தமும் தனித்தனி நான்கு மாத்திரையும் கைக்கிளை மூன்று மாத்திரையும் உழை இரண்டு மாத்திரையும் இளி நான்கு மாத்திரையும் விளரி மூன்று மாத்திரையும் தாரம் இரண்டு மாத்திரையும் பெறுமாறு பாணன் சுரங்களை யாராய்ந்து 22 மாத்திரைகளைப் பாணன் ஆராய்ந்து கண்டுபிடித்தான். மாத்திரை அலகு எனவும்படும்.

யாழின்கண் காற்பிணிசையாற் பிறக்கும் பொல்லாமை யாவன: செம்பகை யார்ப்பு கூடம் அதிர்வு என்னும் நான்கு. இவற்றுள் செம்பகை தாழ்ந்தவிசை-இன்பமின் றிசைத்தல்; ஆர்ப்பு மாத்திரையிறந்த சுருதி – ஓங்க விசைத்தல்; கூடம் இசை நிறவாதது—தன் பகை நரம்பி னிசையிற் குன்றித் தன்னோசை மழுங்கல்; அதிர்வு நரம் பைச் சிதறவிசைக்கலெனக் கொள்க. இதனை,

"இவ்விசை வழிய தன்றிப் பிசைந்தகல்செம் பகைய தாகுந்
சொல்லையாக் கொணர்ந்த வோங்க விசைத்திடுஞ் சுருதி யார்ப்பே
மெல்லிய வின்னைய மாது மழுங்குதல் கூட மாகு
நல்லதாய்ச் சிதைவுற் றதிர்வென நாட்டினாரே"

என்னும் பாட்டால் அறியலாகும். செம்பகை முதலான இந்நான்கு குற்றங்களும் யாழ் செய்யப்படும் மரத்தினது குற்றத்தாலும் பிறக்குமென்க. என்னை?

'நீர்மேல் நின்ற பழுதுதல் வேத வில மயக்குத்துப்
பார்மேல் நின்ற வீடிவீழ்ந் தேய்மாய் பாற்படல்கோ
டேனிமேல் செம்பகை யார்ப்பொடு கூட மதிர்வுநிற்றல்
சேர்மேனி பக்க வசிமையாகுப் பகுந் சிற்றிடையே"

என்றாராகலின்.

பாணன் தான் பாட நினைத்த பண்ணுக்கு இளை நரம்பு கிளை நரம்பு பகை நரம்பு நட்பு நரம்பு முதலான நரம்புகள் பெயருந் தன்மை மாத்திரையை யறிந்து கட்டி, அக்கட்டிய நரம்புகளை அகவிரலாலும் புறவிரலாலும் கரணஞ்செய்து தடவிப் பார்த்து ஆரோகண அவரோகண வகையால் இசையைத் தெரிந்து அநுசுருதியேற்றி பாட நினைத்த வண்ணத்திற் சந்தத்தை விட்டு இனிமையாகப் பாடுவாராயினான்.

பாணர்கள் தாங்கள் வாசிக்கும் இனிமை மிகும் யாழைத் தெய்வமாகப் போற்றிப் புகழ்ந்து வந்தனர். கூறுவார் உண்மையைப் புலப்படுத்த வேண்டித் தாம் வழிபடு தெய்வத்தின்மேல் சூள்வைத்தல்போலப் பாணரும் தமக்குத் தெய்வமாகிய யாழின்மேல் சூள் வைத்து உண்மையைப் புலப்படுத்தி வந்தனர். இது "யாழொடு மெடுத்துச்சூள் பலவுற்ற பாணன்" என்பதற்கு 'யாழாகிய தெய்வத்தோடும் பல தெய்வங்களையுங் கூட்டிப் பல சூளும் சூளுற்ற பாணன், என்றெழுதிய நச்சினார்க்கினியர் உரையான் அறியப்படும். "பாணர் கைதொழு மரபின் முன் பரித்திடூஉப் பழிச்சிய வள்ளுயிர் வணர் மருப்பு" என்னும் அகநானூற்றடிகள் பாணர் யாழினைக் கையாற் றொழும் மரபினை இனிது புலப்படுத்தும்.

பாணர்கள் தங்கள் யாழிலே மாலையை அழகுபெறச் சுற்றுதலுமுண்டு. "நரந்தப் பல்காழ்க் கோதை சுற்றிய, வைதமை பாணி வணர்கோட்டு சீறியாழ்" எனப் புறப்பாட்டினும் "அன்ன மாலையை யாழிடைப் பிணித்தய னுலகங், கன்னி மீடலும்" எனக் கம்பராமாயணத்தும் வருவது காண்க.

யாழே பழந்தமிழ் நாட்டின் சிறந்த இசைக் கருவியாகும். இது பருந்து நிழலும்போல மிடற்றொலியை ஒருசேரத் தொடர்ந்து இசைக்கும் சிறப்பு வாய்ந்த இசைக் கருவியாகும். இத்தகைய இசைக்கருவியில் நந்தமிழ் நாடானது பெரும்புலமை வாய்ந்திருந்தது.

"குழலிலும் யாழினும் குரன் முத லேழும்
வழுவின் றிசைத்து வழித்திறம் காட்டும்
அரும் பெறன் மரபிற் பெரும்பா ணிருக்கையும்"

எனச் சிலப்பதிகாரத்தும்

"பல்வேறு பந்திப் பண்டலை சுற்றி
பழந்தூங் கிருந்த பெரும்பா ணிருக்கையும்"

என மதுரைக்காஞ்சியிலும் வருதலின் குரல் முதலா யுள்ள ஏழிசைகளையும் பண்களுக்கு இன்றியமையாத மூவேழு திறத்தையும் குற்றமின்றாக இசைத்துக் காட்ட வல்ல பெருங்கலைப் பயின்ற இசைப்பாணரை நன்கு அறிந்த பெரும் பாணர் குடியிருந்து விளங்கினர் என்பது நன்கு விளங்கும்.

இனி யாழ் என்பது வீணை எனச் சிற்சில இடங்களில் வழங்கப்படுதலின் யாழ்வேறு வீணைவேறு என்றறிக. "நாரதன் வீணை நயந்தெரி பாடலும்" (சிலப். 6; 18) என்பதில் வீணை என்பதற்கு யாழ் என அடியார்க்கு நல்லார் பொருளுரைத்தமை காண்க. யாழ்வேறு வீணைவேறு என்பதை "இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்" என்னும் திருவாசகத்தும் "மேவு குழல் விளிகொள் நல் யாழ் வீணையென் றினைய நாண" எனக் கம்பராமாயணத்தும் வருவனவற்றானறிக.

## பெரும்பாணாற்றுப்படையின் இயல்பு

பல்லாயிரம் ஆண்டுகளாக நம் தமிழ்மொழியானது முச்சங்கங்களாலும் வளர்க்கப்பெற்று வந்தது. சங்கத்தி லிருந்து தமிழாராய்ந்த தண்டா நல்லிசைத் தண்டமிழ்ப் புலவர்கள் பல்லாயிரவராவர். அவர்களால் இயற்றப்பெற்ற முத்தமிழ் நூல்கள் எண்ணில்லாதன. அவற்றில் அழிந் தொழிந்தன பல. இற்றைநான்று அழியாது நின்று நிலவுவன சில. அவை: தொல்காப்பியம் இறையனாரகப் பொருள் முதலிய இலக்கண நூல்களும் பத்துப்பாட்டு எட்டுத்தொகை பதினெண்கீழ்க் கணக்கு என்னும் இலக் கிய நூல்களுமேயாம்.

பத்துப்பாட்டு எட்டுத்தொகை என்பன பற்பல புலவர்கள் பாடிய பாட்டுக்களின் தொகை நூல்களாகும். இவற்றுள் பத்துப் பாட்டு என்பது நூற்றின் மிக்க அடிகளையுடைய பத்துச் செய்யுளின் தொகுதியாகும். அவை: திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பனவாகும். இவற்றின் பெயரும் முறையும் "முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை, பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய, கோல நெடு நல்வாடை கோல் குறிஞ்சி பட்டினப், பாலைகடாத் தொடும் பத்து" என்னும் செய்யுளினால் அறியலாகும். இப்பத்துப் பாட்டுக்களும் நக்கீரர் முதலாய நல்லிசைப் புலவர் எண்மரால் இயற்றப் பெற்றன. இவை சொல் வளம் பொருள்வளம் மிக்கு கற்போர் நெஞ்சம் கவர்ந்து விளங்குவன. அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கனுள் ஒரோவொன்று நுதலியன. இவற்றின் அருமை பெருமையைக் கண்ட சங்கப் புலவர்கள் இப்பத்தினையும் ஒன்றாகத் தொகுப்பாராயினர். இது மலைபடு கடாத்தில் 'தீயினன்ன வொண்செங் காந்தள்' என்பதன் விசேட வுரையில் 'இவர் செய்த செய்யுளை நல்லிசைப் புலவர் செய்த ஏனைச் செய்யுட்களுடன் சங்கத்தார் கோவாமல் நீக்குவர்; அங்ஙனம் நீக்காது கோத்தற்குக் காரணம் ஆனந்த குற்றமென்பதொரு குற்றம்- இச்செய்யுட்கு உறாமையா னென்றுணர்க' என நச்சினார்க்கினியர் எழுதியவாற்றான் அறியப்படும். இவற்றினை "தமிழ்ச் சங்கத்தின் நிறை பெற் றுயர் பத்துப்பாட்டும்" (பாண்டிமண்டல சதகம்) எனவும் "ஆன்றோர் புகழ்ந்த அறிவினிற் றெரிந்து, சான்றோ ருரைத்த தண்

டமிழ்த் தெரியல், ஒருபது பாட்டும்" (நச்சினார்க்கினியர் உரைச் சிறப்புப்பாயிரம்) எனவும் ஆன்றோர்கள் பாராட்டி யிருத்தல் காண்க.

இப்பத்துப் பாட்டின்கண் முல்லை குறிஞ்சி பட்டினப்பாலை என்பன அகத்திணைக்குரியன. ஏனையவை புறத்திணைக்குரியன. அவற்றுள் ஐந்து ஆற்றுப்படை யென்னும் புறப்பொருட்டுறை பற்றியன.

ஆற்றுப்படை யென்பது: கூத்தர் முதலாயினருள் ஒருவர் கொடையாளி யொருவனிடத்துத் தாம் பெற்ற பொன்னும் மணியும் முத்தும் யானையும் குதிரையும் தேரும் நாடும் என்று இப்பெற்றிய பெருஞ்செல்வத்தை, எதிர்வந்த இரவலர்க்கு அறிவுறுத்தி அவரும் அக்கொடையாளிபால் தாம் பெற்றவையெல்லாம் பெறுமாறு வழிப்படுத்தல்.

இங்ஙனம் ஒவ்வொருவரும் தாம் பெற்ற பெருஞ்செல்வத்தை எதிர்வந்த இரவலர்க்கு அறிவுறுத்தி ஆற்றுப்படுத்தற்கு உரியராயினும் கூத்தர் முதலியோரே எதிர்வந்த கூத்தர் முதலியோர்க்குக் கூறி அவர்களை வழிப்படுத்தியதாகச் செய்யுள் செய்தல் கவிமரபு. இம்முறை பற்றிச் செய்யுள் செய்தற்கு விதி: தொல்காப்பியப் புறத்திணையியலில் உள்ள "தாவினல்லிசை" என்னும் சூத்திரத்து,

"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறார்க் கறிவுறீஇச்
சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்"

என்னும் பகுதியாகும். ஆடன் மாந்தரும் பாடற் பாண

ரும் கருவிப் பொருநரும் இவருட் பெண்பாலாகிய விற லியுமென்னும் நாற்பாலாரும், தாம் பெற்ற பெருஞ்செல் வத்தை எதிர்வந்த வறியோர்க்கு அறிவுறுத்தி அவரும் ஆண்டுச் சென்று தாம் பெற்றவையெல்லாம் பெறுமாறு கூறிய கூறுபாடும் என்பது இதன் பொருளாகும்.

"புரவலன் பரிசில் கொண்டு மீண்ட
இரவலன் வெயிறெறு மிருங்கா னகத்திடை
வறுமை யுடன்வருஉம் புலவர் பாணர்
பொருநர் விறலியர் கூத்தர்க் கண்டப்
புரவல னூர் பெயர்கோடை பராஅய்
ஆங்குநீ செல்கென விடுப்பதாற் றுப்படை"

என்னும் பன்னிரு பாட்டியற் சூத்திரமும் ஆற்றுப்படை இன்னதென்பதை இனிது விளக்கும். இங்ஙனம் இயற் றப்பெற்றவை கூத்தராற்றுப்படை, பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, விறலியாற்றுப்படை என்று வழங் கப்படும். இவ்வாற்றுப்படைகளை புறநானூறு பதிற்றுப் பத்து முதலாய பழந்தமிழ் நூல்களிற் காண்க.

இனி, பெரும்பாணாற்றுப்படை யென்பது: பரிசில் பெறவேண்டிய பெரும்பாணன் ஒருவனைப் பரிசில் பெற் றுனொருவன் காஞ்சி நகரத்திற் செங்கோல் செலுத்திக் கொண்டிருந்த தொண்டைமான் இளந்திரையனிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அவ்விளந்திரையனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய செய்யுள் என்க. இது பாணாறு எனவும் வழங்கும். இது பரிசில் வேண்டிய பாண்மக னொருவனைப் பரிசில் பெற்றானொருவன் அது வழங்குதற்குரியன் இன்னன் என்று ஆற்றுப்படுத்துத லின் மக்கட் பகுதியான பாடாண் பாட்டென்க.

## இப்பாட்டின் பொருட் சுருக்கம்.

தான் வறுமையுற்றிருந்து தொண்டைமான் இளந்திரையனிடத்தே சென்று பல்லாறு உபசரிக்கப் பெற்றுப் பெருவளம் பெற்ற ஒரு பாணன், யாழை இடத்தோட் பக்கத்தே அணைத்துப் புரப்பாரைப் பெறாமையால் பசி மிக்க சுற்றத்தாரோடு ஓடித்திரிபவன் அலைந்து திரிய வருகி வழியிடையே தன்னை எதிர்ப்பட்ட வேறொரு பெரும்பாணனை நோக்கிப் பாணனே! தொன்றுதொட்ட பசிமிக்க ஆர்ப்புடைய சுற்றத்தோடே யாங்கள் பிறர்க்குக் கொடுக்கும்படியாக பெருஞ் செல்வத்தோடு குதிரைகளையும் யானைகளையும் பரிசிற்கொண்டு இளந்திரையனிடத்தினின்றும் வாராநின்றோம். நீயிரும் அறம்புரியும் செங்கோலினையுடைய அத்திரையனிடத்தே செல்வீராயின் நும்பால் அவலம் கெடுவதாக. இரவல! அவன் தன்மையைச் சொல்லுவேன் கேட்பாயாக.

அவனாற் காக்கப்படும் காட்டில் வழிச்செல்வோரின் பொருளை வௌவும் கொடுமையோரில்லை. அவன் காட்டில் உருமேறும் இடியாது; அரவும் கொல்லுதலைச் செய்யா. புலி முதலியனவும் துன்பஞ் செய்யா. ஆதலின் அக்காட்டிலே இளைத்தவிடத்தே இளைப்பாறியும் உங்களை விரும்பினோரிடத்தே தங்கியுஞ் செல்வாயாக. அங்ஙனஞ் செல்லுங்கால் காட்டுவழியில் எயினர் குடியிருப்பிலே தங்குவீராயின் எயிற்றியர் அரியாது ஆக்கின சோற்றை வாடூனுடன் தேக்கிலையிலேயிட ஆர்ப்புடைய சுற்றத்தாருடனே பெறுகுவிர்.

பின்னர் தறுகண்மையையுடைய கானவர் வதியும் பாலைநிலத்தைக் கடந்து எயினர் குறும்பிற் சேப்பின் மேட்டு நிலத்தே விளைந்த நெற்சோற்றை உடும்பினது பொரியலோடே மனைதோறும் பெறுகுவிர்; பின்னர் யானை தாக்கினும் அரவு மேற்செலினும் இடி

யேறு சிலேப்பினும் அஞ்சாத வீரக்குடிமகள் வதியும் குறிஞ்சி நிலத்தை அடைவீர்கள். அந்நிலத்துத் தலைவன் பகைவருடைய காவல் பொருந்திய நிலத்தே சென்று அவர் கள் பசுக்களை அடித்துக்கொண்டு போந்து அவற்றைக் கள் ளுக்கு விலையாகப் போக்கிப் பின் நெல்லாற் செய்த கள்ளை யுண்டு கிடாயை அறுத்துத் தின்று மத்தளம் முழங்க பகற்பொழுதிலே ஆடும் முரண்டலே யிருக்கை கழிந்து முல்லை நிலத்து இடையர் குடியிருப்பினை அடைவீர்கள். அங்கே ஆய்மகள் வைகறையில் எழுந்து இனிய தயிரைக் கடைந்து மோரையும் வெண்ணெயையும் விற்கக் கொண்டு செல்வள். மோர் விலையால் சுற்றத்தாரை அருத்துவள். நெய்விலைக்கு பால் எருமையையும் பசுவையும் எருமை நாகினையும் பெறுவள். அங்கு தங்குவீராயின் தினையரிசிச் சோற்றைப் பாலுடனே பெறுகுவிர். இதனைக் கடந்து சென்று முல்லைநிலத்து உழுதுண்பாரிருப்பிலே தங்குவீ ராயின் வரகினது சிறிய சோற்றை அவரை விதையி னது நன்றாகிய பருப்பை மிக இட்டுக் கலத்தலினாலே சுவைமிக்க கூழலொடு பெறுகுவிர். இக்குடியிருப்பினைக் கடந்து செல்வீர்களாயின் உழவர் குடியிருப்புத் தோன் றும்; அதனைக் கடந்து போனபின்பு பல்வகை வளனுஞ் செறிந்த மருதநிலஞ் சூழ்ந்த பெரிய ஊரின்கண்ணே தங்கின் வெள்ளிய நெற்சோற்றை கோழிப்பெடையினாற் சமைத்த பொரியலொடு பெறுகுவிர்; பின்னர்க் கரும் பஞ் சாற்றைக் காய்ச்சும் புகை சூழ்ந்த ஆலை தோன்றும். அங்கே கரும்பின்சாற்றை விரும்பினிர் மிசைமின்; அப் பாற் சென்றால் வலைஞர் குடியிருப்புத் தோன்றும்; அங்கே தங்குவீராயின், வலிய சாடியின் கண்ணே இளமை யறும் படிமுற்றின நறிய கள்ளை உலராத மீனைச் சுட்டதனோடே பெறுகுவிர்; பின்னர் நெடிய குளத்திலே கடவுள் சூடு

தற்குரிய தாமரைப் பூவைப் பறித்து முடித்தலைப் பரிகரித்துப் பொய்கைகளிடத்தே பறிப்பார் நுங்களுக்கிட்ட விரித்த பல பூக்களை காட்டகத்தே சூடிப் போமின்; பின்னர் அந்தணர் உறைகின்ற ஊரிடத்தே தங்குவீராயின் பார்ப்பனி பதமறிந்து அட்டனவற்றை ஞாயிறு பட்ட காலத்தே சோறு கறியோடே பெறுகுவிர்; அவ்விடத்தினின்றும் அப்பால் சென்று நீர்ப்பெயற்றென்னும் ஊரின் எல்லையிலே போய், மரக்கலங்கள் சூழ்ந்து கிடக்கின்ற கடற்பக்கத்தினையும் மிகவுயர்ந்த பண்டசாலைகளையும் உடையதும் மாடத் துறையும் மகளிர் பந்தையடித்து இளைத்து பின் பொற்கழங்காடுவதும் ஆகிய பட்டினத்திடத்தே இளைப்பாறுவீராயின் ஆண் பன்றியின் நிணத்தசையொடு களிப்பு மிக்க கள்ளைப் பெறுகுவிர்; பின்னர் தோப்புக் குடிகளின் முட்டில்லாத மனைகளிலே தங்கின் பலாப்பழத்தையும் இளநீரையும் வாழைப்பழத்தையும் நுங்கினையும் கிழங்கினையும் தின்பீர்.

இவற்றை இவ்வழியின்கண்ணே பெற்றுப் பின்னர் பல மரங்கள் வளர்ந்த நீண்ட வழியாகப் போய்ப் புறநாடுகள் பலவற்றையுங் கழிந்தபின்பு பாம்பணையாகிய படுக்கையிலே துயில்கொண்ட திருமாலினுடைய திருவெஃகாவிடத்துப் பொழில்தொறும் மகளிரோடே பகல் விளையாடிப் பூ மிகுகின்ற பெரிய துறையிடத்தே இளவேனிற் செவ்வியை நுகர்வாரோடு இளைப்பாறி அத்திருமாலை வாழ்த்தி நும்முடைய யாழைச் சிறிது வாசித்து அவ்விடத்தினின்றும் போமின்.

இங்ஙனஞ் சென்று, துரியோதனன் முதலிய நூற்றுவரும் களத்திற் படும்படி பெரிய போரை வென்ற தருமன்போல அடங்காத்தானையொடு வந்த பகைவர் தோற்

விடத்தே ஆரவாரித்து கைவண்மையையுடைய தலைவன் காஞ்சிபுரத்தின்கண்ணே இருக்கின்றான். அவனைக் குறுகி

"புலவர் பூண்கட னாற்றிப் பகைவர்
கடிமதி லெறிந்து குருமி கொள்ளும்
வென்றி யல்லது வினையுடம் படினு
மொன்றல் செல்லா வுரவுவாட் டடக்கைக்
கொண்டி யுண்டித் தொண்டையோர் மருக
மள்ளர் மள்ள மறவர் மறவ
செல்வர் செல்வ செருமேம் படுந
வெண்டிரைப் பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற
பைம்பூட் சேஎய் பயந்தமா மோட்டுத்
துணங்கையஞ் செல்விக் கணங்குநொடித் தாங்குத்
தண்டா வீகைநின் பெரும்பெய ரேத்தி
வந்தேன் பெரும வாழிய நெடிதென"

கூறிப் பெரியாழை முறையாக வாசித்து, கையாற் றொழுது வாழ்த்தி நிற்க நின்னுடைய கலைகளெல்லாம் தெரிவதற்கு முன்னமே மலைகிழவோன் யாக்கையும் செல்வமும் முதலியன நில்லாத உலகத்திலே நிலைபேறுடைய புகழைப் பெறுதல் நன்றென்று ஆராய்ந்து தன்னை அணுகுதற்கு அழைத்து நுமது சிதரின சீலையைப் போக்கிப் பாலாவி போன்ற பைந்துகிலைச் சுற்றத்தாரோடு உடுக்கப்பண்ணிக் கொழுவிய தசைகளும் இடை முரியாத சோறும் பிறவுமாகிய அடிசிலைக் கலங்களிற் பரப்பித் தான் முன்னின்றூட்டி விறலியர் பொன்மாலையைச் சூடாநிற்க நுமக்குப் பொற்றாமரையை கரியமயிரிடத்தே அழகுபெறச் சூட்டி அரியதேர் நல்கியும் அமையானாய்க் குதிரை முதலான பிற பரிசில்களையும் நீ சென்ற அற்றைநாளே தருவான் என்க.

உருத்திரங்கண்ணனார்

இயற்றிய

# பெரும்பாணாற்றுப்படை.

அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி
காய்சினந் திருகிய கடுந்திறல் வேனிற்
பாசிலை யொழித்த பராஅரைப் பாதிரி
வள்ளிதழ் மாமலர் வயிற்றிடை வகுத்தத
னுள்ளகம் புரையு மூட்டுறு பச்சைப்
பரியரைக் கமுகின் பாளையம் பசும்பூக்
கருவிருந் தன்ன கண்கூடு செறிதுளை
யுருக்கி யன்ன பொருத்துறு போர்வைச்
சுனைவறந் தன்ன விருடூங்கு வறுவாய்ப்
பிறைபிறந் தன்ன பின்னேந்து கவைக்கடை
நெடும்பணைத் திரடோண் மடந்தை முன்கைக்
குறுந்தொடி யேய்க்கு மெலிந்துவீங்கு திவவின்
மணிவார்ந் தன்ன மாயிரு மருப்பிற்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
றொடையமை கேள்வி யிடவயிற் றழீஇ
வெந்தெறற் கனலியொடு மதிவலந் திரிதருந்
தண்கடல் வரைப்பிற் றாங்குநர்ப் பெறாது
பொழிமழை துறந்த புகைவேய் குன்றத்துப்
பழுமரந் தேரும் பறவை போலக்
கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்
புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாண
பெருவறங் கூர்ந்த கானங் கல்லெனக்

கருவி வானந் துளிசொரிந் தாங்குப்
பழம்பசி கூர்ந்தவெம் மிரும்பே ரொக்கலொடு
வழங்கத் தவாஅப் பெருவள னெய்தி[கொண்
வாலுளைப் புரவியொடு வயக்களிறு முகந்து
டியாமவ ணின்றும் வருதும் நீயிரு
மிருநிலங் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன் * பிறங்கடை யந்நீர்த்
திரைதரு மரபி னுரவோ னும்பன்
மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கு
முரசுமுழங்கு தானை மூவ ருள்ளு
மிலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்
வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பி
னல்லது கடிந்த வறம்புரி செங்கோற்
பல்வேற் றிரையற் படர்குவி ராயிற்
கேளவ னிலையே கெடுகநின் னவல
மந்தஞ் செலவோ ரலறத் தாக்கிக்
கைப்பொருள் வௌவுங் களவேர் வாழ்க்கைக்
கொடியோ ரின்றவன் கடியுடை வியன்புல
முருமு முரறு தரவுந் தப்பா
காட்டுமாவு முறுகண் செய்யா வேட்டாங்
கசைவுழி யசைஇ நசைவுழித் தங்கிச்
சென்மோ விரவல சிறக்கநின் னுள்ளங்
கொழுஞ்சூட் டருந்திய திருந்துநிலை யாரத்து
முழவி னன்ன முழுமர வுருளி
யெழூஉப்புணர்ந் தன்ன பரூஉக்கைநோன் பார்
மாரிக் குன்ற மழைசுமந் தன்ன
வாரை வேய்ந்த வறைவாய்ச் சகடம்
வேழங் காவலர் குரம்பை யேய்ப்பக்

* புறங்கடை என்பதும் பாடம்.

கோழி சேக்குக் கூடுடைப் புதவின்
முளையெயிற் றிரும்பிடி முழந்தா ளேய்க்குந்
துளையரைச் சிறார றூங்கத் தூக்கி
நாடக மகளி ராகளத் தெடுத்த
விசிவீங் கின்னியங் கடுப்பக் கயிறுபிணித்துக்
காடி வைத்த கலனுடை மூக்கின்
மகவுடை மகடூஉப் பகடுபுறந் துரப்பக்
கோட்டினர் வேம்பி னோட்டிலை மிடைந்த
படலைக் கண்ணிப் பரேரெறுழ்த் திணிதோண்
முடலை யாக்கை முழுவலி மாக்கள்
சிறுதுளைக் கொடுநுக நெறிபட நிரைத்த
பெருங்கயிற் றொழுகை மருங்கிற் காப்பச்
சில்பத வுணவின் கொள்ளை சாற்றிப்
பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி
யெல்லிடைக் கழியுநர்க் கேம மாக
மலையவுங் கடலவு மாண்பயந் தரூஉ [ன்றா
மருப்பொரு ளருத்துந் திருந்துதொடை நோ
ளடிபுதை யரண மெய்திப் படம்புக்குப்
பொருகணை தொலைச்சிய புண்டேர் மார்பின்
விரவுவரிக் கச்சின் வெண்கை யொள்வாள்
வரையூர் பாம்பிற் பூண்டுபுடை தூங்கச்
சுரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவுடைக்
கருவி லோச்சிய கண்ணக னெறுழ்த்தோட்
கடம்பமர் நெடுவே ளன்ன மீளி
யுடம்பிடித் தடக்கை யோடா வம்பலர்
தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட
சிறுசுளைப் பெரும்பழங் கடுப்ப மிரியற்
புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்

தணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கு
முல்குடைப் பெருவழி கவலை காக்கும்
வில்லுடை வைப்பின் வியன்காட் டியவி
னீளரை யிலவத் தலங்குசினை பயந்த
பூளையம் பசுங்காய் புடைவிரிந் தன்ன
வரிப்புற வணிலொடு கருப்பை யாடா [மடல்
தியாற்றறல் புரையும் வெரிநுடைக் கொழு
வேற்றலை யன்ன வைநுதி நெடுந்தக
ர்த்திலை வேய்ந்த வெய்ப்புறக் குரம்பை
மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி
யீன்பிண வொழியப் போகி நோன்கா
ழிரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோ
லுளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி
யிருநிலக் கரம்பைப் படுநீ றாடி
நுண்பு லடக்கிய வெண்ப லெயிற்றியர்
பார்வை யாத்த பறைதாள் விளவி
னீழன் முன்றி னிலவுரற் பெய்து
குறுங்கா ழுலக்கை யோச்சி நெடுங்கிணற்று
வல்லூற் றுவரி தோண்டித் தொல்லை
முரவுவாய்க் குழிசி முரியடுப் பேற்றி
வாரா தட்ட வாடூன் புழுக்கல்
வடாத் தும்பை வயவர் பெருமக
னோடாத் தானை யொண்டொழிற் கழற்காற்
செவ்வரை நாடன் சென்னிய மெனினே
தெவ்வ மடையிற் றேக்கிலைக் குவைஇ நும்
பைதீர் கடும்பொடு பதமிகப் பெறுகுவிர்
மானடி பொறித்த மயங்கதர் மருங்கின்
வான்மடி பொழுதி னீர்நசைஇக் குழித்த
வகழ்சூழ் பயம்பி னகத்தொளித் தொடுங்கிப்

புகழா வாகைப் பூவி னன்ன
வளைமருப் பேனம் வரவுபார்த் திருக்கு
மரைநாள் வேட்ட மழுங்கிற் பகனுட்
பகுவாய் ஞமலியொடு பைம்புத லெருக்கித்
தொகுவாய் வேலித் தொடர்வலை மாட்டி
முள்ளரைத் தாமரைப் புல்லிதழ் புரையு
நெடுஞ்செவிக் குறுமுயல் போக்கற வளைஇக்
கடுங்கட் கானவர் கடறுகூட் டுண்ணு
மருஞ்சுர மிறந்த வம்பர்ப் பருந்துபட
வொன்னாத் தெவ்வர் நடுங்க வோச்சி
வைநுதி மழுங்கிய புலவுவா யெஃகம்
வடிமணிப் பலகையொடு நிரைஇ முடிநாட்
சாபஞ் சார்த்திய கணைதுஞ்சு வியனக
ரூகம் வேய்ந்த வுயர்நிலை வரைப்பின் [யொடு
வரைத்தேன் புரையுங் கவைக்கடைப் புதை
கடுந்துடி தூங்குங் கணைக்காற் பந்தர்த்
தொடர்நா யாத்த துன்னருங் கடிநகர்
வாழ்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பைக்
கொடுநுகந் தழீஇய புதவிற் செந்நிலை
நெடுநுதி வயக்கழு நிரைத்த வாயிற்
கொடுவி லெயினக் குறும்பிற் சேப்பிற்
களர்வள ரீந்தின் காழ்கண் டன்ன
சுவல்விளை நெல்லின் செவ்வவிழ்ச் சொன்றி
ஞமலி தந்த மனவுச்சூ லுடும்பின்
வறைகால் யாத்தது வயின்றொறும் பெறுகுவிர்
யானை தாக்கினு மரவுமேற் செலினு
நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினுஞ்
சூன்மகண் மாறா மறம்பூண் வாழ்க்கை
வலிக்கூட் டுணவின் வாட்குடிப் பிறந்த

புலிப்போத் தன்ன புல்லணற் காளை
சென்னா யன்ன கருவிற் சுற்றமொடு
கேளா மன்னர் கடிபுலம் புக்கு
நாளா தந்து நறவுநொடை தொலைச்சி
யில்லடு கள்ளின் றோப்பி பருகி
மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி
மடிவாய்த் தண்ணுமை நடுவட் சிலைப்பச்[உப்
சிலைநவி லெறுழ்த்தோ ளோச்சி வலன்வளையூ
பகன்மகிழ் தூங்குந் தூங்கா விருக்கை
முரண்டலை கழிந்த பின்றை மறிய
குளகரை யாத்த குறுங்காற் குரம்பைச்
செற்றை வாயிற் செறிகழிக் கதவிற்
கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பி
னதளோன் றுஞ்சுங் காப்பி னுதள
நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றிற்
கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கு
மிடுமுள் வேலி யெருப்படு வரைப்பி
னன்னிருள் விடியற் புள்ளெழப் போகிப்
புலிக்குரன் மத்த மொலிப்ப வாங்கி
யாம்பி வான்முகை யன்ன கூம்புமுகி
ழுறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து
புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட் டிரீஇ
நாண்மோர் மாறு நன்மா மேனிச்
சிறுகுழை துயல்வருங் காதிற் பணைத்தோட்
குறுநெறிக் கொண்ட கூந்த லாய்மக
ளளைவிலை யுணவிற் கிளையுட னருத்தி
நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளா
ளெருமை நல்லான் கருநாகு பெறூஉ
மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பி

னிருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப் பன்ன
பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்
தொடுதோன் மரீஇய வடுவாழ் நோனடி
விழுத்தண் டூன்றிய மழுத்தின் வன்கை
யுறிக்கா லூர்ந்த மறுப்படு மயிர்ச்சுவன்
மேம்பா லுரைத்த வோரி யோங்குமிசைக்
கோட்டவுங் கொடியவும் விரைஇக் காட்ட
* பல்பூ மிடைந்த படலைக் கண்ணி
யொன்றம ருடுக்கைக் கூழா ரிடையன்
கன்றமர் நிரையொடு கானத் தல்கி
யந்நுண விர்புகை கமழக் கைம்முயன் று
ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழிச்
செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலி
னின்றீம் பாலை முனையிற் குமிழின்
புழற்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்
வில்யா ழிசைக்கும் விரலெறி குறிஞ்சிப்
பல்காற் பறவை கிளைசெத் தோர்க்கும்
புல்லார் வியன்புலம் போகி முள்ளுடுத்
தெழுகா டோங்கிய தொழுவுடை வரைப்பிற்
பிடிக்கணத் தன்ன குதிருடை முன்றிற்
களிற்றுத்தாள் புரையுந் திரிமரப் பந்தர்க்
குறுஞ்சாட் டுருளையொடு கலப்பை சார்த்தி
நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழ் கொட்டிற்
பருவ வானத்துப் பாமழை கடுப்பக்
கருவை வேய்ந்த கவின்குடிச் சீறூர்
நெடுங்குரற் பூளைப் பூவி னன்ன
குறுந்தாள் வரகின் குறளவிழ்ச் சொன்றிப்
புகரிணர் வேங்கை வீகண் டன்ன

* பன்மலர் மிடைந்த என்பதும் பாடம்.

வவரை வான்புழூக் கட்டிப் பயில்வுற்
றின்சுவை மூரற் பெறுகுவிர் ஞாங்கர்க்
குடிநிறை வல்சிச் செஞ்சா லுழவர்
நடைநவில் பெரும்பகடு புதவிற் பூட்டிப்
பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சி
லுடுப்புமுக முழுக்கொழு மூழ்க வூன்றித்
தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை
யரிபுகு பொழுதி னிரியல் போகி
வண்ணக் கடம்பி னறுமல ரன்ன
வளரிளம் பிள்ளை தழீஇக் குறுங்காற்
கறையணற் குறும்பூழ் கட்சிச் சேக்கும்
வன்புல மிறந்த பின்றை மென்றோன்
மிதியுலைக் கொல்லன் முறிகொடிற் றன்ன
கவைத்தா ளலவ னளற்றளை சிதையப்
பைஞ்சாய் கொன்ற மண்படு மருப்பிற்
காரேறு பொருத கண்ணகன் செறுவி
னுழாஅ நுண்டொளி நிரவிய வினைஞர்
முடிநா றழுத்திய நெடுநீர்ச் செறுவிற்
களைஞர் தந்த கணைக்கா னெய்தற்
கட்கமழ் புதுப்பூ முனையின் முட்சினை
முகைசூழ் தகட்ட பிறழ்வாய் முள்ளிக்
கொடுங்கான் மாமலர் கொய்துகொண் டவண
பஞ்சாய்க் கோரை பல்லிற் சவட்டிப்
புணர்நார்ப் பெய்த புனைவின் கண்ணி
யீருடை யிருந்தலை யாரச் சூடிப்
பொன்காண் கட்டளை கடுப்பக் கண்பின்
புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பி
னிரும்புவடித் தன்ன மடியா மென்றோற்
கருங்கை வினைஞர் காதலஞ் சிறாஅர்

பழஞ்சொற் றமலை முனைஇ வரம்பிற்
புதுவை வேய்ந்த கவிகுடின் முன்றி
லவலெறி யுலக்கைப் பாடுவிறந் தயல
கொடுவாய்க் கிள்ளை படுபகை வெரூஉ
நீங்கா யாணர் வாங்குகதிர்க் கழனிக்
கடுப்புடைப் பறவைச் சாதி யன்ன
பைதற விளைந்த பெருஞ்செந் நெல்லின்
றும்புடைத் திரடா துமித்த வினைஞர்
பாட்புறை மருதி னோங்குசினை நீழற்
பலிபெறு வியன்கள மலிய வேற்றிக்
கணங்கொள் சுற்றமொடு கைபுணர்ந் தாடுந்
துணங்கையம் பூதந் துகிலுடுத் தவைபோற்
சிலம்பி வானூல் வலந்த மருங்கிற்
குழுமுநிலைப் போரின் முழுமுத றொலைச்சிப்
பகடூர் பிழிந்த பின்றைத் துகடப
வையுந் துரும்பு நீக்கிப் பைதறக்
குடகாற் றெறிந்த குப்பை வடபாற்
செப்பொன் மலையிற் சிறப்பத் தோன்றுந்
தண்பணை தழீஇய தளரா விருக்கைப்
பகட்டா வீன்ற கொடுநடைக் குழவிக்
கவைத்தாம்பு தொடுத்த காழூன் றல்கு
லேணி யெய்தா நீணெடு மார்பின்
முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவிற்
குமரி மூத்த கூடோங்கு நல்லிற்
றச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த
ஊரா நற்றே ருருட்டிய புதல்வர்
தளர்நடை வருத்தம் வீட வலர்முலைச்
செவிலியம் பெண்டிர்த் தழீஇப் பாலார்ந்
தமளித் துஞ்சு மழகுடை நல்லிற்

றெழில்பசி யறியாத் துளங்கா விருக்கை
மல்லற் பேரூர் மடியின் மடியா
வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி
மனைவா ழளகின் வாட்டொடும் பெறுகுவிர்
மழைவிளை யாடுங் கழைவள ரடுக்கத்
தணங்குடை யாளி தாக்கலிற் பலவுடன்
கணஞ்சால் வேழங் கதழ்வுற் றாஅங்
கெந்திரஞ் சிலைக்குந் துஞ்சாக் கம்பலை
விசய மடூஉம் புகைசூ ழாலைதொறுங்
கரும்பின் றீஞ்சாறு விரும்பினிர் மிசைமின்
வேழ நிரைத்து வெண்கோடு விரைஇத்
தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த
குறியிறைக் குரம்பைப் பறியுடை முன்றிற்
கொடுங்காற் புன்னைக் கோடுதுமிந் தியற்றிய
பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்த
ரிளையரு முதியருங் கிளையுடன் துவன்றிப்
புலவுநுனைப் பகழியுஞ் சிலையு மானச்
செவ்வரிக் கயலொடு பச்சிறாப் பிறழு
மையிருங் குட்டத்து மகவொடு வழங்கிக்
கோடை நீடினுங் குறைபட லறியாத்
தோடாழ் குளத்த கோடுகாத் திருக்குங்
கொடுமுடி வலைஞர் குடிவயிற் சேப்பி
னவையா வரிசி யங்களித் துழவை
மலர்வாய்ப் பிழாவிற் புலர வாற்றிப்
பாம்புறை புற்றிற் குரும்பி யேய்க்கும்
பூம்புற நல்லடை யளைஇத் தேம்பட
வெல்லையு மிரவு மிருமுறை கழிப்பி
வல்வாய்ச் சாடியின் வழைச்சற விளைந்த
வெந்நீ ரரியல் விரலலை நறும்பிழி

தண்மீன் சூட்டொடு தளர்தலும் பெறுகுவிர்
பச்சூன் பெய்த சுவல்பிணி பைந்தோற்
கோள்வல் பாண்மகன் றலைவலித் தியாத்த [இக்
நெடுங்கழைத் தூண்டி னடுங்க நாண்கொளீ
கொடுவா யிரும்பின் மடிதலை புலம்பப்
பொதியிரை கதுவிய போழ்வாய் வாளை
நீர்நணிப் பிரம்பி னடுங்குநிழல் வெரூஉ
நீத்துடை நெடுங்கயந் தீப்பட மலர்ந்த
கடவு ளொண்பூ வடைத லோம்பி
யுறைகான் மாறிய வோங்குயர் நனந்தலை
யகலிரு வானத்துக் குறைவி லேய்ப்ப
வரகிதழ்க் குவளையொடு நீல நீடி
முரட்பூ மலிந்த முதுநீர்ப் பொய்கைக்
குறுந ரிட்ட கூம்புவிடு பன்மலர்
பெருநா ளமையத்துப் பிணையினிர் கழிமின்
செழுங்கன் றியாத்த சிறுதாட் பந்தர்ப்
பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்
மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது
வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்று
மறைகாப் பாள ருறைபதிச் சேப்பிற்
பெருநல் வானத்து வடவயின் விளங்குஞ்
சிறுமீன் புரையுங் கற்பி னறுநுதல்
வளைக்கை மகடூஉ வயினறிந் தட்ட
சுடர்க்கடைப் பறவைப் பெயர்ப்படு வத்தஞ்
சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத்
துருப்புறு பசுங்காய்ப் போழொடு கறிகலந்து
கஞ்சக நறுமுறி யளைஇப் பைந்துணர்
நெடுமரக் கொக்கி னறுவடி விதிர்த்த

தகைமாண் காடியின் வகைபடப் பெறுகுவிர்
வண்ட லாயமொ டுண்டுறைத் தலைஇப்
புனலாடு மகளி ரிட்ட பொலங்குழை
யிரைதேர் மணிச்சிரலிரைசெத் தெறிந்தெனப்
புள்ளார் பெண்ணைப் புலம்புமடற் செல்லாது
கேள்வி யந்தண ரருங்கட னிறுத்த
வேள்வித் தூணத் தசைஇ யவன
ரோதிம விளக்கி னுயர்மிசைக் கொண்ட
வைகுறு மீனிற் பைபயத் தோன்று
நீர்ப்பெயற் றெல்லைப் போகிப் பாற்கேழ்
வாலுளைப் புரவியொடு வடவளந் தரூஉ
நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை
மாட மோங்கிய மணன்மலி மறுகிற்
பரதர் மலிந்த பல்வேறு தெருவிற்
சிலதர் காக்குஞ் சேணுயர் வரைப்பி
னெல் லுழு பகட்டொடு கறவை துன்னு
மேழகத் தகரோ டெகினங் கொட்குங்
கூழுடை நல்லிற் கொடும்பூண் மகளிர்
கொன்றை மென்சினைப்பனிதவழ் பவைபோற்
பைங்கா ழல்கு லுண்டுகி னுடங்க
மால்வரைச் சிலம்பின் மகிழ்சிறந் தாலும்
பீலி மஞ்ஞையி னியலிக் கால
தமனியப் பாற்சிலம் பொலிப்ப வுயர் நிலை
வான்றோய் மாடத்து வரிப்பந் தசைஇக்
கைபுனை குறுந்தொடி தத்தப் பைபய
முத்த வார்மணற் பொற்களங் காடும்
பட்டின மருங்கி னசையின் முட்டில்
பைங்கொடி நுடங்கும் பலர்புகு வாயிற்
செம்பூத் தூய செதுக்குடை முன்றிற்

கள்ளடு மகளிர் வள்ள நுடக்கிய
வார்ந்துகு சின்னீர் வழிந்த குழம்பி
னீர்ஞ்சே றாடிய விரும்பல் குட்டிப்
பன்மயிர்ப் பிணவொடு பாயம் போகாது
நென்மா வல்சி தீற்றிப் பன்னாட்
குழிநிறுத் தோம்பிய குறுந்தா ளேற்றைக்
கொழுநிணத் தடியொடு கூர்நறாப் பெறுகுவிர்
வான மூன்றிய மதலை போல
வேணி சாத்திய வேற்றருஞ் சென்னி
விண்பொர நிவந்த வேயா மாடத்
திரவின் மாட்டிய விலங்குசுடர் ஞெகிழி
யுரவுநீ ரழுவத் தோடுகலங் கரையுந்
துறைபிறக் கொழியப் போகிக் கறையடிக்
குன்றுறழ் யானை மருங்கு லேய்க்கும்
வண்டோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த
மஞ்சண் முன்றின் மணநாறு படப்பைத்
தண்டலை யுழவர் தனிமனைச் சேப்பிற்
றாழ்கோட் பலவின் சூழ்சுளைப் பெரும்பழம்
வீழி றாழைக் குழவித் தீநீர்க்
கவைமுலை யிரும்பிடிக் கவுண்மருப் பேய்க்குங்
குலைமுதிர் வாழைக் கூனி வெண்பழந்
திரளரைப் பெண்ணை நுங்கொடு பிறவுந்
தீம்பஃ றார முனையிற் சேம்பின்
முளைப்புற முதிர்கிழங் கார்குவிர் பகற்பெயன்
மழைவீழ்ந் தன்ன மாத்தாட் கமுகின்
புடைசூழ் தெங்கின் முப்புடைத் திரள்கா
யாறுசெல் வம்பலர் காய்பசி தீரச்
சோறடு குழிசி யிளக விழூஉம்
வீயா யாணர் வளங்கெழு பாக்கத்துப்

பன்மர நீளிடைப் போகி நன்னகர்
விண்டோய் மாடத்து விளங்குசுவ ருடுத்த
வாடா வள்ளியின் வளம்பல தரூஉ
நாடுபல கழிந்த பின்றை நீடுகுலைக்
காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப்
பாம்பணைப் பள்ளி யமர்ந்தோ னூங்கண்
வெயினுழை பறியாக் குயினுழைபொதும்பர்க்
குறுங்காற் காஞ்சி சுற்றிய நெடுங்கொடிப்
பாசிலைக் குருகின் புன்புற வரிப்பூக்
காரகற் கூவியர் பாகொடு பிடித்த
விழைசூழ் வட்டம் பால்கலந் தவைபோ
னிழறாழ் வார்மண னீர்முகத் துறைப்பப்
புனல்கால் கழீஇய பொழிறொறுந் திரள்காற்
சோலைக் கமுகின் சூல்வயிற் றன்ன
நீலப் பைங்குடந் தொலைச்சி நாளும்
பெருமகி ழிருக்கை மரீஇச் சிறுகோட்டுக்
குழவித் திங்கட் கோணேர்ந் தாங்குச்
சுறவுவா யமைத்த சுரும்புசூழ் சுடர்நுத [கண்
நறவுபெயர்த் தமைத்த நல்லெழின் மழைக்
மடவரன் மகளிரொடு பகல்விளை யாடிப்
பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும்
பொய்யா மரபிற் பூமலி பெருந்துறைச்
செவ்விகொள் பவரோ டசைஇ யவ்வயி
னருந்திறற் கடவுள் வாழ்த்திச் சிறிதுநுங்
கருங்கோட் டின்னிய மியக்கினிர் கழிமின்
காழோ ரிகழ்பத நோக்கிக் கீழ
நெடுங்கை யானை நெய்ம்மிதி கவளங்
கடுஞ்சூன் மந்தி கவருங் காவிற்
களிறுகத னடக்கிய வெளிறில் கந்திற்

றிண்டேர் குழித்த குண்டுநெடுந் தெருவிற்
படைதொலை பறியா மைந்துமலி பெரும்புகழ்க்
கடைகால் யாத்த பல்குடி கெழீஇக்
கொடையுங் கோளும் வழங்குநர்த் தடுத்த
வடையா வாயின் மிளைசூழ் படப்பை
நீனிற வுருவி னெடியோன் கொப்பூழ்
நான்முக வொருவற் பயந்த பல்லிதழ்த்
தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றிச்
சுடும ணோங்கிய நெடுநகர் வரைப்பி
னிழுமென் புள்ளி னீண்டுகிளைத் தொழுதிக்
கொழுமென் சினைய கோளி யுள்ளும்
பழுமீக் கூறும் பலாஅப் போலப்
புலவுக் கடலுடுத்த வானஞ் சூடிய
மலர்தலை யுலகத் துள்ளும் பலர்தொழ
விழவு மேம்பட்ட பழவிறன் மூதூ
ரவ்வாய் வளர்பிறை சூடிச் செவ்வா
னந்தி வானத் தாடுமழைகடுப்ப
வெண்கோட் டிரும்பிணங் குருதி யீர்ப்ப
வீரைம் பதின்மரும் பொருதுகளத் தவியப்
பேரமர்க் கடந்த கொடுஞ்சி நெடுந்தே
ராராச் செருவி னைவர் போல
வடங்காத் தானையோ டுடன்றுமேல் வந்த
வொன்னாத் தெவ்வ ருலைவிடத் தார்த்துக்
கச்சி யோனே கைவண் டோன்ற
னாரிச் சென்றோர்க் கேம மாகிய
வளியுந் தெறலு மெளிய வாகலின்
மலைந்தோர் தேஎ மன்றம் பாழ்பட
நயந்தோர் தேஎ நன்பொன் பூப்ப
நட்புக்கொளல் வேண்டி நயந்திசி னோருந்

துப்புக்கொளல் வேண்டிய துணையி லோருங்
கல்வீ ழருவி கடற்படர்ந் தாங்குப்
பல்வேறு வகையிற் பணிந்த மன்ன
ரிமையவ ருறையுஞ் சிமையச்செவ்வரை[ட்டுப்
வெண்டிரை கிழித்த விளங்குசுடர் நெடுங்கோ
பொன்கொழித் திழிதரும் போக்கருங் கங்கைப்
பெருநீர் போகு மிரியன் மாக்க
ளொருமரப் பாணியிற் றூங்கி யாங்குத் [இர்
தொய்யா வெறுக்கையொடு துவன்றுபுகுழ்
செவ்வி பார்க்குஞ் செழுநகர் முற்றத்துப்
பெருங்கை யானைக் கொடுந்தொடி படுக்குங்
கடுங்கைக் கொல்ல னிரும்புவிசைத் தெறிந்த
கூடத் திண்ணிசை வெரீஇ மாடத்
திறையுறை புறவின் செங்காற் சேவ
லின்றுயி லிரியும் பொன்றுஞ்சு வியனகர்க்
குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பட்
பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு
முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினர்க் கருளி
யிடைத்தெரிந் துணரு மிருடீர் காட்சிக்
கொடைக்கட னிறுத்த கூப்பா வுள்ளத்
துரும்பில் சுற்றமோ டிருந்தோற் குறுகிப்
பொறிவரிப் புகர்முகந் தாக்கிய வயமான்
கொடுவரிக் குருளை கோளவேட் டாங்குப்
புலவர் பூண்கட னாற்றிப் பகைவர்
கடிமதி லெறிந்து குடுமி கொள்ளும்
வென்றி யல்லது வினையுடம் படினு
மொன்றல் செல்லா வுரவுவாட் டடக்கைக்
கொண்டி யுண்டித் தொண்டையோர் மருக

மள்ளர் மள்ள மறவர் மறவ
செல்வர் செல்வ செருமேம் படுந
வெண்டிரைப் பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற
பைம்பூட் சேஎய் பயந்தமா மோட்டுத் [குத்
துணங்கையஞ் செல்விக் கணங்குநொடித் தாங்
தண்டா வீகைநின் பெரும்பெய ரேத்தி
வந்தேன் பெரும வாழிய நெடிதென
விடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பிக்
கடனறி மரபிற் கைதொழூஉப் பழிச்சி
நின்னிலை தெரியா வளவை யந்நிலை
நாவலந் தண்பொழில் வீவின்று விளங்க
நில்லா வுலகத்து நிலைமை தூக்கி
யந்நிலை யணுகல் வேண்டி நின்னரைப்
பாசி யன்ன சிதர்வை நீக்கி
யாவி யன்ன வவிர்நூற் கலிங்க
மிரும்பே ரொக்கலொ டொருங்குட னுடீஇக
கொடுவாள் கதுவிய வடுவாழ் நோன்கை
வில்லோ னட்ட பல்லூன் கொழுங்குறை
யரிசெத் துணங்கிய பெருஞ்செந் நெல்லின்
றெரிகொ ளரிசித் திரணெடும் புழுக்க
லருங்கடித் தீஞ்சுவை யமுதொடு பிறவும்
விருப்புடை மரபிற் கரப்புடை யடிசின்
மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி
மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்
தாஓ விருப்பிற் றானின் றூட்டி
மங்குல் வானத்துத் திங்க ளேய்க்கு
மாடுவண் டிமிரா வழலவிர் தாமரை
நீடிரும் பித்தை பொலியச் சூட்டி
யுரவுக்கடன் முகந்த பருவ வானத்துப்

பகற்பெயற் றுளியின் மின்னு நிமிர்ந் தாங்குப்
புனையிருங் கதுப்பகம் பொலியப் பொன்னின்
றொடையமை மாலை விறலியர் மலைய
நூலோர் புகழ்ந்த மாட்சிய மாக்கடல்
வளைகண் டன்ன வாலுளைப் புரவி
துணைபுணர் தொழில நால்குடன் பூட்டி
யரிதேர் நல்கியு மமையான் செருத்தொலைத்
தொன்னாத் தெவ்வ ருலைவிடத் தொழித்த
விசும்புசெ லிவுளியொடு பசும்படை தரீஇ
யன்றே விடுக்குமவன் பரிசி லின்சீர்க்
கின்னர முரலு மணங்குடைச் சாரன்
மஞ்ஞை யாலு மரம்பயி லிறும்பிற்
கலைபாய்ந் துதிர்த்த மலர்வீழ் புறவின்
மந்தி சீக்கு மாதுஞ்சு முன்றிற்
செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக்
களிறுதரு விறகின் வேட்கு
மொளிறிலங் கருவிய மலைகிழ வோனே.

## பொருட்பாதுபாடு.

1-முதல் 16-அடிகள் பேரியாழின் வருணனை

அகன்ற பெரிய ஆகாயத்திடத்தே தோன்றிப் பரந்த இருளை விழுங்காநின்று மறைந்தபகற்பொழுதை உலகத்தே தோற்றுவித்து எழுதலைச் செய்யும் பலகிரணங்களையுடைய ஞாயிறு கோபிக்கின்ற சினம் முறுகிய வலியையுடைய முது வேனிற் காலத்தே, பசிய இலைகளை உதிர்த்த பரிய தாளினையுடைய பாதிரியினது வளவிய இதழையுடைத்தாகிய வண்டையுடைய பூவினுடைய வயிற்றிடத்தைப் பிளந்த அதன் உள்ளிடத்தை யொக்கும் நிறமூட்டுதலுற்ற தோலினாலாகிய, பரிய தாளினையுடைய கமுகினது பாளையாகிய அழகிய பசியபூ விரியாமற் கருவாயிருந்தாலொத்த இரண்டு கண்ணுங்கூடின செறிந்த துளையினையும், உருக்கி ஒன்றாக வார்த்தாற் போன்ற தோல்களின் வேறுபாடு தெரியாமல் இசைத்தலுறும் போர்வையினையும், சுனை வற்றி உள் இருண்டாலொத்த இருள் செறிந்த உண்ணாக்கினையில்லாத வாயினையும், முதற்பிறை பிறந்து ஏந்தியிருந்தாற் போன்ற பின்பு ஏந்தியிருக்கின்ற கவைத்தலையுடைய கடையினையும், நெடிய மூங்கிலையொத்த திரண்ட தோளினையுடைய மடந்தையின் முன்கையிற்குறிய தொடியை யொக்கும் நெகிழ வேண்டுமிடத்து நெகிழ்ந்தும் இறுக வேண்டுமிடத்து இறுகும் வார்க்கட்டினையும், நீலமணி ஒழுகினையொத்த கருமையான பெரிய தண்டினையுமுடைய பொன் கம்பியாய் ஒழுகினொத்த முறுக்கடங்கின நரம்பின் கட்டமைந்த யாழ் என்க.

**16-22** பாணரின் இயல்பு.

இவ்வியல்பினதாகிய பேரியாழை இடத்தோட்பக்கத்தே அணைத்து, வெய்ய தெறுதற் றொழிலையுடைய

ஞாயிற்றோடே திங்களும் மேருவை வலமாகத் திரிதலைச் செய்யும் குளிர்ந்த கடல்சூழ்ந்த உலகில் நின்னைப் புரப்பாரைப் பெறாமையாலே, பெய்கின்ற மழை துறத்தலால் நிலத்தின்கண்ணெழுந்த ஆவிசூழ்ந்த மலையிடத்தே பழுத்த மரத்தைத் தேடித்திரியும் பறவைகளைப்போலப் பசிமிகுதியால் அழுகின்ற சுற்றத்தாருடனே ஓரிடத்திராமற் பயனின்று ஓடித் திரிதலைச்செய்யும் பொலிவழிந்த யாக்கையினையும் கற்றகல்வியை வெறுத்துக் கூறுகின்ற வாயினையுமுடைய பாணன் என்க.

**23-28** ஆற்றுப்படுத்துவோன் தான்பெற்ற பரிசிலைக் கூறுதல்.

பாண! பெரிய வற்கடமிக்க காடு உழவுத்தொழில் முதலியவற்றால் ஆரவாரமிகும்படி தொகுதியையுடைய மேகம் துளியைச் சொரிந்தாற்போல, தொன்று தொட்ட பசிமிக்க எம்முடைய மிகப்பெரிய சுற்றத்தோடே பிறர்க்குக் கொடுக்கவும் கெடாத பெருஞ் செல்வத்தைப் பெற்று வெள்ளிய பிடரிமயிரையுடைய குதிரையோடே வலியினையுடைய யானைகளையும் வாரிக்கொண்டு தொண்டைமான் இளந்திரையனது ஊராகிய அவ்விடத்தினின்றும் யாம் வாராநின்றேம் என்க.

**28-37** இளந்திரையனின் சிறப்பு.

நீங்களும், பெரிய நிலத்தை அளந்த, திருவாகிய மறுவை யணிந்த மார்பினையுடைய, கடல்போலும் நிறத்தையுடைய திருமாலாகிய இராமபிரானின் வழித்தோன்றலும் அக்கடலின் திரை கொண்டுவந்து ஏறவிட்ட மரபினால் சோழன் குடியிற் பிறந்தோனுமாகிய அகன்ற இடத்தையுடைய உலகத்திலே நிலைபெற்ற உயிர்களைக் காக்கும் முரசு முழங்குகின்ற நாற்படையினையுடைய சேர சோழ பாண்டியரென்னும் மூவரினும், விளங்குகின்ற நீரையுடைய சட

விடத்துப் பிறந்த சங்கின் மேலாக உகைம் கூறும் வலம் புரிச் சங்கையொத்த குற்றம் நீங்கும் தலைமையினையும் மறத்தைப் போக்கின அறத்தைச் செய்கின்ற செங்கோலினையும் பல்வேற் படையினையுமுடைய தொண்டைமான் இளந்திரையன் என்க.

**37-45** இளந்திரையனின் ஆட்சிச் சிறப்பு.

இவ்விளந்திரையனிடத்துச் செல்லுவீராயின் கேட்பாயாக அவனுடைய தன்மையை. கெடுவதாக நினதுமிடி. வழிப்போவார் கலங்கும்படியாக வெட்டி அவர்கள் கையிலுள்ள பொருள்களைக் கைக்கொள்ளும் களவே உழவு போலும் இல்வாழ்க்கைப் பொருளாகவுடைய கொடுமையோரில்லை அவ்விளந்திரையனது காவலையுடைத்தாகிய அகலத்தையுடையநாட்டில்; உருமேறும் இடியாது; பாம்புகளும் கொல்லுதலைச் செய்யா; காட்டிடத்துள்ள புலி முதலான விலங்குகளும துன்பஞ் செய்யா; ஆதலின் விரும்பிய விதமாக அந்நாட்டின் கண்ணே இளைத்த விடத்தே இளைப்பாறி, எங்களிடத்தே நீ தங்கிப்போக வேண்டுமென்று நச்சினவிடத்தே நீயும் அதற்கு விரும்பித் தங்கிச் செல்வாயாக, இரத்தற்றொழிலில் வல்லோய்! நினது நெஞ்சு நினைத்த சிறப்புகளைப் பெறுவதாக என்க.

**46-65** உப்பு வாணிகர் இயல்பு.

நன்றாகி வளைந்தமரம் சூழ்ந்து கிடக்கப்பட்டதாய் தைத்த சிக்கென்ற தன்மையையுடைய ஆரிடத்தே மத்தளத்தை யொத்த குறட்டினையுடைய உருளையினையும் கணையமரம் இரண்டு சேர்ந்தாலொத்த பருத்த கைகளையுடைய வலியபாரையுமுடைய, மாரிகாலத்தில் மலையானது மேகத்தைச் சுமந்து நின்றாற் போன்ற தொத்துளிப்பாயாலே வேய்ந்த ஒலிக்கின்ற வாயையுடைய சகடத்தை,

யானை புனத்திற் தின்னாமல் காக்கின்றவர்கள் இதண் மேலே கட்டின குடிலை யொப்பச் சிறுக்கட்டின கோழி கிடக்கும் கூட்டையுடைத்தாகிய குடிலின் வாசலிலே மூங்கில் முளைபோலும் கொம்பினையுடைய கரியபிடியினது முழந்தாளை யொக்கும் துளையைத் தன்னிடத்தேயுடைய சிறிய உரலை அசையும்படி தூக்கிநாடகமாடுமகளிர் ஆடுங்களத்தேகொண்டுவந்த வாராற்பிணித்தவிறுகின இனியமுழவை யொப்பத்தகராதபடி கயிற்றாலே வரிந்து காடிவைத்த,மிடாவையுடைய அப்பாரிற்றலையிலே குழவியைக் கைக்கொண்ட பெண் இருந்து பூண்ட எருதை முதுகிலே அடிப்ப, கொம்பிடத்தே பூங்கொத்தையுடைய வேம்பினது மேன்மையையுடைய இலை நெருங்கிய தழைவிரவின மாலையையும் பரிய அழகினையும் வலியினையுமுடைய இறுகின தோளினையும் மறுக்குண்ட உடம்பினையும். நிரம்பிய மெய்வலியினையுமுடைய உமணர் சிறிய துளையினையுடைய கொடிய நுகத்தின்கண்ணே எருதுகளை ஒருவழிப்பட நிரைத்துக்கட்டின பெரிய கயிற்றினையுடைய சகடமாகிய வொழுகையினைப் பக்கத்தே காத்துச் செல்ல, சிறிபவாக இடப்படும் பக்குவத்தையுடைய உப்பாகிய உணவின் விலையை சொல்லி இளைத்த எருதுகளுக்குப் பதிலாகப் பூட்டுவதற்குப் பல எருத்தையும் அடித்துக் கொண்டு போகும் உப்புவாணிகர் என்க.

**65-82** ஊரின் கவர்த்த வழிகளைக் காத்தல்.

இவ்வாறாக உப்புவாணிகர் ஊர்கள்தோறும் செல்லும் நெடிய வழியினையும் பகற்பொழுது போவார்க்கு இளைப்புத்தீர மலையிலுள்ளனவும் கடலிலுள்ளனவுமாகிய மாட்சிமையையுடைய பயனைக்கொடுக்கும் பெறுதற்கரிய பொருள்களை உலகத்தோரெல்லோரையும் நுகரப்பண்ணும், திருந்திய தொடையினையுடையவலிமையுடையவாகிய காலில் அடியை

மறைக்கின்ற செருப்பைக் கோத்துச்சட்டையிட்டு, பொருகின்ற அம்புகள் தசையைப் போக்கின புண்கள் தீர்ந்த மார்பினையும் விரவின வரிபொருந்திய கச்சினையுடைய வெள்ளிய கைப்பிடி பொருந்திய ஒள்ளிய வாள் வரையிடத்து ஊர்கின்றபாம்புபோலத்தோளிலே கோக்கப்பட்டு ஒருபக்கத்தே தூங்காநிற்க, உடைவாள் செருகப்பட்ட கட்டுதலிறுகும் சேலையினையும் கொடிய வில்லை நிரம்பவாங்கின இடமகன்ற வலியினையுடைத்தாகிய தோளினையுமுடைய கடம்பிடத்தே யிருந்த நெடிய முருகனை யொத்த கூற்றுவனைப் போன்ற வேலைப் பெரிய கையிலேயுடைய பிறங்கிடாத புதியோர் பெரிய நிலையினையுடைய பலாவினடியிலே குலைகொண்ட சிலவாகியசுளையினையுடைய பெரிய பழத்தையொப்ப மிளகினது ஒத்தகனமாகச் சேர்த்த பாரத்தைத் தாங்கிய, வடுவழுந்தின வலியினையுடையமுதுகினையும் நிமிர்ந்த செவியினையுமுடைய கழுதையைக் கொண்டு போகின்ற திரளோடே வழங்குஞ் சுங்கத்தினையுடைய பெரிய வழியிலே கவர்த்த வழிகளையும் காத்திருக்கும் விற்படையிருக்கின்ற ஊர் என்க.

## **82-105** எயிற்றியர் செய்கை.

இத்தன்மையதாகிய காட்டுவழிகளில், நீண்ட தாளினையுடைய இலவத்தினது அசைகின்றகொம்புகள் காய்த்த பஞ்சினையுடைய அழகிய பசிய காயினது முதுகு விரிந்து பஞ்சு தோன்றினாலொக்க வரியை முதுகிலேயுடைய அணிலோடே எலியும் திரியாதபடியாக, யாற்றினது அறலையொக்கும் மேற்புறத்தினையுங்கொழுவிய மடலினையுமுடைய வேலின் முனையை யொத்த கூர்மையான முனையினையுடைய நெடிய மேட்டு நிலத்தில் நின்ற ஈந்தினுடைய இலையாலே வேய்ந்த எய்ப்பன்றியினது முதுகுபோலும் புறத்தினையுடைய குடிலின் கண்ணே, மான்தோலாகிய படுக்கையிலே

பிள்ளையோடே முடங்கி அப்பிள்ளையைப் பெற்ற எயிற்றி கிடக்க, (ஏனைய எயிற்றியர்) சென்று வலியையும் வைரத்தையும் உடைய பூண் தலையிலே அழுத்தின நன்றாகிய திரட்சியையுடைய சீரியகோல் செருகின உளிபோலும் வாயினையுடைய பாரைகளாலே கட்டிகள் கீழ்மேலாகுமாறு குத்துகையினாலே கருமை நிலமாகிய கரம்பை நிலத்திலுண்டாகிய புழுதியை யளைந்து மெல்லிய புல்லரிசியை வாரியெடுத்துக்கொண்ட வெள்ளிய பல்லையுடையளயின் குடியிற் பிறந்த மகளிர், பார்வைமான் கட்டிநின்ற தேய்ந்த தாளினையுடைய விழாமரத்தினது நிழலையுடைய முற்றத்திடத்துத் தோண்டின நிலவுரலிலே அப்புல்லரிசியை இட்டுச் சிறிய வயிரமாகிய உலக்கையினாலே குத்தி ஆழ்ந்த கிணற்றிலுள்ள சிற்றூறலாகிய உவரிநீரை முகந்துகொண்டு வந்து பழைய ஓறுவாய்போன பானையிலே வார்த்த உலையைமுரிந்த அடுப்பிலே வைத்து அரியாது ஆக்கின, உப்புக்கண்டத்துடன் கூடிய சோற்றை, கெடாததும்பை சூடின போரை வல்ல வீரருடைய தலைவனாகிய முதுகிடாத படையினையும் ஒள்ளிய தொழில்களையுடைத்தாகிய வீரக்கழலை யணிந்த காலினையுமுடைய செவ்விய மலைநாட்டையுடையானது பாணச்சாதியேம் என்று கூறுவிராயின் தெய்வங்களுக்கு இடும் பலிபோலத் தேக்கிலையிலே குவிக்கையினாலே நும்முடைய பசுமை தீர்ந்த சுற்றத்தோடே அவ்வுணவை மிகப்பெறுகுவிர் என்க.

## 106-117 பாலைநிலத்துள்ளார் செயல்.

மானடி அழுந்திக்கிடக்கின்ற நீரின்மையான் மயங்கித் திரியும் வழியிடத்திலே, மழைபெய்தலைத் தவிர்ந்த காலத்தே நீர் நிற்கவேண்டுமென்று விரும்புதலாலே குழித்த குளங்களைச் சூழப்பறித்துக்கிடக்கின்ற குழிகளினுள்ளே மறைந்தொதுங்கி அகத்திப்பூவினை யொத்த வளைந்த கொம்

பிணையுடைய பன்றியினது நீருண்ணவரும் வரவைப் பார்த்திருக்கும் நடுவியாமத்து வேட்டை ஒழிந்தார்களாயின் அதன் பிற்றை (பகல்) நாளிலே அங்காந்த வாயையுடைய நாய்களுடனே சென்று பசிய தூறுகளையடித்து அவற்றிற்கிடவாமலோட்டி குவிந்த இடத்தையுடைய வேலியிடத்தே ஒன்றோடொன்று பிணைத்த வலைகளை மாட்டி, முள்ளைத் தண்டிலேயுடைய தாமரையினது புறவிதழை யொக்கும் நெடிய செவியினையுடைய குறிய முயல்களை ஓரிடத்தும் போகில்லாதபடி வளைத்துத் தறுகண்மையையுடைய கானவர் காட்டிலுள்ள முயல்களைக் கொள்ளை கொண்டுண்ணும் அரியபாலைநிலம் என்க.

## 117-133 எயினர் அரண்களின் நிலைமை.

இவ்வரிய பாலைநிலத்தைக் கைவிட்ட அப்பால், பருந்துகள் படியப் பொருந்தாத பகைவர் அஞ்சக் குத்தி கூர்மையை யுடைய மூளைமழுங்கின புலால் நாறும் வாயையுடைய வேலே வடித்த மணிகட்டின பலகைகளோடு நிரைத்து வைத்து, தலையிலே முடிந்த நாணையுடைய வில்லைச் சார்த்தி வைத்த அம்புகங்கும் அகற்சியை யுடைய வீடுகளையும் ஊகம் புல்லாலே வேய்ந்த உயர்ந்த நிலைமையினை யுடைய மதிலையும் மலையிடத்துள்ள தேனிறாலையொக்கும் குதையினை யுடைத்தாகிய அடியினை யுடைய அம்புக்கட்டுகளுடனே ஓசை கடிய துடியும் தூங்கும் திரண்ட காலையுடைய பந்தரினையும் சங்கிலிகளாலே நாய்களைக் கட்டிவைத்த கிட்டுதற்கரிய காவலையுடைய வீட்டினையும், வாழ்கின்ற முள்ளையுடைய வேலியினையும் அதனைச் சூழ்ந்த காவற் காட்டினையுடைத்தாகிய பக்கத்தினையும் கொடிய கணையமரம் ஏறட்ட உட்கதவையுடைய வாயிலினையும் செவ்விய நிலையினையும் நெடிய மூளையினையு ம்

டைய வலியை யுடைய சழுக்கள் நிரைத்த ஊர்வாசலினையு முடைய கொடிய வில்லையுடைய எயினச்சாதியிள்ளாருடைய அரணிலே தங்கின், களர்நிலத்தே வளர்ந்த ஈந்தினது விதையைக் கண்டாற்போன்ற மேட்டு நிலத்தே விளைந்த நெல்லினது சிவந்த அவிழாகிய சோற்றை நாய் சுடித்துக் கொண்டு வந்த அக்குமணிபோலும் முட்டைகளையுடைய உடும்பினது பொரியலாலே மறைத்ததனை மனைகள் தோறும் பெறுகுவிர் என்க.

**134-147** குறிஞ்சிநிலத்துள்ளார் வீரம்.

யானை தன் எதிரே செல்லினும் பாப்பு தன்மேலே செல்லினும் நீலநிறத்தையுடைய மேகத்திடத்தே வலிய உருமேறு இடிப்பினும் சூற்கொண்ட மகள் அவையிற்றுக்கு அஞ்சி மீளா மறத்தைப்பூண்ட வாழ்வினையும், வலிமையின் கொள்ளைகொண்டுண்ணும் உணவினையும் வாட்டொழில் செய்யும் குடியிற் பிறந்த புலியினது போத்தை யொத்த புல்லென்ற காடியை யுடைய குறிஞ்சிநிலத்தலைவன், தான் குறித்த விலங்கின்மேலே செல்லுகின்ற நாய் அதனைத் தப்பாமற் கொள்ளுமாறு போன்ற கொடிய வில்லை யெடுத்த காவலாளருடனே தன்வார்த்தை கேளாத பகைவரது காவலையுடைய நிலத்தே சென்று விடியற்காலையில் அவர்களுடைய பசுக்களை அடித்துக்கொண்டு போந்து அவற்றைக் கள்ளுக்கு விலையாகப்போக்கி அதற்குப் பின்பு தமது வீட்டிலே சமைத்த கள்ளுகளில் இனிதாகிய நெல்லாற் செய்த கள்ளையுண்டு வளப்பத்தையுடைய மன்றிலே வலியையுடைய கிடையை அறுத்துத்தின்று தோலை மடித்துப்போர்த்த வாயையுடைய மத்தளம் தங்களுக்கு நடுவே முழங்க வில்லுப்பயின்ற வலிமையுடைய இடத்தோளை யெடுத்து வலப்பக்கத்திலே வளைந்து பகற்பொழுதிலே

மகிழ்ச்சியுடனே ஆடும் அசையாத குடியிருப்பாகிய பொருந்தலையுடைய இடம் என்க.

**147-154** இடையர் குடியிருப்பின் தோற்றம்.

இவ்வகையான குடியிருப்பினைக் கடந்த பின்பு ஆட்டு மறிகள் நின்று தின்னும் தன்மையையுடைய தழைகளைத் சட்டின குறுகிய கால்களையுடைய வீட்டினையும், சிறுதூற்றை யுடைய வாயிலினையும் கட்டப்பட்ட கழிகளாலான கதவி னையும், வரகுக் கற்றைகளாலே வேயப்பட்ட வரிந்தகழிக ளிடத்தேயுள்ள சேக்கையையும், தோல்களைப் பாயலாக வுடைய முதியோன் துயில் கொள்ளும் காவலையுமாட்டின் நெடிய கயிறுகள் கட்டின குறிய முளைகளையுடைய முற்றத் தினையும், வளைந்த முகத்தையுடைய செம்மறியாட்டுடனே வெள்ளாடுங் கிடக்கும் கட்டு முள்ளாகிய வேலியினையு முடைய எருமிகுகின்ற முல்லைநிலத்து ஊர் என்க.

**155-168** ஆய்மகள் செயல்.

இத்தன்மையான ஊரிடத்து, செறிந்த இருள்போகின்ற காலத்தே பறவைகள் துயிலெழா நிற்க எழுந்து போய், புலியினது முழக்கம்போலதும் முழக்கத்தை யுடைய மத்தை ஆரவாரிக்கும்படி கயிற்றை வலித்து, குடைக்காளானுடைய வெண்மையான முகைகளை யொத்த குவிந்த முகிழ்களையுடைய உறையாலே இறுகத்தோய்த்த இனிய தயிரைக்கடைந்து வெண்ணெயை எடுத்து, தயிர் புள்ளியாகத் தெறித்த வாயையுடைய மோர்ப்பானையை மெத்தென்ற சுமட்டில் வைத்துச் சுமந்து நாட்காலையிலே மோரைவிற்கும் நன்றாகிய மாமைநிறத்தினையும் சிறிய குழை அசையுங் காதினையும் மூங்கில் போலும் தோளினை யும் குறிதாகிய அறலைத் தன்னிடத்தே கொண்ட மயிரி

லையுமுடைய ஆய்சாதியிற் பிறந்த மகள் மோர்விற்றதனு லுண்டாகிய நெல் முதலியவற்றாலே சுற்றத்தாரெல்லாரை யும் உண்ணப்பண்ணிப் பின்பு தான் நெய்யை விற்கின்ற விலைக்குக் கட்டியாகப் பசும் பொன்னை வாங்காளாய், பாலெருமையையும் நல்ல பசுவையும் கரிய எருமை நாகினை யும் நெய்க்கு ஒப்பாகச் சொல்லி வாங்குகின்ற, சிழ்க்கையிடி டித்தலாலே மடிந்த வாயையுடைய இடையர் குடியிருப்பிலே தங்குவீராயின் பெரிய சுற்றத்தையுடைய ஞெண்டினது சிறிய பார்ப்பையொத்த பசிய தினையரிசிச்சோற்றைப் பாலொடு பெறுகுவிர் என்க.

**169-184** இடையர் தன்மை.

இடையன் செருப்புக்கிடந்த் வடுவழுந்தின வலியை யுடைய அடியினையும், பசுக்களுக்கு வருத்தஞ் செய்யுந் தடியை ஊன்றினவும் மரங்களை ஒடிய வெறிந்து கொடுக் கும் கோடாரியால் தழும்பிருந்த வலியனவுமாகிய கையி னையுர், இரண்டு நுனிகளிலும் உறியையுடைய காக்கள் மேலே யிருந்ததனால் உண்டாகிய தழும்பு மிக்க மயிரெ ழுந்த தோட்கட்டினையும், பசுக்கறந்த கையில் மேவிய பாலைத் தடவின மயிரையும், உயர்கின்ற உச்சியையுடைய கொம்புகளிலுள்ளவும் கொடிகளிலுள்ளவுமாய்க் கலந்து காட்டிடத்துள்ள பல பூக்கள் நெருங்கிய கலம்பகமாகிய மாலையினையும், ஒன்றாகப் பொருந்திய உடையினையு முடைய பாற்சோற்றை யுண்கின்ற இடையன் கன்றுகளை முடைய பசுத்திரளோடு காட்டிலே தங்கி, அழகிய நுண்ணியதாய் விளங்கும் புகை கமழுமாறு கையினாலே முயன்று தீக்கடைக் கோலாலே கடைந்து கொண்ட மிக்க விறலையுடைய கடைக்கொள்ளியாகிய சிவந்த நெருப்பினாற் துளையிட்ட கரிய துளையினையுடைய குழலில் உண்டாக்கிய

மிகவுமினிய பாலை என்னும் பண்ணை தான் வெறுப்பாராயின், குமிழினது உட்பொய்யாகிய கொம்பிடத்து வளைத்துக்கட்டின மரற்சயிறாகிய நரம்பினையுடையவில்யாழிடத்து ஒலிக்கும்படி விரலாலே தெறித்து வாசிக்கின்ற குறிஞ்சியென்கின்ற பண்ணைப் பலகாலினையுடைய வண்டுகள் தம் சுற்றத்தின் ஓசையாகக் கருதி அதனைச் செவிகொடுத்துக் கேட்கும் புல்லு நிறைந்த அகற்சியையுடைய முல்லை நிலம் என்க.

## 184-196 உழுதுண்பார் இருப்பின் இயல்பு.

இவ்வாறான முல்லைநிலத்தைக் கடந்துபோய், முள்ளுத் தன்னிடத்தே சூழ்ந்து எழுகின்ற விடத்தர் முதலிய காடுகள் சூழ வளர்ந்த கொழுக்களையுடைய ஊர்களில் பிடித்திரள் நின்றாற் போன்ற குதிர்களையுடைய முற்றத்தினையும், யானையினது காலையொக்கும் வரகுதிரிகை நடப்பட்டிருக்கும் பந்தரினையும், குறிய சகடத்தினுருளைகளோடே கலப்பையையும் சார்த்தி வைக்கையினாலே நெடிய சுவர்தேய்ந்தபுகைசூழ்ந்தகொட்டிலினையும் உடைய, மாரிக்காலத்தையுடைய விசும்பிடத்தே பரந்த மேகத்தையொப்ப வரகு வைக்கோலாலே வேய்ந்த அழகிய குடிசைகளையுடைய சிறிய ஊர்களிலே நெடிய கொத்தினையுடைய சிறுபூளையினது பூவையொத்த குறிய தாளையுடைய வரகினது சிறிய அவிழ்களாகிய சோற்றை, நிறத்தையுடைய கொத்தினையுடைய வேங்கைப் பூவைக் கண்டாலொத்த அவரை விதையினது நன்றாகிய பருப்பை மிக இட்டுக் கலத்தலினாலே இனிய சுவையினையுடைத்தாகிய மூரலோடு பெறுகுவிர் என்க.

## 196-206 முல்லைநிலத்து உழுவார் செய்கை.

இத்தன்மையான குடியிருப்புக்களைக் கடந்து செல்வீராயின், வீடுநிறைந்த உணவுப் பொருட்களையுடைய

செவ்விய சாலாகவுழுகின்ற உழவுத் தொழிலையுடையோர் அத்தொழிலிலே பயின்ற பெரிய எருதுகளை வாயிலிலே நுகத்தைப் பூட்டிக் கொண்டு சென்று, பெண் யானையின் வாயையொத்த வளைந்த வாயையுடைய கலப்பையின் உடும்பினது முகத்தையொத்த பெருங்கொழுக்கள் மறையும்படி அமுக்கி முற்பட வளையவுழுது விதைத்தபின்னர் இடையே உழுதகளைகளைக் களைக்கொட்டுச் செத்தியதோட்டத்தை அறுக்கும் பருவம் வருங் காலத்தே, அவ்வுழவர்கள் ஆரவாரத்திற்கஞ்சிக் கெடுதற்றன்மை யுடையவாய் ஆண்டு நின்றார்போய், வெள்ளிய நிறத்தையுடைய கடம்பினது நறுநாற்றத்தினையுடைய பூவையொத்தவொருகின்ற இளைய குஞ்சுகள் மிகவும் பறத்தலாற்றாதனவற்றையும் கூட்டிக்கொண்டு குறுங்காலினையும் கருமை நிறம்பொருந்திய கழுத்தினையுடைய குறும்பூழ் காட்டிலே தங்கும் முல்லை நிலம் என்க.

## **206-256** மருத நில்த்தின் நிகழ்ச்சி.

இதனைக் கடந்தபின்பு, மெத்தென்ற துருத்தியை அமுக்கி ஊதுகின்ற உலையில் கொற்றொழில் செய்கின்றவனுடைய முறிந்த கொடிற்றை யொத்த கவர்த்த காலையுடைய ஞெண்டினது சேற்றின்கண்ணுண்டாகிய அளை அழியும்படி பசிய கோரையை அடியிலே குத்தியெடுத்த மண்கிடக்கின்ற கொம்புகளையுடைய கரிய கடாக்கள் தம்மிற் பொருத இடமகன்ற வயலின்கண் தாம் உழப்படாத அந்த நுண்ணிய சேற்றை ஒப்பரவு செய்த உழவர் முடியாகக் கிடக்கின்ற நாற்றை நட்ட நெடிய நீரையுடைய வயல்களில் களைகளைப் பறிப்பார் பறித்து எறிந்த திரண்ட தாளினையுடைய நெய்தலினது தேன் நாறுகின்ற புதிய பூவை வெறுத்தாராயின், முள் பொருந்திய கொம்புகளி

டத்து அரும்புகள் சூழ்ந்த இதழையுடையவாகிய மறிந்த வாயையுடைய முள்ளியின் வளைந்த காலையுடைய கருமையுடைய பூவைப் பறித்துக் கொண்டு, அந்நிலத்திலுண்டாகிய தண்டாமுகிய கோரையைப்பல்லாலே மென்று மென்று கிழித்து முடிந்த நாராற் கட்டின புனைதற்கினிய மாலையை சுருண்டைத்தாகிய கரிய தலைநிறையும்படி சூடி, பொன்னையுரைத்து மாற்றுக்காணும் உரைகல்லையொப்பச் சண்பங் கோரையினது புல்லிய காயிற்றோன்றின தாதை அக்கதிரை முறித்து அடித்துக் கொண்ட மார்பினையும், இரும்பைத் தகடாக்கினாலொத்த திரையாத மெல்லிய தோலினையுமுடைய வலிய கையால் தொழில் செய்வாருடைய விருப்பத்தையுடைய அழகிய சிறுபிள்ளைகள், பழைய சோற்றினது கட்டியை வெறுத்து வரம்பிடத்துக் கட்டப்பட்டு பகிய வைக்கோலாலே வேய்ந்த கவிந்த குடிலினுடைய முற்றத்தே அவலையிடிக்கும் உலக்கையினது ஓசை செறிகையினாலே, அதற்கு அயலிடத்தனவாகிய வளைந்த வாயையுடைய கிளிகள் தமக்குண்டாகின்ற பகையாக நினைத்து அஞ்சும் இடையறாத புது வருவாயினையுடைய வளையும் கதிர்களையுடைய கழனியிடத்து, எறியப்பட்டார்க்குக் கடுக்கும் தன்மையைக் கொடுத்தலையுடைய குழவித்திரளையொத்த பசுமையறும்படி விளைந்த பெரிய செந்நெல்லினுடைய உள்ளுப் பொய்யையுடைத்தாகிய திரண்ட தாளையறுத்த தொழில் செய்வார் பாம்புகிடக்கின்ற மருதினது உயர்ந்த கொம்பினது நிழலிலே, ஆண்டுறையுந் தெய்வங்கள் பலிபெறுகின்ற அகன்ற களங்களிலே மிகவு நிறைய போராக அடுக்கி, திரட்டி கொண்ட தம்முடைய சுற்றத்தோடே ஒழுங்கு பெறச் செறிந்து நின்று ஆடுகின்ற துணங்கைக் கூத்தையுடைய அழகிய பூதங்கள்

வெள்ளிய துகிலையுடுத்து நின்றதனைப் போலச் சிலந்தியினது வெள்ளிய நூல் சூழ்ந்த பக்கத்தினையுடைய பலவாய்த் திரண்ட தன்மையினையுடைய போர்களினுடைய பெரிய அடியைப் பிரித்துப் பரவிக் சடாவிட்டுப் போன பின்பு குற்றமறும்படி வைக்கோலையும் கூளத்தையும் அதனிடத்தினின்றும் நீக்கி ஈரம் புலராநிற்க மேல்சாற்றுதலை கைபிறுற் றாவித் தூற்றின பொலியானது வடதிசைக்கணுள்ளதாகிய மேருமலை போல மிகும்படி தோன்றும் மருதநிலம் சூழ்ந்த அசையாத குடியிருப்புக்களில், பெருமையையுடைய பசுக்களீன்ற வளைந்த அடியினையுடைய கன்றுகளைக் கட்டின தாமணியையுடைய நெடிய தாம்புகள்கட்டிக் கிடக்கின்ற தறிகள் நட்ட பக்கத்தினையும், ஏணிக்கு எட்டாத நீண்ட நெடிய வடிவினையும் தலையைத் திறந்து உள்ளே சொரியப்பட்ட பழையவாகிய பல நெல்லினையுமுடைய அழியாத் தன்மையவாய் முதிர்ந்த கூடுகள்வளர்ந்த நல்ல இல்லினையும், தச்சச் சாதியிற் பிறந்த தொழில் செய்தற்குரிய சிறியோர் பிறர் விரும்பும்படி பண்ணின பிறரால் ஏறப்படாத நல்ல சிறிய தேரை உருட்டிக் கொண்டு திரிந்த பிள்ளைகள் தமது தளர் நடையாலுண்டாகிய வருத்தம் நீங்கும்படி பால்சுரந்த முலையினையுடைய செவிலித்தாயராகிய அழகினையுடைய மகளிரைத் தழுவிக் கொண்டு அம்முலையிற் பாலை நிறையவுண்டு தமது படுக்கையிலே துயில்கொள்ளும் அழகினையுடைத்தாகிய நல்ல இல்லினையும், ஏனை நாட்டிற்கு இயல்பாகிய பழையமிடியையறியாத அசையாத குடியிருப்பினையுமுடைய வளப்பத்தையுடைய பெரிய ஊரின் கண்ணே தங்கின் சோம்பலில்லாத தொழில் செய்வார் கொண்டுவந்த வெள்ளிய நெற்சோற்றை மனையின் கண்ணே வாழும் கோழிப்பெடையின் பாரியலோடு பெறுகுவிர் என்க.

**257-262** கரும்பாலையின் இயல்பு.

மேகங்கள் விளையாடித் திரியும் மூங்கில் வளர்கின்ற பக்கமலையிலே தம்மை வருத்துதலையுடைய யாளி பாய்கை யினாலே பலவுங் கூடிய திரட்சியமைந்த யானை கலங்கிக் கூப்பிட்டாற்போல ஆலை ஆரவாரிக்கும் மாறாத ஓசையை யுடைய கருப்பஞ்சாற்றைக் கட்டியாகக் காய்ச்சும் புகை சூழ்ந்த கொட்டில்கள் தோறும் கரும்பினது இனிய சாற்றை முற்படக் குடித்துப் பின்னர் அக்கரும்பின் கட்டியைத் தின்பீராக.

**263-282** வலைஞர் குடியிருப்பின் இயல்பு.

வேழக்கோலை வரிச்சாக நிரைத்து வஞ்சிமரமும் காஞ்சி மரமுமாகிய வெள்ளிய கொம்புகளைக் கைகளுக்கு நடுவே கலந்து நாற்றித் தாழை நாராற் கட்டித் தருப்பைப் புல்லாலே வேயப்பட்ட குறிய இறப்பையுடைய குடிலி னையும், மீன்வாரி எடுக்கும் பறிகளையுடைய முற்றத்தினையு முடைய, வளைந்த காலையுடைய புன்னைகளினது கொம்பு களை வெட்டியிட்ட பசிய காய்கள் தூங்கும் பரந்த மணலை யுடைய பந்தரிலே இளையவர்களும் முதியவர்களும் சுற்றத் துடனே நிறைந்திருந்து, பின்பு புலால் நாறுகின்ற முனை யையுடைய அம்பையும் வில்லையு மொப்பச் சிவந்தவாயினை யுடைய கயல்களோடே பசிய இறப்பிறமும் கருமையையு டைய பெரிய ஆழ்ந்த குளங்களைப் பிள்ளைகளோடே உலாவி மீனைப்பிடித்துக் கோடைகாலம் நீட்டித்து நின்றதாயினும் வற்றுதலை யறியாத, கையை மேலே கூப்பி முழுகி நீர்நிலை காட்டுங் காலத்துக் கையமிழ்ந்துங் குளங்களினுடைய கரை யைக் காத்திருக்கும் வளைந்த முடியினையுடைய வலையை வீசுவாருடைய குடியிருப்பிலே தங்குவீராயின் குற்றுத

கொழியலரிசியை அழகினையுடைய களியாகத் துளாவி யட்ட கூழை அகன்ற வாயையுடைய தட்டுப் பிழாவில் உலரவாற்றி, பாம்பு உறையும் புற்றின்கட் கிடக்கும் புற்றும்பழஞ் சோற்றை யொக்கும் பொலிவு பெற்ற புறத்தினையுடைய நல்ல முளையை யிடித்துச் சேர அதனை அதிலே கலந்து இனிமை பிறக்கும்படி பகலும் இரவும் இரண்டுமுறை கழியும்படி அரியாமல் வைத்து வலிய வாயினையுடைய சாடியின் சண்ணே இளமையறும்படி முற்றின வெவ்விய நீர்மையையுடைய அரிக்கும் தன்மையுடைத்தாகிய விரலாலே அலைக்கும் நறிய கள்ளை மிகவும் உலராத மீனைச் சுட்டதனோடே இளைத்த அளவிலே பெறுகுவிர் என்க.

**283-296** மருதநிலத்துப் பொய்கைச் சிறப்பு.

செவ்வியான இறைச்சியிட்டு வைத்த தோளிடத்தே கோத்து நாற்றின பசிய தோலினையுடைய, மீனைத் தப்பாமற் பிடிக்க வல்ல பாண்சாதியிற் பிறந்தவன், நுனியிலே வலித்துக் கட்டின நெடிய மூங்கிற் கோலிடத்துள்ள தூண்டில் அசையும்படியாக, கயிற்றிடத்தே கொளுத்தி வளைந்த வாயினையுடைய தூண்டிலினது மடித்ததலை இரையின்றித் தனிக்கும்படியாக அது மறையைப் பொதிந்த இரையைக் கௌவி அகப்படாது போன அங்காந்த வாயையுடைய வாளைமீன் நீர்க்கு அணித்தாய் நின்ற பிரம்பினது காற்றுலசையும் நிழலை நீரிற்கண்டு அஞ்சும் பெருக்கினையுடைய நெடிய குளத்திலே நெருப்பின் தன்மைநீரிலே உண்டாகப் பூத்த கடவுள் சூடுதற்குரிய ஒள்ளிய தாமரைப் பூவைப் பறித்து முடித்தலைப் பரிகரித்து, நீர்த்துளி விழுதல் தவிர்ந்த ஓங்கிய உயர்ச்சி பொருந்திய அகன்ற இடத்தை

யுடைய பெரிய வானத்தினிடத்துக் குறைவில்லாகிய இந்திரவில்லையொப்ப, சாதிலிங்கம் போன்ற இதழையுடைய குவளையோடே நீலப்பூவும் வளர்ந்து நிறம்மாறுதலையுடைய ஏனைப்பூக்களும் மிக்க முதிய நீரையுடைத்தாகிய பொய்கைகளிடத்தே பறிப்பார் நுங்களுக்கிட்ட குவிதல் நெகிழ்ந்த பலபூக்களைப் பெரிதாகிய நாட்காலத்தே சூடிப் போமின் என்க.

## 297-310 அந்தணர் ஒழுக்கமுறை.

இங்ஙனம் கழிந்து சென்று, வளவிய கன்றைக் கட்டின சிறிய கால்களையுடைய பந்தரினையும் பசுவின் சாணத்தால் மெழுகியதும் தாம் வழிபடு தெய்வங்களையுடையதுமாகிய நன்றாகிய வீடுகளையும் மனைகளிலே தங்கும் கோழியுடனே நாயுஞ் சேராமல் விளங்க வாயினையுடைய கிளிக்கு வேதத்தின் ஓசையைக் கற்பிக்கும் வேதத்தைக் காத்தற்றொழில் செய்யும் அந்தணர் இருக்கின்ற ஊரிடத்தே தங்குவீராயின், பெரியநன்றாகிய விசும்பினிடத்துவட திசைக்கண்ணே நின்று விளங்கும் அருந்ததியையொக்கும் கற்பினையும் நறிய நுதலினையுமுடைய வளையலணிந்த கையையுடைய பார்ப்பனி பதமறிந்து அட்டனவற்றை ஞாயிறு பட்ட காலத்தே பறவையினது பெயரைப்பெறுகின்ற நெற்சோற்றை, சிவந்த பசுவினது நறிய மோரின்கண் எடுத்த வெண்ணெயின்கண் வெந்த கொம்மட்டி மாதுளையினுடைய வெம்மையுறுகின்ற பசிய காய்வகிரோடே மிளகுப் பொடிகலந்து கருவேப்பினது நறிய இலை அளாவிப் பசிய கொத்துக்களையுடைய நெடிய மரமாகிய மாவினது நறிய வடுவினைப் பலவாகப் போகட்ட அழகு மாட்சிமைப்பட்ட ஊறுகறியோடே சோற்றின் கூறுகளுண்டாகப் பெறுகுவிர் என்க.

**311-319** நீர்ப்பெயற்றென்னும் ஊரின் சிறப்பு.

விளையாட்டினையுடைய திரள்களோடே நீருண்ணும் துறையிலே கூடி நீராடுகின்ற மகளிர் போகட்டுப்போன பொன்னாற் செய்த மகரக்குழையினை இரையைத் தேடுகின்ற நீலமணி போலும் சிச்சிலி தனக்கு இரையாகத் துணிந்து எடுத்துப் பறவைகள் நிறைந்திருக்கின்ற பனையில் தனித்த மடலிற் போகாமல் நூற்கேள்வியையுடைய அந்தணர் செய்தற்கரிய கடனைச் செய்து முடித்த யாகசாலையிடத்து நட்ட யூபத்தின் மேலேயிருந்து சோனகர் பாய்மரத்தின் மேலிட்ட அன்ன விளக்குப் போலவும் இராக்காலம் விடிதற்குக் காரணமான வெள்ளியாகிய மீன்போலவும் ஒளிவிட்டு விளங்காது தோன்றும் நீர்ப்பெயற்றென்னும் ஊர் என்க.

**319-345** பட்டினச்சிறப்பு.

அவ்வூரின் எல்லையிலே போய், பால்போன்ற வெள்ளிய நிறத்தினையும் வெள்ளிய தலையாட்டத்தினையுமுடைய மேற்றிசைக்கண்ணுளவாகிய குதிரைகளுடனே வடதிசைக்கண்ணுளவாகிய நுகரப்படும் பொருள்களைக் கொண்டுவந்து தரும் மரக்கலங்கள் சூழ்ந்துகிடக்கப்பட்ட பெருமையையுடைய கடற்பக்கத்தினையும், மாடங்கள் உயர்ந்த மணல் மிக்க தெருக்களையும், பரதவர் மிக்க பலவாய் வேறுபட்ட தெருக்களையும், தொழில்செய்வார் காக்கும் மிகவும் உயர்ந்த பண்டசாலைகளையும், நெல்லினைப் பெறுதற்கு உழுகின்ற எருதுகளுடனே பசுக்கள் நெருங்காவாய் மேழகக்கிடாயோடே நாயும் சுழன்று திரியும் சோறுடைய நல்ல இல்லங்களையும், வளைந்த பேரணிகலங்களையுடைய மகளிர் கொன்றையிடத்து அரும்புகளையுடைய மெல்லிய கொம்பு

சளியிலே பனிமாசுகிடந்து தவழ்கின்றவைபோலப் பசிய மணிகள் கோத்த வடங்களையுடைய அல்குலிற் கிடக்கின்ற மெல்லிய துகிலசைய, பெருமையுடைய மூங்கில்வளர்ந்தமலையிலேமணவெழுச்சிமிக்கு ஆரவாரிக்குந்தோகையையுடைய மயில்போல உலாவிக் கால்களினிடத்தனவாகிய தமனியமாகிய பொன்னாற் செய்த சிலம்புகள் ஆரவாரிப்ப உயர்ந்த நிலைமையையுடைய தேவருலகத்தைத் தீண்டும் மாடத்திலே நூலால் வரிதலையுடைய பந்தையடித்து இளைத்து, கையிற்புனைந்த குறிய வளையல்கள் அசைய மெத்தென மெத்தென முத்தையொத்த வார்ந்த மணலிலே பொன்னாற்செய்த கழங்கைக்கொண்டு விளையாடும் பட்டினத்திடத்தே இளைப்பாறுவீராயின், முட்டில்லையாகப் பசியகொடிகளையும் கள்ளுண்பார் பலரும் புகுகின்ற வாயிலிடத்து செய்யபூ தெய்வத்திற்குத் தூவின வாடலையுடைய முற்றத்தில், கள்ளைச்சமைக்கின்ற மகளிர் மட்டில் சழுவின வடிந்து சிந்தும் சிலநீர் பலகால் வடிதலின் நிறைந்து வழிந்த குழம்பினிடத்து ஈரத்தையுடைய சேற்றையளைந்த கரிய பலவாகிய குட்டிகளையுடைய பலவாகிய மயிர்களையுடைய பெண்பன்றிகளுடனே புணர்ச்சியைக்கருதும் கருத்தாற்போகாமல் நெல்லையிடித்த மாவாகிய உணவைத் தின்னப்பண்ணிப் பலநாள் குழியிலே நிறுத்திப் பாதுகாத்த குறிய காலையுடைய ஆண்பன்றியின் கொழுவிய நிணத்தையுடைய தசையோடே களிப்புமிக்க கள்ளைப் பெறுகுவிர் என்க.

**346-351** கடற்றுறைச் சிறப்பு.

ஆகாயத்தே திரிகின்ற தேவருலகுக்கு முட்டுக்காலாக ஊன்றி வைத்த ஒருபற்றுக்கோடு போல, தன்னிடத்துச்

சாத்திய ஏணியால் ஏறுதற்கரிய தலையினையுடைய விண்ணைத்தீண்டிப்படி உயர்ந்ததும் கற்றை முதலியவற்றால் வேயாது சார்த்திட்டதுமாகிய மாடத்திணிடத்தே இராக் காலத்தே கொழுத்தினை விளங்குகின்ற விளக்கு, நெகிழ்ந்து மிக்க நீரையுடைய கடற்பரப்பிலே வந்து நாம் சேரும் துறையன்றென்பது வேறொருதுறைக்கண் ஓடுங்கலங்களை இது நம்துறையென்று அழைக்கும் துறை என்க.

## 351-362 தோப்புக்குடிகளின் இயல்பு.

இத்தகைய துறையானது பின்னே கிடக்கப்போய் உரல்போன்ற அடியினையுடைய மலையோடு மாறுபடுகின்ற யானையின் உடம்பையொக்கும் வளவிய இலைகளையுடைய தென்னையின் உலர்ந்த பழுத்தலை முடைந்து வேய்ந்ததும் மஞ்சளையுடைய முற்றத்தினையும் மணங்கமழ்கின்ற பூந் தோட்டங்களையுமுடையதுமாகிய தோப்புக்குடிகளுடைய ஒப்பில்லாத மனைகளிலே தங்கின் தாழ்ந்த குலைகளையுடைய பலாவினது சூழ்ந்து கிடக்கின்ற சுளைகளையுடைய பெரிய பழத்தையும் விழுதில்லாத தாழையாகிய தெங்கின் இளநீரைய இனிய நீரையும் கவைத்த முலையையுடைய பெரிய பிடியினுடைய கவுளிடத்துள்ள கொம்புகளையொக்கும் குலைகள் முதிர்ந்த வாழையினது வளைந்த வெள்ளியபழத்தையும் திரண்ட அடியையுடைய பனையினது நுங்கோடு வேறும் இனிய பலபண்டங்களையும் வெறுக்கின் சேம்பினது முளையைப் புறத்தேயுடைய முற்றிய கிழங்குகளைத் தின்பீர் என்க.

## 362-371 புறநாடுகளின் தன்மை.

பகற்பொழுதிலே பெய்தலையுடைய மழை கால்வீழ்ந்தாலொத்த பெரிய தண்டினையுடைய கமுகுகளின் பக்

சுற்றிய சூழ்ந்த தெங்கினுடைய மூன்று புடைப்பினை யுடைய திரண்டகாயானது, வழிச்செல்லுகின்ற புதியோர் தாம் நாமிக்கப்பசி தீரும்படி சோற்றையாக்குகின்ற பானை அடுப்பினின்றும் அசைந்து விழும்படி நிலத்திலே விழுகின்ற நீங்காத புதுவருவாயினையுடைய செல்வம் பொருந்தின பாக்கத்தினிடத்துப் பலமரங்கள் வளர்ந்த நீண்ட வழியாகப் போய் நன்றாகிய ஊர்களிடத்துள்ள விண்ணைத் தீண்டும் மாடங்களையுடைய விளங்குகின்ற மதியின் புறத்துச் சூழ்ந்த வாடுங்கொடியினையுடைய வள்ளியல்லாத வள்ளிக்கூத்தின் வளப்பம் பலவற்றையுந் தருதற்குக் காரணமாகிய புறநாடு என்க.

## 371-392 திருவெஃகாவின் சிறப்பு.

இத்தன்மைய புறநாடுகள் பலவற்றையும் கழிந்துபோன பின்பு நீண்ட பூங்கொத்துக்களையுடைய காந்தளையுடைய அழகிய பக்கமலையிலே யானை கிடந்தாற்போல, பாம்பணையாகிய படுக்கையிலே துயில்கொண்டோனுடைய திருவெஃகாவிடத்து, ஞாயிற்றின் கதிர்கள் தோன்றிய காலத்தும் படுகின்ற காலத்தும் ஊட்டடச் சிறிதும் செல்லுதலறியாத இலைநெருக்கத்தால் குயில்கள் நுழைந்து செல்லும் இளமரக்காவில் குறிய காலினையுடைய காஞ்சி மரத்தைச் சூழ்ந்த நெடிய கொடியினையும் பசிய இலையினையுமுடைய குருக்கத்தியின் புறக்கென்ற புறத்தினையும் வரிகளையுமுடைய பூக்கள் கரிதாகிய சட்டியிலே அப்ப வாணிகர் பாகுடனே வேண்டுவன கூட்டிச் சேர்க்கப்பட்ட நூல்போலச் சூழ்ந்து கிடக்கின்ற அப்பம் பாலிலே கிடந்ததைப்போல, நிறங்கிளர்கின்ற வார்ந்த மணலிடத்துக் குழிகளினின்ற நீரிடத்து விழும்படி நீர் பெருகிய காலத்தே ஏறிய இடத்தைத் தாய்

தாக்கிப்போன பொழில்கள் தோறும் திரண்ட தண்டினை யுடைய சோலையிடத்துநிற்கும் கமுகினுடைய சூற்கொண்ட வயிற்றைறயொத்த பச்சைக்குப்பிகளிலிருந்த கள்ளை உண்டு போக்கி நாடோறும் பெரிய மகிழ்ச்சியையுடைய இருக்கையினை மருவிச் சிறிய கோட்டையுடைய இளைதாகிய பிறையைச் செம்பாம்பு தீண்டினாற்போல மகரவாயாகிய தலைக்கோலத்தைச்சேர்த்தின சுரும்புகள் சூழும் ஒளியையுடைய நுதலினையும், கள்ளினை உண்டு பொருந்திய நன்றாகிய அழகினையுடைய குளிர்ச்சியையுடைத்தாகிய கண்ணினையு முடைய மடப்பம் தோற்றுதலையுடைய மகளிரோடே பகற்பொழுது விளையாடி, பெறுதற்கரிய பழமையுடைத்தாகிய புகழினையுடைய துறக்கத்தை யொக்கும் தப்பாமல் நீர்வரு முறைமையினையுடைய பூமிகுகின்ற பெரிய துறையிடத்தே இளவேனிற் செவ்வியை நுகர்வாரோடு இளைப்பாறி அஃதிருவெஃகாவணையில் அரிய திறலினையுடைய திருமாலை வாழ்த்திச் சிறிதுநேரம் நும்முடைய கரிய தண்டினையுடைய இனிய யாழைச் சிறிது வாசித்து அவ்விடத்து நின்றும் போமின் என்க.

**393-421** காஞ்சி நகரின் சிறப்பு.

பரிக்கோலையுடையோரின் நெகிழ்ந்த சமயத்தைப் பார்த்துக் கீழே தாழ்ந்த நெடிய கையினையுடைய யானைகள் தின்கின்ற நெய்யை வார்த்துக் கலந்தகவளங்களை முற்பட்ட சூலையுடைய மந்தி எடுத்துக் கொண்டு போய்த் தின்னும் சோலையினையும், களிற்று யானையின் கோபத்தை யடக்கிய வயிரமுள்ள கந்தினையும், திண்ணியதேர் பலகாலும் ஓடிக் குழித்த தாழ்ச்சியையுடைய நெடிய தெருவினையும், படை கெடுதலறியாத வலிமிகுகின்ற பெரிய புகழினையுடைய

கடைபிடத்து நெருங்கின குடிகள்பொருந்திய,உலகத்திலே ஈதலும் மற்றலும் வழங்குவாரைத் தடுத்த பகிலர்க்கு னுடையாத வாயிலினையும் காவற்காடு சூழ்ந்த பக்கத்தினை யும் நீலநிலம் பொருந்திய வடிவினையுடைய திருமாலின் திருவுந்தியிடத்துள்ள நான்கு முகத்தையுடையஒருவனைப் பெற்ற பல இதழையுடைய தாமரையினது கொட்டை போலே அழகு விளங்கத் தோன்றி, செங்கல்லாற் செய்யப் பட்டு உயர்ந்த புறப்படை வீட்டைச் சூழ்ந்த மதிலினையும் இழுமென்னும் ஓசையினையுடைய புறவினது திரளுகின்ற சுற்றத் திரட்சியையுடைய கொழுவிய மெல்லிய கொம்புகளை யுடைய பூவாமற் காய்க்கும் மரங்களில் விசேடித்தும் பழத் தின் இனிமையால் மேலாகச் சொல்லும் பலாமரத்தை யொக்க, புலால் நாற்றத்தையுடைய கடல்சூழ்ந்த ஆகாயங் கவிந்த அகன்ற இடத்தையுடைய உலகத்து நகரில் விசே டித்தும் பலசமயத்தாரும் தொழும்படி எடுத்த விழாக்க ளாலே ஏனைய நகர்களின் மேம்பட்ட பழைய வெற்றினை யுடைய ஊராகிய அழகிய இடத்தையுடைய வளரும் பிறையைச் சூடிச் செக்கர் வானமாகிய அந்திக்காலத்தே உலாவுகின்ற மேகத்தை யொப்ப, வெண்மையான கொம் பினையுடைய கரிய யானைப் பிணத்தைக் குருதியாகிய ஆறு இழுத்துச் செல்ல துரியோதனன் முதலிய நூற்றுவரும் போர்செய்து களத்திலே படும்படி பெரிய போரை வென்ற தாமரை முகையினையுடைய நெடிய தேரினையும் தொலையாத போரினையுடைய தருமன் முதலியோரைப் போல ஓரெண்ணிக்கண் அடங்காதசேனையுடனே கோபித் துத் தன்மேல் வந்த தன் ஏவலைப் பொருந்தாத பகைவர் தோற்றவிடத்தே களிப்பினால் ஆரவாரித்துக் காஞ்சிபுரத் தேயிருக்கின்றான் பரிசிலை விரும்பித் தன்பாற் சென்

ரோர்க்குப் பாதுகாவலாகிய கைவளப்பத்தையுடைய தலை வன் என்க.

**422-447** இளந்திரையனின் அரசிருக்கை.

அருளுதலும் அழித்தலும் தனக்கு எளியவாய் நடக் கையினாலே தன்னுடனே பொருதார் தேயத்திலுள்ள மன்றுகள் மக்களில்லையாய்ப் பாழாகவும் தன்னை விரும்பி னோர் தேயம் திருமடந்தை பொலிவு பெற்றிருப்பவும், உறவு கொள்ளுதலை வேண்டி அவன்றாளை விரும்பினவர்க ளும், வலியைத் தமக்குப் பெறவேண்டின வேறோர் உதவி யில்லாதவர்களும், மலையினின்று விழுகின்ற அருவி அம் மலையிலுள்ள பலபண்டங்களை வாரிக்கொண்டு கடலுக்குக் கொடுப்பதாகச் சென்றாற்போல, பலவாகிய வேறுபட்ட திறைகளின் கூறுபாட்டோடே சென்று வணங்கின அரசர் தேவர்கள் இருக்கும்உச்சியையுடைய சிவந்த மேருவினது, வெள்ளிய திரையைக் கிழித்துச் சென்ற விளங்குகின்ற ஒளி பொருந்திய நெடிய சிகரத்தினின்றும் பொன்னைக் கொழித்துக் குதிக்கும் கடந்து போதற்கரிய கங்கையினது பெரிய நீரைக்கடந்து போகும் விரைந்து செல்லுதலை யுடைய மாக்கள், விடுகின்ற தோணியாகையினாலே அது வருங்காலம் பார்த்திருந்து தூங்கினாற்போல கெடாத செல்வங்களோடு நெருங்காநின்று திரண்டு காலம் பார்த் திருக்கும் செழுமையான நகரின் முற்றத்தினையுடைய, பெரிய கையினையுடைய யானைக்கு வளைந்து கிடக்கும் பூணைச் சேர்க்கும் வலிய கையினையுடைய கொல்லன் இரும்பை உரத்துக் கொட்டின கூடத்தின் எழுந்த திண்ணிய ஓசைக்கு வெருவி, மாடத்தில்தங்கி இருக்கின்ற புறவினுடைய சிவந்த காலையுடைய சேவல் இனிய துயிலை

நீங்கும் திருத்தங்குகின்ற அகற்சியையுடைய கோயிற் கண்ணே, கீழ்கடலாகிய எல்லையிடத்து முந்நீர்க்கு நடுவே பகற்பொழுதைச் செய்யும் ஞாயிறு தன் கிரணங்களைப் பரப்பித் தோன்றினாற்போல முறைப்பாட்டை விரும்புவார்க்கும் காரியங்களை விரும்புவார்க்கும் விரும்புவனவற்றை விரும்புவனவற்றை விரும்பி வந்தவர்க்கு அருளிச்செய்து நடுவுநிலைமையை ஆராய்ந்தறியும் மயக்கந் தீர்ந்த அறிவாலே கொடையாகிய கடனை முடித்த குவியாத நெஞ்சத்தோடே கொடுமையில்லாத மந்திரச் சுற்றத்தோடு இருந்தோன் என்க.

**447-493 இளந்திரையன் பரிசிலரை உபசரிக்குந் தன்மை.**

அங்ஙனம் வீற்றிருந்த இளந்திரையனை அணுகி, ஒளியினையும் வரியினையும் உடைய யானையைப் பாய்ந்த வலியையுடைய சிங்கத்தினுடைய வளைந்த வரியினையுடைய குருளை அவ்வியானையின் மத்தகத்தைக்கொள்ள விரும்பினாற்போலப் புலவர்க்குப் பேரணிகலங்களையும் கொடுத்தற்குரிய பிறகலங்களையும் கொடுத்து, பகைவரது காவல் பொருந்திய மதில்களை யழித்து ஆண்டிருந்த அரசருடைய முடிக்கலம் முதலியவற்றை வாங்கிக்கொண்டு வீரமுடி புனையும் வெற்றியினை விரும்புவதல்லது அம்மதிலரசர் சந்து செய்தற்கு உடம்பட்டாராயினும் அதற்கு மனம்பொருந்துதல் நிகழாமைக்குக் காரணமாகிய உலகெங்கும் பரக்கும் வாளையுடைத்தாகிய பெருமைபொருந்திய கையினையும், பகைப்புலத்துக் கொள்ளையாகிய உணாவினையுமுடைய ஆதொண்டையைச் சூடினோருடைய குடியிலுள்ளவனே! வீரர்க்கு வீரத்தைக் கொடுக்கின்றவனே!

கொடியோர்க்குக் கொடியவனே! செல்வமுடையோர்க்கும் கொடுத்தலை விரும்புவனே! போர்த் தொழிலில் மிக்கவனே! வெள்ளிய திரையினையுடைய கடலிலே சென்று கடிய சூரனைக் கொன்ற பசிய பூணினையுடைய முருகனைப் பெற்ற பெருமையையுடைய வயிற்றினையும் பேய்களாடுந் துணங்கைக் கூத்தினையும் அழகினையுடைய இறைவிக்குப் பேய்மகள் நொடிசொன்னாற்போல அமையாக் கொடையினையுடைய நின் பெரிய பெயருட் சிலவற்றைச் சொல்லிப் புகழ்ந்து வந்தேன் பெருமானே! வாழ்வாயாக நெடுங்காலம் எனச் சொல்லி, இலக்கணங்களைத் தன்னிடத்தேயுடைய பெரிய யாழை வாசிக்கும் முறையிலே வாசித்து முற்படக் கண்டக்காற் செய்யவேண்டிய கடன்களை அறிந்த முறைமையோடே கையாற் றொழுது வாழ்த்தி நின்னுடைய கலைகளெல்லாந் தெரிவதற்கு முன்னே நீ நின்ற அந்த நிலை தன்னிலே நாவலாற் பெயர் பெற்ற அழகினையுடைய குளிர்ந்த உலகமெல்லாம் கேடின்றாக விளங்கும்படி யாக்கையும் செல்வமும் முதலிய நிலையில்லாத உலகத்திடத்து நிலைபேறுடைய புகழை நாம் பெறுதல் நன்றென்று ஆராய்ந்து முற்பட நின்ற சேய் நிலத்து நின்று தன்னை அணுகுதற்கு விரும்பி அழைத்து நின்னுடைய அரையிடத்துக் கிடந்த கொட்டைப்பாசியின் வேரைபொத்த சிதரின சீரையைப் போக்கிப் பாலாவியையொத்த விளங்குகின்ற நூலாற்செய்த துகில்களை கரிய பெரிய சுற்றத்தாரோடு ஒருங்கே சேர உடுக்கப் பண்ணி, வளைந்த அரிவாளைக்கொண்ட வழுவழுந்தின வலியையுடைத்தாகிய கையினையுடைய மடையனுக்கின பல் இறைச்சியிற் கொழுவிய தசைகளும் நிறத்தால் ஞாயிற்றை பொத்து உலர்ந்த பெரிய செந்நெல்லினுடைய பொறுக்

டிக்கொண்ட அரிசியாலாக்கின திரண்ட இடைமுரியாத சோறும் பெறுதற்கரிய மிகுதியையுடைய இனிய சுவையினையுடைய கண்ட சருக்கரை முதலியவற்றோடே கூறு தொழிந்தனவுமாகிய விருப்பமுடைத்தாகிய முறைமையினையுடைய தலையாப்புப் பரந்தலையுடைய அடிசிலை நட்சத்திரங்கள் தோன்றினாற்போன்ற சிறிய வெள்ளிக்கலங்களைப் பரப்பி (நும்மையும் நும்முடைய சுற்றத்தாரையும்) தன் மகவு முறையாய் வாத்சல்யத்தோடு பார்த்து முகம் பொருந்தி அமையாத ஆசையுடன் தான் நின்று உண்ணப்பண்ணுவித்து இருட்சியையுடைய ஆகாயத்திடத்தே தோன்றிய திங்களை ஒக்கும் உலாவும் வண்டுகள் ஒலியாத நெருப்பிடத்தே கிடந்து விளங்கிய பொற்றாமரையை நீண்ட கரிய மயிரிடத்தே அழகுபெறச் சூட்டி, புலவுஞ் சேர உலாவுகின்ற கடலிடத்தே முகந்த கூதிர்க்காலத்து மேகத்தினின்றும் பகற்காலத்தே பெய்தலையுடைத்தாகிய துளியின்கண்ணே மின் ஓடினாற்போல கைசெய்த கரிய மயிரிடத்தே அழகுபெறும்படி பொன்னாற்செய்து சேரக்கட்டுதலமைந்த மாலையை விறல்பட ஆடும் மகளிர் சூடா நிற்ப குதிரைநூல் கற்றோர் புகழ்ந்த அழகினையுடையவாய்க் கரிய கடலிற் சங்கைக் கண்டாற்போன்ற வெள்ளிய கழுத்தின் மயிரையுடைய குதிரைகளில், தனித்துத் தொழில் செய்யாமல் இரண்டு சேர்ந்து செய்யுந் தொழிலை யுடையவாய நான்கினைச் சேரப் பூட்டி பொன்னாற்செய்த தேரைத் தந்தும் கொடைமேல் விருப்பந் தவிரானாய் தம்முடன் வந்து பொருதோருடைய போர்களை மாளப்பண்ணித் தன்னேவலைப் பொருந்தாத பகைவர் முதுகிட்டவிடத்து விட்டுப்போன ஆகாயத்தே செல்லுகின்ற குதிரைகளுடனே பசிய பொன்னாற் செய்த

குதிரைச் சேனைத்தையும் தந்து நீ சென்ற அற்றை நாளே இவை யொழிந்த பரிசில்களையுந் தருவான் என்க.

**493-500.** அவன் மலைச் சிறப்பு.

இனிய தாளத்திலே கின்னர மென்னும் பறவைகள் பாடும் தெய்வங்களையுடைய சாரலிடத்து மயில்கள் ஆரவாரிக்கும் மரம் நெருங்கின இளமரக் காட்டினையுடைய முசுக்கலைகள் பாய்ந்து உதிர்த்த மலர்கள் சிந்தின காட்டினது மந்திகள் அவ்விடத்துக் கிடந்த துராலை வாரும் மானும் புலியுந் துயில்கொள்ளும் புற்றத்தே சிவந்த தீயைக் கைவிடாமற் காத்துப்போந்த இருடிகள், வெள்ளிய கொம்பினையுடைய களிறு முறித்துக்கொண்டு வந்த சமிதையாலே வேள்வியைச் செய்யும், மிக விளங்குகின்ற அருவிகளையுடைய மலையையாளும் உரிமையுடையவன் என்க.

## ஆக்கியோன் வரலாறு.

பெரும்பாணாற்றுப்படை யென்னும் இவ்வருமைத் திருப்பாட்டை அருளிச்செய்தவர் உருத்திரங்கண்ணனார் என்னும் நல்லிசைப் புலவராவர். இவர் பிறந்தவூர் கடியலூராகும் என்பது, இவர் பெயரை அவ்வூர்ப் பெயரொடு சேர்த்துக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் என வழங்குவதனால் அறியப்படும். இவ்வாறு மக்கள் பெயரை அவரது ஊர்ப்பெயர் முதலியவற்றோடு சேர்த்து வழங்கி வருதல் நந்தமிழகத்தின் பண்டைக்கால மரபாகும். 'உருத்திரங்கண்ணனார்' என்னும் சொற்றொடரை உருத்திரனாருக்குப் புதல்வராகிய கண்ணனார் என விரித்தற் கிடமிருத்தலானும் தந்தையார் பெயரைப் புதல்வன் பெயர்க்கு

அடையாக்கி வழங்குதல் பண்டைமரபாதலானும் இவர் தந்தையார் உருத்திரனாராவர் எனக் கருதலாகும். இவர் குலம் தமிழ்ப் பழங்குடிகளில் ஒன்றாய அந்தணர் குலமென்பது "ஊரும் பெயரு முடைத்தொழிற் கருவியும், யாருஞ்சார்த்தி யவையவை பெறுமே" என்னும் தொல்காப்பிய மரபியற் சூத்திரவுரையில், 'உறையூர் ஏணிச்சேரி முடமோசி, பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகன், கடியலூர் உருத்திரங்கண்ணன் என்பன அந்தணர்க்குரியன' எனப் பேராசிரியர் கூறியவாற்றால் அறியப்படும். இவ்வாசிரியர் இப்பாட்டினகத்துப் "பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர், மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது, வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்று, மறைகாப்பாளருறை பதி" என அந்தணர் மனையையும், "பெருநல் வானத்து வடமீனின் விளங்குஞ், சிறுமீன் புரையுங் கற்பி னறுநுதல் வளைக்கை மகடூஉ" என அந்தண மகளிர் கற்பின் திறத்தையும், "கேள்வியந்தண ரருங்கட னிறுத்த வேள்வித் தூணம்" என வேள்வித் தூணத்தையும் பற்றிக் கூறுவன ஈண்டு அறிதற்குரியன.

இனி, இவர் இயற்றிய பாடல்களிலிருந்தேனும் வேறு சான்றுகொண்டேனும் இவர் இன்ன சமயத்தைக் கைக்கொண்டொழுகினாரெனத் தெளிவாய்க் கூறுமாறில்லை. இவ்வாசிரியர் தாம் இயற்றிய இப்பாட்டினகத்து "இருநிலங் கடந்த திருமறு மார்பின், முந்நீர் வண்ணன்" எனத் திருமாலையும், "நீனிற வுருவி நெடியோன் கொப்பூழ், நான்முக வொருவற் பயந்த பல்லிதழ்த், தாமரைப் பொகுட்டு" என அவர் திருவுந்திக் கமலத்தையும், "காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப், பாம்பணைப் பள்ளி யமர்ந்தோ

ணங்கண்" என அவர் பாம்பணையாகிய படுக்கையில் துயில் கொள்ளும் திருவெஃகாவையும் சிறப்பித்துக் கூறியிருத்தலினால் இவர் திருமாலிடத்து அன்புடையாரெனக் கொள்ள இடமுண்டு. ஆயினும் "கருவிரலூகம் கல்லுகக் கல்லோச்சிய கண்ணகன் எறுழ்த்தோட் கடம்பமர் நெடுவேள்" எனவும், "வெண்டிரைப் பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற, பைம்பூட் சேஎய் பயந்தமா மோட்டுத், துணங்கையஞ் செல்வி" எனவும் முருகவேளையும் உமாதேவியாரையும் பாராட்டிக் கூறுமாற்றால் இவர் முருகவேளிடத்தும் உமாதேவியாரிடத்தும் அன்புடையாரெனக் கூறவும்படும். ஆனால் "அவ்வயின், அருந்திறற் கடவுள் வாழ்த்திச் சிறிதுநும், கருங்கோட் டின்னியம் இயக்கினிர் சுழிமின்" எனத் திருவெஃகாவணையிற் திருமாலை வாழ்த்தி அவர் திருமுன்னிலையில் இனிய யாழைச் சிறிது வாசித்துப் போமின் எனப் பாணரை ஏவுமாற்றால் இவர் திருமாலிடத்துப் பேரன்பாளர் எனக் கொள்ளப்படுமாலோவெனின், அற்றன்று. என்னை? "இருநிலங் கடந்த திருமறு மார்பின், முந்நீர் வண்ணன் பிறங்கடை யந்நீர்த், திரைதரு மரபி னுரவோ னும்பல்" என்பதனால் தொண்டைமானிளந்திரையன் என்னும் சோழமன்னன் திருமால் குடியிற் றோன்றினானெனக் கூறுமாற்றால் அவன்பாற் பரிசில் பெறுமாறு செல்லும் பாணர்க்கு அவன் குடித்தெய்வமாய் வழிபாடு செய்யும் திருமாலை வழிபட்டுச் செல்க அறிவுறுத்தினாராகலின் என்பது.

இவர் தந்தையார் உருத்திரனாரென எண்ணப்படுதலாலும் திருமால் முருகவேள் உமாதேவியார் என்பவர்களைப் பற்றிப் பாராட்டுதலாலும் வேதம் வேள்வி என்ப

வற்றைப்பற்றிக் கூறுதலானும் கற்பின் மிகுதிக்கு அருந்ததியைக் கூறுதலானும் இவர் வைதிக சைவ நெறியுடையார் என ஊகிக்க இடமுண்டு.

இவர் பத்துப்பாட்டில் இப்பெரும்பாணாற்றுப் படையேயன்றிப் பட்டினப் பாலையையும் இயற்றினவராவர். இவரைப் பெரிதும் ஆதரித்தவர்கள் இப்பாட்டுக்களின் தலைவர்களாகிய தொண்டைமான் இளந்திரையனும் கரிகாற் பெருவளத்தானு மாவர். இவர் பாடிய பட்டினப் பாலையைக் கேட்டு மகிழ்ந்து கரிகாற் பெருவளத்தான் பதினாறு நூறாயிரம் பொன் பரிசாக இவர்க்கு வழங்கினன் என்பது.

> "தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர் பொன்
> பத்தொ டாறுநூ றாயி ரம்பெறப்
> பண்டு பட்டினப் பாலை கொண்டதும்"

என்னும் கலிங்கத்துப்பரணிச்செய்யுளால்(இராசபாரம்பரியம் 22) அறியலாகும். இவ்விரு பாட்டுக்களுமேயன்றி *எட்டுத்தொகைக் கண்ணதாகிய குறுந்தொகையில் "நெடுநீராம்பல்" என்னும் செய்யுளும் அகநானூற்றில் 'வயங்கு

*எட்டுத் தொகையாவன: நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன. இதனைப் பின்வரும் வெண்பாவாலறிக.

> "நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
> றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
> கற்றறிந்தார் சொல்லுங் கலியோ டகம்புறமென்
> றித்திறத்த வெட்டுத் தொகை"

மணி பொருத' என்னும் செய்யுளும் இவரால் இயற்றப் பட்டனவாகும். இவர் செய்யுட்கள் பாட்டினும் தொகை யினும் பயின்று வருதலின் இவர்காலம் இற்றைக்கு இரண் டாயிரமாண்டுகளுக்கு முற்பட்டதாகும் என்க.

## பாட்டின் பொருள் நலம்

செய்யுள் செய்யும் புலவர் தமது ஆழ்ந்த கருத்திற் றோன்றிய அரும் பொருள்கள் பலவற்றையும் சுருங்கிய சொற்களால் வெளியிடுகின்றமையின் அதனைக் கற்பார் மனம் தளர்ச்சியடையாவண்ணம் சிந்தைக்கும் செவிக்கும் இன்பந் தருவனவாகிய பலவகை யணிகளை ஆங்காங்க மைத்து அதனை அழகு செய்வாராயினர். அங்ஙனம் இயற்றப்பட்ட பொருள் நலன் சான்ற செய்யுட்களே கற் றோரால் விரும்பிக் கற்றுக்கொள்ளப்படுவனவாகும். கற் பார் மனவுணர்வைக் கவரும் பான்மைத்தான இயற்கை யழகு மிகுந்த பொருள்களைக் கூறும்போதெல்லாம் பொருள் கிடந்தவாறே உரைத்தும் அவற்றின் வேறான பொருள் களைக் கூறுங்கால் அப்பொருள்களோடு இயைந்த பிற பொருள்களை ஒப்புமை கூறியும் செல்வதை நல்லிசைப் புலவர் செய்த செய்யுட்களில் நன்கு காணலாகும். ஒரு பொருளோடு ஒரு பொருளினை ஒப்புமை கூறும் நெறி உவமை எனப்படும். இதுவே பலவகையான அணிக ளெல்லாம் தோன்றுவதற்குத் தாயகமாக அமைந்துள்ளது. இவ்வுவமை ஒன்றனையே வடமொழி நூல்களும் தென் மொழி நூல்களும் பலப்பலவாக விரித்து பலபல பெயர் களாற் கூறுவனவாயின. ஆயினும் அணிகளெல்லாம் இவ் வுவமை ஒன்றின் விகற்பங்களே யென்பது உண்மையறி வுடையார்க்கெல்லாம் தெள்ளிதிற் புலனாகும். இவ்வுண்

மையினை, ஆசிரியர் தொல்காப்பியனார் பொருளதிகாரத்தில் உவமவியல் என ஒன்றனை வகுத்து அதனைப்பலவாறு நன்கு விளக்கி ஏனையணிகளெல்லாவற்றையும் அதன்பாற்படுத்துக் கூறியவாற்றானு மறிக.

இனிப் பெரும்பாணாற்றுப்படை என்னும் இவ்வருமருந்தன்ன செய்யுளை எழுதிய நல்லிசைப் புலவராகிய உருத்திரங்கண்ணனார் பொருள்களைக் கிடந்தவாறே உரைத்துச் செல்லும்போது கற்பார்க்கு மனத்தளர்ச்சி வாராது கிளர்ச்சியும் அகமகிழ்ச்சியும் உண்டாக்கவேண்டி இடையிடையே அரியஉவமைகளை இனிதமைத்துச் செல்கின்றார். யாழினது நிறமூட்டப்பட்ட தோலினுக்குப்பாதிரிப்பூவினது வயிற்றிடத்தைப் பிளந்த உள்ளிடத்தையும் யாழின் தோற்போர்வையைத் தைக்குங் காழ் உண்டாகும் செறிந்த துளை ஒழுங்கிற்குக் கமுகினது பாளையாகியபசியபூ விரியாமற் கருவாயிருத்தலையும், பத்தரை மூடிய தோலின் பொருத்துவாய் தெரியாமல் இசைத்தலுற்ற தன்மைக்கு ஒன்றாக உருக்கி வார்த்தமையையும், உண்ணாக்கில்லாத இருள் செறிந்த வாயினுக்கு வற்றி உள்ளிருண்ட சுனையினையும், கவைத்தலையுடைய கடையினுக்குப் பிறை பிறந்து ஏந்தியிருத்தலையும், வார்க்கட்டினுக்கு மகளிர் முன்கையிற் செறிந்த குறுந்தொடியினையும், கருமை நிறத்தையுடைய பெரிய தண்டினுக்கு நீலமணி ஒழுகுவதனையும் உவமை கூறியுள்ளார். இன்னும் புரப்பாரைப் பெறாமையால் சுற்றத்தாருடன் பரிசிலரை நாடிச் செல்லும் பாணர்க்குப் பழுத்த மரத்தைத் தேடித்திரியும் பறவைகளையும், முடியுடை வேந்தர் மூவரினும் குற்றம் நீங்கும் இளந்திரையனின் தலைமையினுக்குக் கடலிடத்துப் பிறந்த சங்குகளில்

மேலாகக் கூறும் வலம்புரிச் சங்கினையும், சகடத்தில் உள்ள உருளையின் குறட்டினுக்கு மத்தளத்தையும், அச்சுமரத் தின்மேலே நெடியவாய் இரண்டு பக்கத்தும் கிடக்கின்ற பருஉக்கை மரங்களுக்கு கணைய மரம் இரண்டு சேர்ந்திருத் தலையும், தொத்துளிப் பாயினாலே வேயப்பட்ட ஒலிக் கின்ற சகடத்தினுக்கு மாரிகாலத்து மேகத்தைச் சூழ்ந்து நின்ற மலையினையும், சகடத்தின் முற்புறத்துக் கட்டி யிருக்கும் கோழிகிடக்கும் கூட்டினுக்குப் புனத்திலேயானை தின்னாமற் காப்பவர் இதண்மேலே சிறுகக் கட்டின குடிலி னையும், உரலினுக்கு யானையினது முழந்தாளையும், கயிற்றாலே வரிந்து கட்டப்பட்ட மிடாவினுக்கு வாரினால் இறுக்கிக் கட்டப்பட்ட முழவினையும், தோளிலே ஒரு பக்கத்திலே தூங்கும்படி வரிவிரவின கச்சினாலே கோக்கப்பட்ட வாளினுக்கு மலையிடத்தே ஊர்கின்ற பாம்பினையும், கழு தையின் முதுகிலே இருபுறத்தும் இடப்பட்ட மிளகுப் பொதியினுக்குப் பலாவினடியிலே குலைகொண்ட பெரிய பழத்தையும், வரியை முதுகிலேயுடைய அணிலினுக்கு முதுகு விரிந்து பஞ்சு தோன்றும் இலவங்காயினையும், மடலினடி தன்னிடத்தே நிற்க மேல் அறுப்புண்ட ஈந்தின் முதுகினுக்கு யாற்றினது அறலையும், ஈந்திலையின் கூர்மை யான முனையினுக்கு வேலின் முனையினையும், ஈந்திலை யாலே வேய்ந்த குடிலின் புறத்தினுக்கு எய்ப்பன்றியின் முதுகினையும், பன்றியினது வளைந்த கொம்பினுக்கு அகத் திப் பூவினையும், முயல்களின் நெடிய செவியினுக்கு தாம ரைப்பூவின் புறவிதழையும், அப்புக் கட்டினுக்கு தேனி றாலையும் நெல்லின் சிவந்த அவிழாகிய சோற்றினுக்கு ஈந்தின் விதையினையும், குறிஞ்சி நிலத் தலைவனுக்குப் புலிப்போத்தினையும், காவலாளர்களுக்கு தான் நினைத்த

விலங்கின் மேலே சென்று அதனைத் தப்பாமற் கொள்ளு கின்ற வேட்டை நாயினையும், தயிர் கடையும்போது உண் டாகும் மத்தின் ஆரவாரத்தினுக்குப் புலியின் முழக்கத் தினையும், தயிரிலே ஆடையின்மேற் புடைத்து நிற்கும் முகிழ்களுக்குக் குடைக்காளானுடைய வெள்ளிய முகைகளை யும், தினையரிசியாலாக்கின நிலுத்த சோற்றினுக்கு நண் டின் பார்ப்பினையும், வரகு முதலியன இட்டு வைக்கும் குதிர்க்கூட்டத்தினுக்குப் பிடித்திரளினையும், வரகுதிரிகை யினுக்கு யானையினது காலையும், குடிசைகள் வரகு வைக் கோலால் வேயப்பட்டிருத்தலுக்கு மாரிகாலத்திலே விசும் பிலே பரந்திருக்கும் மேகத்தையும், வரகின் அவிழாகிய சிறிய சோற்றினுக்குச் சிறுபூளையினது பூவையும், அவரை விதையினுக்கு வேங்கைப் பூவினையும், கலப்பையின் வளைந்த வாயினுக்குப் பிடியின் வாயினையும், அதன் கொழு வினுக்கு உடும்பினது முகத்தையும், காடையினது இளைய குஞ்சுகளுக்கு வெள்ளிய நிறத்தையுடைய கடம்பினது பூவையும், நண்டினது கவைத்த காலினுக்குக் கொல்லனது முறிந்த கொடிற்றினையும், தாதை நீளத்துக்குப் பூசிய மார்பினுக்குப் பொன்னையுரைத்து அதன் மாற்றைக் காணும் உரைகல்லினையும், தொழில் செய்வாரின் திரை யாத மெல்லிய தோலினுக்கு தகடாக்கின இருப்பினையும், பசுமையறும்படி முற்றின பெரிய செந்நெல்லி னுக்குக் குளவியினையும், சிலந்தியினது வெள்ளிய நூல் வலைக்குத் துகிலினையும், கரும்பாலையின் ஆரவாரத்தினுக்குத் தம்மை வருத்துகின்ற யாழி பாய்கையினாலே கலங்கிக் கூப்பிடும் யானை பலவற்றின் ஓசையினையும், கயல்களுக்கு அம்பினையும், இறவுக்கு வில்லினையும், நெல் முளையினுக்கு

புற்றுப்பழஞ் சோற்றையும், அகன்ற பொய்கையிடத்தே குவளை நீலம் முதலான நிறம் மாறுபடுதலையுடைய பூக்கள் பரந்திருத்தலுக்கு அகன்ற பெரிய வானத்திற் றோன்றும் இந்திரவில்லையும், மகளிர் கற்பினுக்கு அருந்ததியையும், மகரக்குழையினை எடுத்த சிச்சிலி யாகத்தூணிலிருத்தலுக்கு கூம்பின் மேலிட்ட அன்னவிளக்கினையும், மணிகள் கோத்த வடங்களையுடைய மகளிரின் மெல்லிய துகில் அசைதலுக்கு அரும்புகளையுடைய மெல்லிய கொம்புகளிலே பனிமாசுகிடந்து தவழ்தலையும், மகளிரின் நடைக்கு மயிலினையும், விண்ணைத் தீண்டும்படி உயர்ந்த கலங்கரை விளக்கத்திற்குத் தேவருலகுக்கு முட்டுக்காலாக ஊன்றிய பற்றுக்கோடினையும், யானைக்குக் குன்றினையும், சருச்சரையுடைத்தாகிய தெங்கின் அடிக்கு யானையின் உடம்பினையும், வெள்ளிய வாழைப்பழத்திற்குப் பிடியினது கவுளிடத்துக் கொம்புகளையும், கமுகுகளின் பெரிய தண்டிற்கு மழைத்தாரையினையும், பாம்பணையில் துயில் கொள்ளும் திருமாலுக்குக் காந்தளையுடைய பக்கமலையிற் கிடக்கும் யானையையும், குருக்கத்தியின் புறக்கென்ற புறத்தினையும் வரிகளையுமுடைய பூக்கள் மணலிடத்துக் குழிகளிலின்ற நீரிடத்து விழுந்து கிடத்தலுக்கு * நூல்போலச் சூழ்ந்து கிடக்கின்ற அப்பம் பாலிலே கிடத்தலையும், கள்ளுவார்த்து வைக்கும் பச்சைக் குப்பிகளுக்குக் கமுகின் சூற்கொண்ட வயிற்றையும், மகரவாய் என்னும் தலைக்கோலத்தைச் சேர்த்தின ஒளி பொருந்திய நுதலினுக்குச் செம்பாம்பு தீண்டின பிறையையும், நுகர்பொருள் குறைவற்ற துறையினுக்குத் துறக்கத்தையும், உலத்து நகரங்களில் பலரும் தொழ எடுத்த விளக்களில் மேலான வெற்றியை

* இது இக்காலத்து இடியப்பமென வழங்கப்படும்.

புடைய நீர்ப்பெயற்றென்னும் ஊருக்குப் பூவாமற்காய்க்கும் மரங்களில் பழத்தின் இனிமையால் மேலான பலாமரத்தையும், வெள்ளிய கோட்டையுடையதாய் இரத்த வெள்ளத்திலே இழுக்கப்பட்டுச் செல்லும் யானைப் பிணத்துக்குப் பிறையைச் சூடிய செக்கர் வானமாகிய அந்திக் காலத்தே உலாவும் கார்மேகத்தையும், பகைவரைத் தொலைத்த வெற்றியினையுடைய இளந்திரையனுக்குத் துரியோதனன் முதலிய நூற்றுவரைக் களத்தில் படும்படி வென்ற தருமன் முதலியோரையும், இளந்திரையனிடத்தே பல்வேறுபட்ட திறைப் பொருட்களோடே செல்லும் அரசர்களுக்கு மலையிலுள்ள பலபண்டங்களையும் வாங்கிக் கொண்டு கடலுக்குக் கொடுப்பதாகச் செல்லும் அருவியையும், யானை முதலிய திறைப்பொருளோடே நெருங்கா நின்று காலம் பார்த்திருக்கும் அரசர்க்கு, கங்கையைக் கடக்க விரும்பித் தோணி வருங்காலம் பார்த்திருக்கும் மாக்களையும், மந்திரச் சுற்றத்தோடே இருந்த அரசனுக்கு முந்நீர்க்கு நடுவே தன் கிரணங்களைப் பரப்பித் தோன்றும் ஞாயிற்றையும், பகைவர் மதில்களை அழித்து ஆண்டிருந்த அரசருடைய முடிக்கலம் முதலியவற்றை வாங்கிக்கொண்டு வீரமுடி புனையும் வெற்றியினை விரும்புதலுக்கு யானையைப் பாய்ந்த சிங்கக்குட்டி அவ்வியானையின் மத்தகத்தைக் கொள்ள விரும்புதலையும், அரசன் பெயருட் சிலவற்றைச் சொல்லிப் பாணன் புகழ்தலுக்கு இறைவிக்குப் பேய்மகள் சில நொடி சொல்லுதலையும், சிதறின சீரைக்குக் கொட்டைப்பாசியின் வேரையும், பட்டுத்துகிலினுக்குப் பாலாவியினையும் வெள்ளிக் கலங்களுக்கு ஆகாயத்தே தோன்றும் உடுக்களையும், கரிய மயிரிடத்தே சூட்டிய பொற்றாமரைக்கு மங்குல் வானத்துத் தோன்றும் திங்களையும உவமைகூறி ஆசிரியர் உருத்திரங்கண்ணனார் இப்பாட்டை மிகவும் அழகுபடுத்தியிருத்தல் காண்க.

இன்னும் இப்பைந்தமிழ்ப் பாவலர் உலகியற்பொருட்களை உள்ளவாறு உரைத்துச் செல்லுமிடத்துப் பலகிரணங்களையுடைய ஞாயிறு அகன்ற ஆகாயத்தின் கண்மேலே தோன்றிப் பரந்த இருளை நீக்குதலும், பூவினிடத்து வண்டு கிடத்தலும், ஞாயிறுந் திங்களும் மேருவை வலஞ் செய்தலும் மழையின்மையால் நிலத்தின்கண் எழுந்த ஆவி மலையைச் சூழ்ந்திருத்தலும், வறட்சிமிக்க காட்டில் மேகம் துளியைச் சொரிய ஆங்கு உழவு முதலிய தொழில்களால் ஆரவாரம் மிகுதலும், ஆறலைகள்வர் வழிப்போவாரை அலறும்படியாக வெட்டி அவர்களிடத்துள்ள பொருளைக் கொண்டு வாழ்தலும், மாரிகாலத்தில் மலையானது மேகத்திரளாற் சூழப்பட்டிருத்தலும், யானை தின்னுமாற் புனத்தைக் காவல் செய்வார் பரண்மீது குடில் அமைத்து அதில் இருத்தலும், நாடக மகளிர் ஆடுங்களத்தே மத்தளங் கொட்டுதலும், பிறநாடுகளினின்றும் போந்த வியாபாரிகள் மாணிக்கம் முத்து சந்தனம் முதலிய பொருட்களைக் கொண்டு திரிந்து விற்றலும், பகைவரைக் கொன்ற போர்க்களத்திற் பருந்துகள் படிதலும், முல்லை நிலத்தூர்களின் வீட்டுத் தூண்களில் ஆடுகள் நின்று தின்னும்படியாகத் தழைகள் கட்டப்பட்டிருத்தலும், வில்யாழ் ஒலியை வண்டுகள் தம் சுற்றத்தின் ஓசையெனக் கருதிச் செவி கொடுத்துக் கேட்டலும், காடுகளில் விடத்தர் முதலிய முள்ளுடை மரங்கள் வளர்ந்திருத்தலும், தோட்டத்துப் பயிர்களை உளவர் அறுக்காலத்துண்டாகும் ஆரவாரத்திற் கஞ்சி அங்கே தங்கிய காடை தன் பறத்தலாற்றாத குஞ்சுகளைக் கூட்டிக் கொண்டு முல்லை நிலத்தே சென்று தங்குதலும், கொல்லன் உலையில் மெத்தென்ற துருத்தியை அமுக்கி ஊதுதலும், வயல்களிலே சேற்றின்கண் உண்டாகிய நண்டு

களின் புற்று அழியும்படியாகப் பசிய கோரைப்புற்களைக் கரிய கடாக்கள் கொம்பினாலே குத்துதலும், அவலையிடிக்கும் உலக்கை ஓசையைக் கேட்ட கிளிகள் அதனைப் பகையாக நினைத்து அஞ்சுதலும், சிறு தேர்களை உருட்டித் திரிந்த பிள்ளைகள் தங்களைப்பு நீங்கும்படியாகச் செவிலித் தாயருடைய பாலை நிறையவுண்டு படுக்கையிலே துயில் கொள்ளுதலும், ஆலையாரவாரிக்கும் இடையறாத ஓசையையுடைய புகைசூழ்ந்த கொட்டில்களில் கருப்பஞ் சாற்றைக் கட்டியாகக் காய்ச்சுதலும், நீண்ட கோடைக் காலத்தும் குளங்களில் நீர் வற்றாதிருத்தலும், நீராடு மகளிர் நீருண்ணுந் துறையிலே போகவிட்டுப்போன மகரக்குழையினை சிச்சிலி இரையெனக் கருதி எடுத்துக் கொண்டு பறவைகள் நிறைந்த பனை மடலிற் போகாது அந்தணர் யாகசாலையில் நட்ட யூபத்தின் மேலே இருத்தலும், மேற்றிசைக் கண்ணுள்ள குதிரைகளையும் வடதிசைக் கண்ணுள்ள நுகரப்படு பொருட்களையும் கொண்டுவந்து தரும் மரக்கலங்கள் கடற்கரையிலே சூழ்ந்து கிடத்தலும், எருதுகளுடன் பசுக்கள் அணுகாத படியாக மேழகக்கிடாயோடே நாயும் சுழன்று திரிதலும், கள்ளுக் கடைகளின் வாயிலிலே பசிய கொடிகள் அசைந்து கொண்டிருத்தலும், ஆண்பன்றிகள் புணர்ச்சிக் கருத்தால் பெண்பன்றிகளுடனே போகாவண்ணம் குழிகளிலே விட்டு நெல்லை இடித்த மா உணவைத் தின்ன வைத்து வளர்த்தலும், கலங்கரை விளக்கம் விண்ணைத் தீண்டும்படியாக உயர்ந்திருத்தலும், வழிச் செல்வோர் தம்பசிதீரும்படி சோற்றை யாக்குகின்ற பானை அசைந்து அடுப்பினின்றும் விழும்படியாகத் தென்னையிலிருந்து காய் கீழே விழுதலும், ஞாயிற்றின் கதிர் நுழைந்தறியாத இலைநெருங்கிய இளமரக்காவில் குயில்கள்

நுழைந்து செல்லுதலும், குருக்கத்தி காஞ்சிமரத்தைச் சூழ்ந்து படர்ந்திருத்தலும், பாகர் கவனமில்லாதிருக்கும் சமயத்தைப் பார்த்திருந்து யானைக்கு வைக்கப்பட்ட உணவினை மந்தி திருடிக் கொண்டுபோய்த் தின்னுதலும், அருவி பொன்னைக் கொழித்துக் கொண்டு மலையினின்று இழிதலும், தேர்கள் பலகால் ஓடுதலினால் தெருக்கள் குழிந்திருத்தலும், கொல்லனது கூடத்திலெழுந்த ஓசைக்குப் பயந்து மாடத்திலிருக்கும் புறாக்கள் துயிலொழிந்திருத்தலும், பேய்கள் துணங்கைக் கூத்தையாடுதலும், மேகம் கடலிடத்து நீரை முகந்து மழைபெய்தலும், முசுக்கலைகள் பாய்தலால் காட்டுமலை மலர்கள் சிந்திக்கிடத்தலும், முனிவர்கள் யானை முறித்துக்கொண்டு வந்த சமிதையாலே வேள்வியைச் செய்தலும், பிறவும் ஓவியப் புலமை சான்ற ஒருவன் சித்திரபடாத்துத் தீட்டிக்காட்டியவாறு இவ்வாசிரியரால் நன்கு காட்டப்பட்டுள்ளன.

இன்னும் இவ்வாசிரியர் உலகவியற்கைப் பொருட்களின் தோற்றங்களை நன்கு அவதானிக்கும் நீர்மையுடையாரென்பது இப்பாட்டினால் அறியக்கிடக்கின்றது. பறவைகள் பழுத்த மரங்களைத் தேடித் திரியுமென்பதும், கடலிடத்து வலம்புரி முதலியன சங்கு பிறக்குமென்பதும், காட்டின்கண் வாழும் புலி பாம்பு முதலியன வழிச் செல்வார்க்குத் துன்பம் விளைக்குமென்பதும், நல்ல பலாப்பழம் சிலவாகிய சுளைகளையுடையதாயிருக்குமென்பதும், கழுதைக்குச் செவி நிமிர்ந்திருக்குமென்பதும், எய்ப்பன்றியின் முதுகில் முள்ளுப் பரந்திருக்குமென்பதும், பாலைநிலத்தின்கண்ணே நீரின்மையால் மான்கள் மயங்கித்

திரியுமென்பதும், முயல்கள் பசிய தூறுகளின் கண்ணே மறைந்து கிடக்குமென்பதும், நன்கு கூறப்பட்டிருக்கின்றன. இன்னும் அகத்திப்பூ விளைந்திருத்தலும், தாமரைத் தண்டு முள்ளுடைத்தாயிருத்தலும், களர்நிலங்களில் ஈந்து வளர்ந்திருத்தலும், விடியற்காலத்தே பறவைகள் துயிலெழுதலும், புலி காட்டிலே முழங்குதலும், வேங்கை மரம் கொத்துக் கொத்தாகப் பூத்தலும், காடையின் கழுத்து கருமையாயும் கால் குறியதாயும் இருத்தலும், நண்டின்கால் கவைத்திருத்தலும், வயல்களில் நெய்தல் பூத்திருத்தலும், முற்றிய நெற்கதிர்கள் விளைந்திருத்தலும், பழைய மருதமரத்திலே பாம்புகள் உறைதலும், நெற்போர்களின் அடிப்பக்கங்களிலே சிலந்தியின் வெள்ளிய நூல் சூழ்ந்து கிடத்தலும், மலைப் பக்கங்களிலே நெடிய மூங்கில்கள் வளர்ந்திருத்தலும், யாளி பாய்கையினாலே யானைகள் பயந்து சத்தமிடுதலும், ஆழமான பெரிய குளங்களிலே கயல் இறவு முதலியன வசித்தலும், புற்றின்கண்ணே பாம்பு கிடத்தலும், நெடிய குளத்திலேயுள்ள வாளைமீன் நீர்க்கு அணித்தாக நின்ற பிரப்பினது காற்றினால் அசையும் நிழலை நீரிலே கண்டு அஞ்சுதலும், அகன்ற வானத்திலே வானவில் பலநிறங்களையுடைத்தாய்த் தோன்றுதலும், அருந்ததி நட்சத்திரம் வடக்கின்கண்ணே காணப்படுதலும், சிச்சிலி நீலமணி போலும் நிறத்தையுடையதா யிருத்தலும், மயில்கள் மனமகிழ்ச்சியால் மலைப் பக்கங்களிலே ஆரவாரித்தலும், பன்றிகள் குட்டிகளுடனே சேற்றை அளைதலும், பலா பெரும் பழங்களைக் குலைகுலையாகக் காய்த்தலும், தேங்காய் முப்புடைத்தாய்த் திரண்டிருத்தலும், மலைப்பக்கங்களிலே காந்தட் செடிகள் நீண்ட பூங்கொத்துக்களுடனே

கிடத்தலும், கமுகின் தாள்கள் திரண்டிருத்தலும், இமூ மென்னும் ஓசையையுடைய புறாக்கள் தொகுதியாய் மெலிய மரக்கொம்பர்களிற் றங்கியிருத்தலும், அந்திக்காலத்திலே வானம் சிவந்து தோன்றுதலும், புறாவின்கால் சிவந்திருத்தலும், யானையின்மேற் பாய்ந்த சிங்கக்குட்டி அதன் மத்தகத்தைக் கொள்ள விரும்புதலும், தாமரைப் பூவிலே வண்டுகள் ஒலித்தலும், மலைச்சாரலிலே கின்னரமென்னும் பறவை இனிமை பொருந்தப் பாடுதலுமாகிய இயல்புகளை ஆசிரியர் உருத்திரங்கண்ணனார் அழகாகக் கூறியிருக்கின்றார்.

## பாவும் பாட்டின் நடையும்.

பா என்பது பரந்துபட்டுச் செல்லுகின்ற செய்யுள் ஓசையின் அமைதியாகும். சேட்புலத்திருந்த ஒருவன் ஒரு செய்யுளைப்பாட அவன் சொல்லுகின்ற செய்யுளின் எழுத்துஞ் சொல்லும் இவையென்று தெரியாதாயினும் இஃது இன்ன செய்யுள் என்று உணர்த்தற்கேதுவாகிப் பரந்துபட்டுச் செல்லும் ஓசையே பா என்று தொல்காப்பியச் செய்யுளியலுரையிலே பேராசிரியரும் கூறியமை காண்க. இங்ஙனம் பரந்துபட்டுச் செல்லும் ஓசை அமைதியை வெண்பா, அகவற்பா, கலிப்பா, வஞ்சிப்பா, என நால்வகைப்படுத்துக் கூறுவர் பண்டைக்காலத் தண்டமிழாசிரியர். "ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியே, நாலியற் றென்ப பாவகை விரியே" எனத் தொல்காப்பியனார் நால்வகைப் பாக்களையுங் கூறியிருத்தலுங் காண்க. இங்ஙனம் பாவினது விரி நான்கென்றமையின் தொகையுமுண்டென்பது பெற்றாம். அந்நான்கு பாவினதும் ஓசைத் தன்மையை ஆராய்ந்து தொகுக்குங்கால் அவை ஆசிரியமும் வெண்பாவும் என இரண்டாகித் தொகும். அங்

னம் இரண்டாமிடத்து வெண்பாவின் விகற்பமாகிக் கலிப்பா விரிந்தடங்கும்; அகவற்பாவின் விகற்பமாகி வஞ்சிப்பா விரிந்தடங்கும். இதனைப் "பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின், ஆசிரியப்பா வெண்பா வென்றாங், காயிரு பாவினு ளடங்கு மென்ப" எனவும் "ஆசிரிய நடைத்தே வஞ்சி யேனை, வெண்பா நடைத்தே கலியென மொழிப" எனவும் வரும் தொல்காப்பியச் சூத்திரங்களால் அறிக.

இவற்றுள் ஆசிரியப்பாவுக்குரிய 'அகவலோசை' என்பது ஒருவன் தான் கருதியவாறெல்லாம் வரையாது சொல்லும் வழி தொடர்ந்து கிடந்த ஒலியாகும்; இதனிடைங்கும் வஞ்சிப்பாவிற்குரிய 'தூங்கலோசை' என்பது அடியிற் றூங்காது சீர்தொறுந் தூங்கும் ஓசையாகும்; வெண்பாவிற்குரிய செப்பலோசை யென்பது அழைத்துக் கூறாமல் ஒருவனுக்கு மற்றொருவன் இயல்புவகையானே ஒரு பொருள் கட்டுரைத்தற்கண் எழுகின்ற ஒலியாகும்; இவ்வோசையி லடங்கும் கலிப்பாவிற்குரிய 'துள்ளலோசை' என்பது ஒழுகுநடைத்தாய்ச் செல்லலின்றி இடையிடையே உயர்ந்து செல்வதாம்.

இனி பெரும்பாணாற்றுப்படை என்னுமிப்பாட்டு அகவலோசை அமைந்து வந்த நேரிசை ஆசிரியப்பாவிற் செய்யப்பட்ட தொன்றாகும். ஆசிரியர் உருத்திரங் கண்ணனார் தாம் உரைப்பக் கருதிய உயர் பொருளனைத்தையும் ஒரு நெறிப்பட வைத்து ஐந்நூறு அடிவரையும் உரைத்துள்ள இப்பாட்டின் ஒவ்வோர் அடியும் நான்கு சீர்களாலானவை. இவ்வாறு நாற்சீர்கொண்ட அடியை ஆசிரியர் தொல்காப்பியனார் அளவடி என்பர். இவ்வளவடியையே அடி எனச் சிறப்பித்து "நாற்சீர் கொண்ட

தடியெனப்படுமே" என ஆசிரியர் தொல்காப்பியனார் சூத்திரஞ் செய்திருத்தலுங் காண்க. பண்டைக்காலத்துப் புலவர்கள் நாற்சீர்கொண்ட அளவடியிலேயே செய்யுள் செய்தாரென்பது "தலையிடைகடைச் சங்கத்தாரும் பிற சான்றோரும் நாற்சீரடியான் வரும் ஆசிரியமும் வெண்பாவும் கலியுமே பெரும்பான்மையுஞ் செய்தார்" எனத் தொல்காப்பியச் செய்யுளியலுரையிலே பேராசிரியர் கூறுமாற்றான் அறியலாகும். இப்பாட்டிலுள்ள எல்லோர் அடிகளிலும் அமைந்த சீர்கள் ஒவ்வொன்றும் இரண்டு அசைக்குக் குறையாமலும் மூன்று அசைக்கு மேற்படாமலும் வந்துள்ளன.

ஆசிரியர் உருத்திரங்கண்ணனார் இச்செய்யுளில் அகவலோசை கேட்போர்க்கு இன்பம் பயக்குமாறு எதுகை மோனை முதலிய எழுத்தமைதிகளாற் சிறிது சிறிது வேறுபடுத்திச் சிறப்பித்துச் செல்லுகின்றார். "இலங்கு நீர்ப்பரப்பின் வளைமீக் கூறும், வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பின்" என்பனபோல இவ்விரண்டடிகளின் முதற் சீர் எதுகை ஒன்றுமாறு அமைக்கின்றார். சிலவிடங்களில் "கடம்பமர் நெடுவே ளன்ன மீளி, யுடம்பிடித் தடக்கை யோடா வம்பலர், தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட" என்பனபோல மூன்றடிகளின் முதற்சீர் எதுகை ஒன்றுமாறு அமைக்கின்றார். வேறு சிலவிடங்களில் "படைதொலை பறியா மைந்துமலி பெரும் புகழ்க், கடைகால் யாத்த பல்குடி கெழீஇக், கொடையுங் கோளும் வழங்குநர்த் தடுத்த, வடையா வாயின் மிடை சூழ் படப்பை" என்பனபோல மூன்றடிகளின்மேலும் முதற் சீர் எதுகை ஒன்றுமாறு அமைக்கின்றார். பின்னும், சிலவிடத்து "பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்"

"மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கும்." என்பனபோல முதற் சீரும் இரண்டாஞ் சீரும் எதுகை பொருந்தவும், "வாய்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பை" "இரு நிலங் கடந்த திருமறு மார்பின்" என்பனபோல முதற் சீரும் மூன்றாஞ் சீரும் எதுகை பொருந்தவும், "வல் லாற்றுவரி தோண்டித் தொல்லை" "முந்நீர் வண்ணன் பிறங்கடை யந்நீர்" என்பனபோல முதற்சீரும் நான் காஞ் சீரும் எதுகை பொருந்தவும், "வேண்டிய வேண் டிய வேண்டினர்க் கருளி" "கொண்டி யுண்டித் தொண் டையோர் மருக" என்பனபோல முதற்சீரும் இரண் டாஞ்சீரும் மூன்றாஞ் சீரும் எதுகை பொருந்தவும், "மலர் தலையுலகத் துள்ளும் பலர் தொழ" "மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்து" என்பனபோல முதற்சீரும் இரண் டாஞ்சீரும் நான்காஞ்சீரும் எதுகை பொருந்தவும், "வன் புல மிறந்தபின்றை மென்மேறல்" என்றாற்போல முதற் சீரும் மூன்றாஞ் சீரும் நான்காஞ் சீரும் எதுகை பொருந் தவும் அமைத்திருக்கின்றார்.

இன்னும் ஓரோவிடத்து "நீர் நணிப் பிரப்பி னடுங்கு நிழல் வெரூஉ, நீத்துடை நெடுங்கயந் தீப்பட மலர்ந்த" என்பனபோல இவ்விரண்டடிகளின் முதற்சீர் மோனை ஒன்றுமாறு அமைக்கின்றார். மற்றும் ஓரோவிடத்து "சாயஞ் சார்த்திய கணைதுஞ்சு வியனகர்" "பல்காற் பறவை கிளைசெத் தோர்க்கும்" என்பனபோல ஓரடியி னுள்ளே முதற்சீரும் இரண்டாஞ் சீரும் மோனை ஒன் றவும், "மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கும்" "பல் வேற் றிரையற் படர்குவி ராயின்" என்பனபோல முதற் சீரும் மூன்றாஞ்சீரும் மோனை ஒன்றவும், "முனைசூழ் தகட்ட பிறழ்வாய் முள்ளி" "கருங்கோட் டின்னிய மியக் கினிர் கழிமின்" என்பனபோல முதற்சீரும் நாலாஞ்

சீரும் மோனை ஒன்றவும், "மல்லல் மன்றத்து மதவிடை கெண்டி" "தண்பணை தழீஇய தளரா இருக்கை" என்பன போல முதலாம் இரண்டாம் மூன்றாம் சீர்கள் மோனை ஒன்றவும், "மல்லற் பேரூர் மடியின் மடியா" "சுறவொடு யமைத்த சுரும்புசூழ் சுடர்நுதல்" என்பனபோல முத லாம் மூன்றாம் நான்காம் சீர்கள் மோனை ஒன்றவும், "மள்ளர் மள்ள மறவர் மறவ" என்பதுபோல நான்கு சீர்களும் மோனை ஒன்றவும் அமைத்திடுகின்றார்.

இன்னும் சில சில இடங்களிலே "இன்சுவைமூரற் பெறுகுவிர் ஞாங்கர்" "முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவில்" என்பனபோல இணையியைபு பொருந்தவும், "வில்லுடை வைப்பின் வியன்காட் டியவின்" "வளைமறப் பேனம் வரவுபார்த் திருக்கும்" என்பனபோல பொழிப் பியைபு பொருந்தவும், "அரும் பொருள் அருத்தும் திருந் து தொடை நோன்றாள்" "யாற்றறல் புரையும் வெரிநு டைக் கொழுமடல்" என்பனபோல ஒரூஉ வியைபு பொருந்தவும், "மலையவும் கடலவும் மாண்பயந் தரூஉம்", என்பதுபோல மேற்கதுவாயியைபு பொருந்தவும் அமைத் திடுகின்றார். இன்னுஞ் சில இடங்களில் "பெருநல் வானத்து வடவயின் விளங்குஞ், சிறுமீன் புரையுங் கற்பி னறுநுதல்" "பெருங்கை யானைக் கொடுஞ்சொடி படுக்குங், கருங்கைக் கொல்ல னிரும்பு விசைத் தெறிந்த" என்பன போல அடிமுரண் பொருந்தவும், சிறுசுளைப் பெரும்பழங் கடுப்ப மிரியல்" "இளையரு முதியருங் கிளையுடன் துவன்றி" என்பனபோல இணைமுரண் பொருந்தவும், "நெடுந்தாட்பு தொடுத்த குறுந்தறி முன்றில்" "செந்தீத் தோட்ட கருந் துளைக் குழலின்" என்பன போலப் பொழிப்புமுரண் பொருந்தவும் "குறுங்கா லுலக்கை யோச்சிநெடுங்கிணற்று"

“குறுங்காற் காஞ்சி சுற்றிய நெடுங் கொடி” என்பனபோல ஓரூஉ முரண் பொருந்தவும், அமைத்திடுகின்றார். இங்ஙனம் எதுகைமோனை முதலானவற்றைப் பலவாறாக அமைத்து இச்செய்யுள் ஓசையினைச் சிறப்பித்துச் செல்வாராயினர். தாம் எண்ணிய பொருள்களை நிரல்பட வைத்து மொழிந்து போகுங்கால் இங்ஙனம் எதுகை முதலாயின பலவாறாக இடர்ப்பாடின்றி அமைந்தனவாகும். அங்ஙனம் அமைந்துவரச் செய்யுள் செய்தல் இவர் காலத்தும் இவர்காலத்துக்கு முன்பும் விளங்கிய பழைய தமிழ்ப் புலவர்களின் பொதுவியல்பாகும். பிற்காலத்தில் செய்யுள் செய்த புலவர் பலரும் எதுகை மோனை நயங்கள் அமைந்து வருதலையே பெரிதுங் கருதி அவற்றினுக்கேற்பச் சொற்களைப் பொருத்துவாராயினர். அங்ஙனம் அமைக்குமிடத்தும் முதலிலிருந்து முடிவுகாறும் ஒரே ஒழுங்குபெறத் தொடுப்பாராயினர். அகவற்பாப் பாடிய புலவர்கள் முதல் தொடங்கி இறுதி வரையில் முதற்சீரும் மூன்றாஞ் சீரும் எதுகை பொருந்துமாறு செய்தனர். அவ்வாறு எதுகை முதலியவற்றை ஒரே ஒழுங்கில் அமைந்துவரத் தொடுத்தலினால் ஓசைவேறுபாடு சிறிதுமின்றிக் கற்போர்க்குச் சுவை மிகுதியும் பயவாதொழிந்தன.

இனி, இப்பாட்டின் உயரிய நடையொழுங்கு மிகவும் வியக்கற்பாலது. இதன்கண் விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையுமமையுமாறு பொருள்வளம் மிகுந்த சொற்கள்பல தொடர்ந்துள்ளன. “கணங்கொள் சுற்றமொடு கைபுணர்ந் தாடுந், துணங்கையம் பூதந் துகிலுடுத் தவை போல்” “விண்பொர நிவந்த வேயா மாடத், திரவின் மாட்டிய விலங்குசுடர் ஞெகிழி” “முறைவேண்டு நர்க்குங்

குறைவேண்டு நர்க்கும், வேண்டுப வேண்டினர்க் கருளி, யிடைதெரிந் துணரு மிருடீர் காட்சிக் கொடைக் கட னிறுத்த கூம்பா வுள்ளத், துரும்பில் சுற்றமோ டிருந் தோற் குறுகி'' என்பனபோன்ற சில அடிகளை நோக்கி னும் இழுமென்னும் ஓசை இனிது விளங்கக் காணலாம். கன்னற்பாகினை எம்மருங்கிற் சுவைப்பினும் ஆண்டெல் லாம் தித்திப்பு மிக்குத் தோன்றுதல்போல இப்பாட் டின் எப்பகுதியை நோக்கினும் ஆங்கெல்லாம் இனிமை தோன்றக் காணலாகும்.

அந்தமிலின்பம் ஆர்தரப் புரியும் செந்தமிழ்மொழி யின் கண்ணுள்ள பொருட்கரு நிரம்பிய சொற்கள் பல வற்றால் இப்பாட்டு முழுதும் அமைந்திருக்கின்றது. விலை மதித்தற்கரிய ஒரு ஆரத்தின்கண் அமைந்த நேரிய மணிகளொவ்வொன்றும் நிரல்படத் தொடர்ந்து அழகு பெற்று விளங்குதல்போல இதன்கண்ணுள்ள சொற்க ளொவ்வொன்றும் ஒன்றோடொன்று ஒழுங்குபெறத் தொடர்ந்து பொருணலம் மிகுத்து விளங்குவனவாயின.

இனி, இப்பாட்டில் சற்றேறக்குறைய இரண்டாயி ரத்தைந்நூறு சொற்கள் வரையில் அமைந்திருக்கின் றன. அவற்றுள் 'மதி' 'சகடம்' 'நாடகம்' 'பதி' 'சாபம்' 'தண்டு' 'சாதி' 'எந்திரம்' 'நீலம்' 'ஓதிமம்' 'காமினியம்' 'படிவம்' 'படம்' 'கணம்' 'பூதம்' 'பருவம்' 'கங்கை' என் பனபோலச் சில வடசொற்களும் 'ஞமலி' 'சொன்றி' 'செறு' என்பனபோலச் சில திசைச் சொற்களும் வந் துள்ளன. திசைச் சொற்களுள் ஞமலி என்பது பூழி நாட்டிற்கும், சொன்றி என்பது தென்பாண்டி நாட் டிற்கும், செறு என்பது அருவா நாட்டிற்கும் உரிய

திசைச்சொற்களாகும். ஆகவே இப்பாட்டின்கண் நூற்றுக்கு மூன்று வீதம் பிறநாட்டுச் சொற்கள் கலந்துள்ளன. இதனால் இவ்வாசிரியர் காலத்தில் தமிழ்மொழி பிறமொழிக் கலப்புப் பெரிதுமின்றி வழங்கப்பட்டு வந்ததென்பது அறியத்தக்கது.

## பண்டை நாள் வழக்க வொழுக்க வரலாற்றுக் குறிப்புகள்.

இனி, இப்பாட்டினால் பண்டைக்காலத்து நிகழ்ந்த வழக்க ஒழுக்கங்கள் சில அறியப்படுகின்றன. தமிழ்நாட்டை நெறிமுறை வழாது ஆளுகை செய்த சேர சோழபாண்டிய ரென்னும் முடியுடை வேந்தர் மூவரும் யானை, குதிரை, தேர், காலாள் என்னும் நால்வகைப் படைகளையும் உடையராயிருந்தனர். அரசரைச் சூழ மந்திரச் சுற்றத்தார் இருந்தனர். அரசர்கள் தூய அறிவினராய் நடுவுநிலையில் வழுவாது ஒழுகினர். முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும் அவரவர் விரும்புவனவற்றை வேண்டியவாறு அருளிச்செய்தனர். தாம் பிற அரசர்களோடு பகைமைகொண்டகாலத்து அவர்களது காவல் பொருந்திய மதில்களை அழித்து ஆண்டிருந்த அரசர்களுடைய முடிக்கலம் முதலியவற்றைவாங்கிக்கொண்டு பட்ட வேந்தன் பெயராலே வீரமுடி புனையும் வழக்கமுடையராயிருந்தனர். இப்பண்டைய வழக்கத்தினை "இகன்மதிற் குடுமிகொண்ட மண்ணுமங்கலம்" என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியிருத்தலுங் காண்க. தம்முடனே பொருத பகையரசர்களின் தேயத்தூர்களின்மேற் சென்று மன்றுகள் முதலியன இன்றாமாறு அழிவுசெய்தும் வந்

தனர். வலிகுறைந்த மன்னர்கள் யானை முதலிய பல வகைப்பட்ட திறைப்பொருட்களைக் கொண்டுசென்று அரசனைக் காணும் செவ்வி பார்த்திருந்து அவற்றை வைத்துப் பணிந்தனர். ஊர்களினுள்ளே வரும் பெருவழிகளையும் கவர்த்த வழிகளையும் காக்கும் பொருட்டு வில்வீரரை வைத்திருந்தனர். அவ்வழிகளான் விற்பதற்கு ஊரினுள்ளே கொண்டு வரும் பொருள்களுக்குச் சுங்கம் வாங்கப்பட்டு வந்தது. அரசர்கள் சுங்கம் வாங்கும் வழக்கத்தை ஆசிரியர் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரும் "உறுபொருளும் உல்கு பொருளும் ஒன்னார்த் தெறுபொருளும் வேந்தன் பொருள்" எனக் குறிப்பிட்டிருத்தல் காண்க.

இனி, இற்றை ஞான்றைப் போலவே அற்றை நாளிலும் தமிழ்நாட்டார் மரக்கலங்களிலே கடல்வழியாகச் சென்று வாணிகம் நடாத்திவந்தனர். வேறுநாடுகளிலிருந்து குதிரைகளும் பல்வேறு வகைப்பட்ட பொருட்களும் கலத்தின் வழியாக இறக்குமதியாயின. இராக்காலத்தில் மரக்கலங்கள் துறையிருக்கும் இடம் இதுவென அறிந்து அதனை நோக்கி வரும்பொருட்டு கடற்றுறைகளில் கலங்கரை விளக்கம் (Light House) அமைக்கப்பட்டிருந்தது. அது விண்ணைத் தீண்டும்படியாக அதிகம் உயர்ந்ததாய் மேற்புறம் சாந்து வாரப் பெற்றதாய் மேலே ஏறற்பொருட்டு ஏணி சாத்தப் பெற்றதாய் விளங்கினது. அக்காலத்தில் தமிழ்நாட்டாருடனே வாணிகஞ் செய்தவர் யவனராவர். இவர்கள் கலங்களின் கூம்புகளில் அன்னவிளக்கினை இராக்காலத்தில் ஏற்றினர்.

மகளிர் தலையிலே சுறுவினது அங்காந்த வாய்போலச் செய்த மகரப்பகுவாய் எனப் பெயரிய அணியை

யும் காதிலே குழையினையும், காலிலே பொற்சிலம்பை யும் அணிந்து வந்தார்கள். மகளிர் விளையாட்டினையுடைய கிளேளாடே நீருண்ணுந் துறைக்குச் சென்று நீர் விளையாடியும் உயர்ந்த மாடங்களிலேயிருந்து பந்தடித்தும் வார்ந்த மணல் முற்றங்களிலே பொற்சழங்காடியும் வந்தார்கள். "கோதை வரிப் பந்து கொண்டெறிவார்" எனப் பரிபாடலினும், "செறியரிச் சிலம்பிற் குறுந்தொடி மகளிர், பொலஞ்செய் கழங்கிற் றெற்றியாடும்" எனப் புறநானூற்றினும் பந்து கழங்கு ஆடுதலாகிய வழக்கங்கள் குறிக்கப்பட்டிருத்தல் காண்க.

அந்தணர் வேதமோதியும் அவ்வோசையைத் தாம் வளர்க்கும் கிளிகளுக்குக் கற்பித்தும் வந்தனர். வீடுகளிலே தாம் வழிபடு தெய்வ வுருவங்களை வைத்திருந்தனர். வீட்டினைப் பசுவின் சாணத்தால் மெழுகிச் சுத்தஞ்செய்யும் வழக்கமுடையர். யாகஞ்செய்தலைத் தமது இன்றியமையாத கடமையாக மேற்கொண்டொழுகினர். அந்தண மகளிர் மாவடுவினால் ஊறுகறி செய்யும் வழக்கம் இதனுட் குறிக்கப்பட்டுள்ளது.

இன்னும் இடைக்குல மகளிர் விடியற்காலையில் எழுந்து தயிர் கடைதலும் காலையில் மோரைக் கொண்டுசென்று நெல்லுக்கு விற்றலும் நெய்யை விற்று எருமை பசு முதலியவற்றை வாங்குதலும் வழக்கம். இடையர் ஆடுமாடுகளைத் துரத்துவதற்குச் சீழ்க்கை விடும் வழக்கமுடையர். "இடையன் மடிவிடு வீளை கடிது சென்றிசைப்ப" என அகநானூற்றினும் இவ்வழக்கம் குறிக்கப்பட்டிருத்தல் காண்க. முல்லைநிலத்திலே உழுதுண்பவர்கள் வரகரிசியோடு அவரைப்பருப்பையிட்டுப் பொங்கி யுண்பர். வலைஞர் கொழியலரிசியிலிருந்து செய்த நறிய கள்ளுடனே

சுட்ட மீனை உண்டும், தொழில் செய்வார் வெள்ளிய நெற்சோற்றைக் கோழியூனுடன் உண்டும், மறவர் நெல்லாற் செய்த தோப்பிக்கள்ளைப் பருகிக் கொழுவிய கிடாயின் தசையை உண்டு மத்தளத்தையடித்து மகிழ்ச்சியுடன் ஆடியும் வந்தனர். யானைப்பாகர் யானைகளுக்குக் கவளங் களுடனே நெய்யைக் கலந்து ஊட்டினர்.

இன்னும், பொதிகளைக் கழுதையின் முதுகின்மேல் இட்டுச் செல்லுதலும், உப்பு முதலிய பண்டங்களை வண்டிகளில் ஏற்றிக்கொண்டு சென்று விற்றலும், ஈந்திலை வரகு வைக்கோல் தென்னோலை இவற்றால் சிறு வீடுகளை வேய்ந்துகொள்ளுதலும், தோலைப் பாயலாக எயினர், இடையர் முதலியோர் உபயோகித்தலும், பார்வை மிருகங்களைப் பழக்கி அவற்றின் உதவியால் மற்றைய மிருகங்களைப் பிடித்தலும், வேட்டை நாய்களின் உதவியால் உடும்பு முதலியவற்றை அகப்படுத்தலும், வீடுகளிலே நாய்களைச் சங்கிலிகளாலே பிணித்துக் காவலுக்காக வைத்திருத்தலும், சிறு தெய்வங்களுக்குப் பலியிடுதலும், பகைப்புலத்தே சென்று கொள்ளையடித்துக்கொண்டுவந்த பசுக்கூட்டங்களைக் கள்ளுக்கு விலையாகப் போக்கலும், நெல்லு முதலிய தானியங்களைக் குதிர்களிலே இட்டு வைத்தலும், நிலவுவிலே புல்லரிசியைபிட்டுக் குத்தலும், குளங்களிலே கைகளை மேலே கூப்பி முழுகி நீரிலே காட்டுதலும், தூண்டிலினாலே மீன் பிடித்தலும், யானைக்குப் பூணணிதலும், காஞ்சி நகரத்திலே பலசமயத்தவரும் தொழும்படியாக விழாச்செய்தலும், முனிவர்கள் மலைச் சாரலிலே தீ வளர்த்து யாகஞ்செய்தலுமாகிய வரலாறுகள் இதனுட் கூறப்பட்டுள்ளன.

# விளக்க உரைக் குறிப்புகள்.

(1—3) ஆகாயத்தே தோன்றி இருளை விழுங்காநின்று உலகத்தே பகற்பொழுதைத் தோற்றுவித்து எழுதரும் ஞாயிற்றினை முதலாகிய முதுவேனிற் காலம் என்க.

அகல் இரு விசும்பு—அகன்ற பெரிய ஆகாயம் "அகலிரு வானத்து" என்றார் மதுரைக்காஞ்சியினும். (267) 'அகலிரு விசும்பு' என்பதற்கு 'அகன்ற பெரிய ஆகாயம்' என வரும் புறநானூற்றுரை (89) ஈண்டு அறியற்பாலது. ஆகாயத்திற்கு அகற்சி குணமாதலை,

"மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயுந்
தீமுரணிய நீருமென்றாங்
கைம்பெரும் பூதத் தியற்கை போலப்
போற்றார்ப்பொறுத்தலும்சூழ்ச்சியதகலமும்" (2)

என்னும் புறப்பாட்டில் விசும்பின் தன்மை போலச் சூழ்ச்சியதகலமும் எனக் கூறுமாற்றானறிக. இனி, 'அகலிரு விசும்பு' என்பதற்குத் தன்னையொழிந்த நான்கு பூதமும் தன்னிடத்தே அகன்று விரிதற்குக் காரணமாகிய பெரிய ஆகாயம் என்றுரைப்பினுமமையும். இங்ஙனம் பொருளுரைக்குங்கால் அகல் என்பது 'நோய்தீருமருந்து' (கலி 60:1-) என்பது நோய்தீர்தற்குக் காரணமாகிய மருந்து எனவும் "அரசிருந்து பனிக்கும் பாசறை" (முல்லை: 79) என்பது பகையரசிருந்து நடுங்குவதற்குக் காரணமான பாசறை எனவும் பொருள் தருதல் போலக் கொள்ளப்படும்.

இங்ஙனம் உரைத்தல் ஐம்பெரும் பூதங்களின் தோற்றமுறை பற்றி என்க. என்னை? ஆகாயத்தினின்றும் காற்றும் அதனினின்று தீயும் அதனினின்றுநீரும் அதனினின்று நிலமும் தோன்றியமுறைமையாலென்க. இங்ஙனம் தோன்றும் முறையினை,

"விசும்பி லூழி யூழூழ் செல்லக்
கருவளர் வானத் திசையிற் றோன்றி
யுருவறி வாரா வொன்ற னூழியு
முந்துவளி கிளர்ந்த வூழ் ழூழியுஞ்
செந்தீச் சுடரிய வூழியும் பனியொடு
தண்பெய றலைஇய வூழியு மவையிற்
றுண்முறை வெள்ள மூழ்கி யார்தருபு
மீண்டும் பீடுயர் பீண்டி யவற்றிற்கு
முள்ளீ டாகிய விருநிலத் தூழியும்" (24—12)

என்னும் பரிபாடலானும், *சித்தத்து,

"மானென்றுரைத்த ‡ புத்தி வெளிப்பட்டு
அதன்கணகயம் வெளிப்பட் டதன்கண்
வாயு வெளிப்பட் டதன்க ணங்கி
யானது வெளிப்பட் டதன்க ணப்பின்
தன்மை வெளிப்பட் டதின்மண் வெளிப்பட்டு"
(27 · 208—11)

என்னும் மணிமேகலையானும் அறிக.

ஆகாயம் எல்லாப் பொருட்கும் இடங்கொடுக்கும் செயலையுடையதென்பது "பரந்திடங்கொடுக்கும் விசும்பு" எனமலைபடுகடாத்தும், (558) "ஆகாயம்எல்லாப்பொருட்கும், பூக்குமிடங் கொடுக்கும் புரிவிற் றாகும்" என மணிமேகலையினும் (27:193—4) வருவனவற்றாலறிக.

*சித்தம்—மூலப்பகுதி ‡ புத்தி—மகத்தத்துவம்

பாய்இருள்—பரந்த இருள். பாய்தல் பரத்தலென்னும் பொருட்டாதலை "பாயிரும் பனிக்கடல்" என்னும் பரிபாடலினும் (5:1) காண்க. "ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள்" என்பது தொல்காப்பியச் சூத்திரம். (உரி: 65) பருகி என்னும் செய்தெனெச்சம் நிகழ்காலம் உணர்த்தி நின்றது. இங்ஙனம் வருதலை "வறனீந்தி நீ செல்லு நீளிடை நினைப்பவும்" என்னும் கலித்தொகையினும் காண்க.

கான்று—கக்கி (தோற்றுவித்து) "சூரியற்கண்டலுஞ் சூரியகாந்தமந்தாரழலெங்ஙனம் கான்றிடும்" என்னும் சிந்தாமணியினும் (2208) இப்பொருட்டாதல் காண்க. கான்று என்பது அவையல்கிளவியாகலின் மறைத்துச் சொல்லப்படவேண்டும் பிறவெனின், கான்று என்பது தன் பொருள் மேல் நில்லாது தோற்றுவித்து எனப் பிறிதோர் பொருள் மேல் அமைகுறித்து, மரீஇய சொல்லாய் நிற்றலின் மறைக்கப்படாதென்க.

விசும்பில் பருகி (1) எழுதரும் பருதி (2) திருகிய வேனில் எனமுடிக்க.

(4—16) பாதிரிப்பூவின் உள்ளிடத்தை ஒக்கும் நிறமூட்டிய தோலினாலாகிய போர்வையினையும், உண்ணாக்கில்லாத வாயினையும், கவைத்தலையுடைய கடையினையும், நெகிழ வேண்டிய நெகிழ்ந்து இறுகவேண்டிய வழி இறுகிய வார்க்கட்டியினையும், பெரிய தண்டினையும், புரியடங்கிய நரம்பினையும் உடைய (பேரி) யாழ் எனக.

இலை ஒழித்த—இலைகளை உதிர்த்த. பராஅரை—பரியதாள். பராஅரை என்பது பரிய அரை என்பதன் திரிபு என்பர் இலக்கணக்கொத்து நூலாசிரியர் (125) வள்ளி

தழ்—பெருமையையுடைய இதழ். இப்பொருட்டாதலை "வள்ளிதழ் அவிழ்நீலம்" என்னும்மதுரைக்காஞ்சியினும் (251) காண்க. ஊட்டுறு பச்சை— நிறமூட்டுதலுற்ற தோல். பாதிரிப்பூவின் உள்ளிடம் தோலுக்கு நிறத்தினால் உவமை என்க. "கானக்குமிழின் கனிநிறம் கடுப்பப், புகழ்வினைப் பொலிந்த பச்சை" என்றார் சிறுபாணாற்றுப் படையினும். (225—6) புரையும்—ஒக்கும். இது மெய் யுவமத்தின்கண் வருமென்பர் ஆசிரியர்தொல்காப்பியனார். தோலிலே இருகண்ணும் கூடும்படியாகச் சிறியனவாகவும் நெருக்கமாகவும் இருக்கும் துளைகள் கமுகம் பாளையிற் பூ விரியாமற் கருவாய் இருக்கும்போது உள்ள தோற்றம்போ லிருக்கு மென்க. இது மெய்யுவமம். தோல்களின் வேறு பாடு தெரியாமல் இசைக்கப்பட்டதாகலின் "உருக்கியன்ன பொருத்துறு போர்வை" என்றார். பச்சைப் (6)போர்வை செறிதுளைப் (8) போர்வை பொருத்துரு (9) போர்வை எனப் போர்வை என்பதைத் தனித் தனி கூட்டுக. வறத்தல்—நீர் வற்றுதல். பணைத்தோள்—உவமைத் தொகை. மடந்தை—பெண்பாற் பெயர்; பருவமன்று. மடந்தையின் தொடியை ஏய்க்கும் திவவு என்க. "மாயோண் முன்கை யாய்தொடி கடுக்குங், கண்கூ டிருக்கைத் திண்பிணித் திவவு" என்றார் பொருநராற்றுப்படையினும். (14—15) திவவு என்பது நரம்புகளை வலிபெறக் கட்டும் வார்க்கட்டு. மணி என்பது மாணிக்கம் பளிங்கு முதலியவற்றை உணர்த்து மெனினும் 'மாயிரு மருப்பு' எனப்பட்டமை யின் நீலமணியை உணர்த்தி நின்றது. மருப்பு என்பது யாழ்த்தண்டு. கோடு எனவும்படும். இது வளைந்த வடிவமானது. "கணைகொடி தியாழ் கோடு" என்னும் திருக் குறளுரையில் யாழ் கோடு என்பதற்கு 'யாழ் கோட்டால் வளைந்ததாயினும்' என்னும் பரிமேலழகர் உரை காண்டு

அறிதற்பாலது. இதற்குரிய மரம் கொன்றையும் கருங்காலியுமாகும். அவை வெயில் காற்று நீர் நிழல் இவை மிகுதலின்றி வளர்ந்த மரங்களாயின் உத்தமமாகும். "தளமாய்ச் சமநிலத்துத் தண்காற்று நான்கு,முளதா யொருங்கூன மின்றி—யளவு, முதிரா திளகாது மூன்றுறுங் கூறுய, வெதுவாகில் வீணைத்தண் டாம்" என்பதுங் காண்க. நரம்பின் தொடை—நரம்பின் கட்டு. கேள்வியென்பது கேட்கப்படும் இசையைத் தருகின்ற யாழை உணர்த்துதலின் ஆகுபெயர்.

போர்வையினையும் (9) வாயினையும் (10) கடையினையும் (11) திவவினையும் (13) மருப்பினையுமுடைய(14) யாழ் என முடிக்க.

(16—22) பேரியாழை இடத்தோட் பக்கத்தே அணைத்து உலகிற் புரப்பாரைப் பெருமையால் பழுமரந் தேரும் பறவைபோல, சுற்றத்தாருடனே ஓடித் திரியும் பொலிவழிந்த யாக்கையினையும் கல்வியை வெறுத்துக் கூறுகின்ற வாயினையுமுடைய பாணன் என்க.

பாணர் யாழை இடத்தோட்பக்கத்தே அணைத்துக் கொண்டு செல்லும் வழக்கமுடையராதலின் 'கேள்வி யிடவயிற் றழீஇத் திரிதரும் பாணன்' என்றார். இவ்வழக்கத்தினை "பொன்வார்த்தன்ன புரியடங்கு நரம்பி, னின்குரற் சீறியாழ் இடவயிற் றழீஇ" என்னும் சிறுபாணாற்றுப்படையானும் (34—5) அறிக. ஞாயிறு மேருவை வலமாகச் சுற்றுகிற தென்பதை, "உலகு முவப்ப வலனேர்பு திரிதரு பலர்புகழ் ஞாயிறு" என்னும் திருமுருகாற்றுப்படையானும் (1—2)

ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்
காவிரி நாடன் திகிரிபோற் பொற்கோட்டு
மேருவலந் திரித லான்''

என்னும் சிலப்பதிகார மங்கல வாழ்த்துப் பாடலானும் அறிக. ஞாயிறுந் திங்களும் மேருவை வலமாகச் சுற்றுவனபோலத் தோற்றுவதால் அங்ஙனங் கூறுவது கவி மரபு. இடவயின்—இடப்பக்கம். ''புடைவீ ழந்துகில் இடவயிற் றழீஇ'' என்றார் நெடுநல்வாடையினும். (181) வெந்தெறற்கனலி—வெய்ய சுடுதற்றொழிலையுடைய சூரியன். ''தெறுகதிர்க் கனலி'' என்னும் பரிபாடல் (1: 42) ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது. கனலியொடு என்பதில் ஒடு உயர்வுப் பொருளில் வந்தது ''ஒருவினை யொடுச்சொ லுயர்பின் வழித்தே'' என்பது தொல்காப்பியச்சூத்திரம். (சொல் 91) திரிதரும்—திரிதலைச் செய்யும். ஞாயிறு திங்களின் இயக்கங்கள் மூக்காலத்தும் நிகழ்தலின், இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் அகப்படுத்து மூன்று காலத்திற்கும் பொதுவாய் நிற்கும் செய்யும் என்னும் வாய்பாட்டுச் சொல்லாற் சொன்னார் என்க. என்னை?

''மூந்நிலைக் காலமுந் தோன்று மியற்கை
யெம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொற்கிளத்தல் வேண்டும்''
(வினை 43)

என்றார் தொல்காப்பியனார் ஆகலின். தாங்குநர் புரப்பார். பொழிமழை—வினைத்தொகை. புகை—ஆவி. மரங்கள் பழுத்திருந்தால் ஆண்டு அழைப்பார் யாருமின்றிப் பறவைகள் தாமே தேடிச் சென்றடைதலின் 'பழுமரந்தேரும் பறவை' என்றார். அவை வௌவால் முதலிய

பறவைகள் என்க. அங்ஙனம் தேடிச் செல்லுதலை "தாஅ வஞ்சிறை நொப்பறைவாவல், பழுமரம் படரும்" என்னும் குறுந்தொகையானும் (172 : 1-2) "கனிவளங் கவர்ந்து பதிவயிற் பெயரும், பனியிறை வாவற் படர்ச்சி யேய்ப்ப" என்னும் பெருங்கதையானும் அறிக. போல—ஒப்ப. இது உருவுவமத்தில் வருமென்பர் ஆசிரியர்தொல்காப்பியனார். புல்லென்யாக்கை—பொலிவழிந்த வடிவம். புலவுவாய்-கற்ற கல்வியை வெறுத்துக் கூறுகின்றவாய். "சில் செவித்தாகிய கேள்வி நொந்துநொந்தீங்கெவன் செய்தியோ பாண" என்றார் புறநானூற்றினுள். (68: 3-4) புலவுவாய் என்பது புலால் நாறுகின்ற வாயுமாம்.

கடுந்திறல் வேனிற்காலத்தே (3) கேள்வியைத்தழீஇ (16) தாங்குநர்ப் பெறாது (18) குன்றத்து (19) பறவை போலத் (20) திரிதரும் (21) பாணவென்ன முடிக்க.

(23—28) வற்கடமிக்க காடு ஆரவாரமிகும்படி மேகம் துளி சொரிந்தாற் போல, தொன்று தொட்ட பசிமிக்க சுற்றத்தோடே கெடாத பெருவளன் எய்திக் குதிரைகளோடே யானைகளையும் வாரிக்கொண்டு இளந்திரையனிடத்தினின்றும் வருகின்றேம் என்க.

பெருவறங் கூர்ந்த கானம்—பெரிய வற்கடமிக்க காடு 'களைகாய்ந் துலறிய வறங்கூர் நீளிடை, வரிமரற் றிரங்கிய கானம்" என்றார் புறநானூற்றினும் (370:9-10) கருவி வானம்—மின்னு முழக்கு முதலியவற்றின் தொகுதியையுடைய மேகம். கருவி என்பது தொகுதி என்னும் பொருட்டாதலை "கருவி தொகுதி" என்னும் தொல்காப்பிய உரியியற் சூத்திரத்தான் (58) அறிக. "கருவி மாமழை கனைபெயல் பொழிந்தென" என்றார் சிந்தாமணி

யினும். (2752) மழை பெய்யக் கானம் கவின் பெறுதலை "வானிறைகின்ற கொண்மூ வார்துளி தலைஇய பின்றை கானிறை மரனும் பூடும் வல்லியுங் கவின்று சென்ன" எனக் கந்தபுராணத்தும் (இந்திரனருச்சனை 13) "காரிற் குளிர்ந்து குழைந்த செழுங் கானம் பூத்த தெனக் கவினி" என வில்லிபாரதத்தும் (12-ம் போர் 82) வருவனவற்றானு மறிக. பழம்பசி—தொன்று தொட்டபசி. ஒக்கல்—சுற்றம். தவாஅ—கெடாத. இப்பொருட்டாதலை "தவாஅப் பெருக்கத்து அறா யாணர்" என்னும் மதுரைக்காஞ்சியா னும் (210) அறிக. வாலுளை—வெள்ளிய பிடரிமயிர். அவண்—அவ்விடம். என்றது இளந்திரையனுடைய காஞ்சிமாநகரினை. இளந்திரையனது ஊர் இன்னதெனமுற் கூறாது அவண் எனச் சுட்டிக் கூறியதை "முற்படக் கிளத்தல் செய்யுளுளுரித்தே" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தான் (கிளவி 39) முடிக்க.

பரிசிலர்க்கு யானை குதிரை முதலியன கொடுத்து உபசரித்தல் பண்டைத் தமிழரசர் மரபு என்பது "வீசி யுளை மாவுங் களிறுந் தேரும், வயிரியர் கண்ணுளர்க் கோம்பாது வீசி" எனவும் "களிறு கலிமான் தேரொடு சுரந்து, நன்கல னீயுநகைசா லிருக்கை" எனவும் பதிற்றுப் பத்தினும் "வளியினியன் மிகுந்தேருங் களிறுங், தளியிற் சிறந்தனை வந்த புலவர்க், களியொடு கைதூ வலை" எனக் கலித்தொகையினும் (50:15—7) வருவனவற்றானறியப் படும்.

கானங் கல்லெனத் (23) துளி சொரிந்தாங்கு (24) ஒக்கலொடு (25) எய்தி (26) புகந்து கொண்டு (27) யாம் வருதும் என முடிக்க.

(28—37) இராமபிரானின் வழித் தோன்றலும் சோழன்குடியிற் பிறந்தோனும் வலைப்புரியன்ன சிறப்பினோடும் செங்கோலினை யுடையோனுமாகிய இளந்திரையன் என்க.

இருநிலம்—பெரிய நிலம். கடந்த—அளந்த. திருமறுமார்பு—திருவாகிய மறுவையணிந்த மார்பு; "திருமறு மார்ப நீ அருளல் வேண்டும்" என்றார் பரிபாடலினும் (1:36) முந்நீர் வண்ணன்—கடல்போலும் நிறத்தை யுடையவன். "கடல் வண்ணன் கண்ணன்" எனவும் "கண்ணை யுண்ணீர் மல்க நின்று கடல்வண்ணா னென்னு மன்னே" எனவும் திருவாய்மொழியினும் வருவன காண்க. "திருமணி திரைபாடவிந்த முந்நீர், வருமழை யிருஞ்சூன் மூன்றும் புரையு மாமெய்" என்றார் பரிபாடலினும். (4:6-7).

முந்நீர்—கடல்; ஆகுபெயர். ஆற்றுநீர் ஊற்றுநீர் மேனீரென இவையென்பார்க்கு அற்றன்று; ஆற்றுநீர் மேனீராதலானும் இவ்விரண்டுமில்வழி ஊற்று நீரும் இன்றாதலானும் இவற்றை முந்நீரென்றல் பொருந்திய தன்று; முதிய நீரெனின் "நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றும்" என்பதனால் அதுவும் மேனீரின்றி யமையாமையின் ஆகாது. ஆதலால் முந்நீர்க்குப் பொருள் யாதோ வெனின், முச்செய்கையுடைய நீர் முந்நீரென்பது. முச்செய்கையாவன: மண்ணைப் படைத்தலும், மண்ணையழித்தலும், மண்ணைக் காத்தலுமாம் என்க. "முந்நீர்ப் பிறந்த பவளத்தொடு" என்னும் சீவகசிந்தாமணிச் செய்யுளுரையில் (5) 'நிலத்தைப் படைத்தலும் காத்தலும் அழித்தலுமாகிய மூன்று தொழிலுடைமையின் முந்நீர் ஆகுபெயர்' என நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலுங் காண்க.

பிறங்கடை — வழித்தோன்றல். மலர்தலை யுலகம் — பரந்த இடத்தையுடைய உலகம். "மலர்தலை யுலகத்துப் பலருடன் குழீஇ" என்றார் பட்டினப்பாலையினும் (69) மலர்தலை என்பது வினைத்தொகை; வினைத்தொகையாவது: ஒரு காலத்திற்கே உரித்தாகாது மூன்று காலத்திற்கும் பொதுவாய் நிற்பதாம்.

தலையுலகத்து என்புழி இரண்டாமுருபும் பொருளும் உடன் தொக்கதொகை. மன்னுயிர் - நிலை பெறுதலையுடைய உயிர். உடம்பு அழிந்துபோக உயிரானது அழியாது என்றும் நிலைபெற்றிருத்தலின் 'மன்னுயிர்' என்றார். "குடம்பைதனித்தொழிய" என்னும திருக்குறள் விசேடவுரையில் 'சேதனமாய் அருவாய் நித்தியமாய உயிரும்' என உயிரின் நிலைபேற்றைப் பரிமேலழகர் கூறியமையுங் காண்க. முரசு முழங்குதானை மூவர்—முரசம் முழங்குகின்ற தானையையுடைய மூவர். முரசு மூவகைப் படும். அவை: வீரமுரசு, தியாகமுரசு, நியாய முரசு என்பன. "இமிழ் குரன் முரச மூன்றுடனாளும், தமிழ்செழு கூடற் றண்கோல் வேந்தே" என வருவதுங் காண்க. (புறம் 58) மூவர்—சேர, சோழ, பாண்டியர் என்னும் முடியுடை வேந்தர். "முற்றிய திருவின் மூவராயினும் என்றார் புறநானூற்றினும். (205) முடியுடை வேந்தர்க்கு முரசு உரியவாதலை, "படையுங் கொடியுங் குடையு முரசு...... தெரிவுகொள் செங்கோ லரசர்க்குரிய" என்பதனாலறிக. (தொல். மர. 71) வளை—சங்கு. மீக்கூறல்—மேலாகக் கூறுதல். அல்லது கடிதல்—அறமல்லாதனவற்றை நாட்டில் நிகழாதவாறு காத்தல். அரசன் அல்லவை கடிந்து அறம்புரிய வேண்டு மென்பதை,

"அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மானமுடைய தரசு"

எனத் திருவள்ளுவர் அருளியவாற்றானும்,

"அறம்பொரு ளின்பமான வறநெறிவழாமற் புல்லி
மறங்கடிந் தரசர் போற்ற வையகங் காக்குநாளில்"
(பெரி. திரு. 17)

எனச் சேக்கிழார் சுவாமிகள் அருளிய வாற்றானு மறிக. படர்தல்—செல்லுதல். "படரேயுள்ளல் செலவு மாகும்" என்பது தொல்காப்பிய உரியியற் சூத்திரம்.

## இருநிலங் கடந்த முந்நீர் வண்ணன் என்பதிலடங்கிய கதை.

முன்னொரு காலத்திலே மகாபலிச் சக்கரவர்த்தி என்னும் அசுரவரசன் தனது வலிமையினாலே இந்திரன் முதலிய தேவர்கள் யாவரையும் வென்று சுவர்க்க மத்திய பாதல மென்னும் மூவுலகங்களையும் தன்னடிப்படுத்தி அரசாண்டு கொண்டிருந்தான். அரசிழந்த இந்திரன் முதலிய தேவர்கள் யாவரும் திருமாலைச் சரண் புகுந்து தமது இன்னலை நீக்கியருளுமாறு வேண்டினர். அப்போது திருமால் அவர்கள் துன்பத்தை நீக்க வேண்டி, அதிதியிடத்தில் காசிபமுனிவர்க்கு வாமனனாகிய புதல்வனாய்த் தோன்றி, அம்மாவலி யாகஞ் செய்யும் சமயத்தில் அவன் பாங்கர்ச் சென்று தம் காலடியால் 'மூவடி மண்தா' என வேண்டினர். அப்போது சுக்கிராசாரியன் தடுக்கவும் அவ்வுரை கேளாது அவன் தரப் பெற்றவுடன் திரிவிக்கிரமனாக வளர்ந்து மண்ணுலகை ஓரடியாகவும் விண்ணுலகை ஓரடியாகவும் அளந்து மூன்றாமடிக்கு இடமின்மையின் அவன் தலைமேல் அடியை வைத்து அவ்வசுரவரசனைப் பாத

லத்தில் அழுத்தினனென்பதாம். இவ்வரலாற்றினை, 'மூவுலகு ஈரடியான் முறை நிரப்பா வகைமுடியத், தாவியசே வடி.' என்னும் சிலப்பதிகாரத்தானும் (17) 'நெடியோன் குறளுருவாகி நிமிர்ந்துதன், அடியிற்படியை யடக்கிய வந்நாள்'' என்னும் மணிமேகலையானும் (19: 51-2) மாலுங்குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால், ஞால முழுது நயந்தளந்தான்'' என்னும் திருவள்ளுவமாலையானும், ''உலகை மூன்றுங் காலினாற் கடந்து கொண்ட, புண்டரீகக் கண்ணனாளிப் புரவலன்'' என்னும் கம்பராமாயணத்தானுமறிக.

## முந்நீர்த் திரைதரு மரபின் உரவோன் என்பதிலடங்கிய கதை.

முற்காலத்தில் தமிழ்நாட்டின் சிற்சில விடங்களிலும் சாவகத் தீவிலும் நாகர் எனப்படும் ஒரு சாதியார் வசித்து வந்தனர். அவர்கள்நாகஇலச்சினையையுடையராயிருந்தமையால் நாகரெனப்பட்டனர். ‡ சாவகநாட்டின் இராசதானி நாகபுரமென்பது. இதனை ஒரு காலத்தில் வளைவணன் என்பான் அரசு புரிந்தான். அவனுக்கு வாசமயிலை என்பவள் வயிற்றில் பிறந்தவள் பீலிவளை என்பவள். இந்நாக கன்னிகையை கிள்ளிவளவன் என்னும் சோழவரசன் புணர்ந்து தன்னாடு சென்றான். அவள் ஒரு ஆண்மகவை யீன்றனள். அம்மகவைக் கம்பளச் செட்டியென்னும் சோழநாட்டு வணிகனிடம் கொடுத்து இவன் சோழன் மகன்; இவனைச் சோழமன்னனிடம் சேர்த்து விடுவாயாக என்று கூறினள். அவ்வணிகனும் உவகைமீதூரப் பெற்றவனாய்க் கப்பலிலே கொண்டு சென்றான். செல்லும்போது கரைக்கணித்தாய் கப்பல் கடலிலே மூழ்கியது. அப்போது அக்கப்பலிலிருந்து தப்பிப் பிழைத்தோரிற் சிலர் காவிரிப்

‡ இப்போது யாவா என்று வழங்கப்படுகிறது.

பூம்பட்டினத்தை யடைந்து கிள்ளிவளவனிடம் நிகழ்ந்ததைக்கூறினர். அதனைக்கேட்டு அவன் இரங்கிக் கொண்டிருக்குமமையத்துஒருமகவைக் கடற்றிரை ஒதுக்கியதாகச் சிலர் கொண்டு வந்து கொடுத்தனர். அரசன் அக்குழந்தையைத் தன் மகனென உபசரித்தேதற்றுதன தாட்சிக்குட்பட்ட காஞ்சிக்கு அரசனுக்கினன். தன் தாயால் தொண்டைமலர் மாலையைச் சூட்டியனுப்பப் பட்டதனால் தொண்டைமான் எனவும், இளமைப் பருவத்தில் கடற்றிரையால் ஒதுக்கப் பட்டமையால் இளந்திரையனெனவும் பெயர் பெற்றான். திரைதந்தைமையை,

கங்குலு நண்பகலுந் துஞ்சா வியல்பிற்றுய்
மங்குல்சூழ் மாக்கட லார்ப்பதூஉம்-வெஞ்சினவேற்
கான்பயந்த கண்ணிக் கடுமான் றிரையனை
யான்பயந்தே னென்னுஞ் செருக்கு

என்பதனுலறிக. (பெரும்பாண் இறுதிவெண்பா)

(39—45) அத்தம்—வழி. களவேர் வாழ்க்கை—களவே உழவுபோலும் இல்வாழ்க்கை; கடி—காவல். உரும்—இடியேறு; உரறுதல்—இடித்தல். "கடிதிடிவான முரறும்" என்றார் கார்நாற்பதினும். (6) தப்புதல்—கொல்லுதல். இப்பொருட்டாதலை, "வைவாளிற் றப்பிய மன்னவன் கூடலில்" எனச் சிலப்பதிகாரத்தும் (19: 58) "தோளுந் தலையுந் துணிந்து வேறாக, வாளிற்றப்பிய வல்வினையன்றே" என மணிமேகலையினும் (21: 59-60) வருவனவற்றாலறிக. காட்டுமா—காட்டின்கண் வாழும் புலி முதலான துஷ்ட மிருகங்கள். உறுகண் செய்யா—துன்பஞ் செய்யா. செங்கோல் செலுத்தும் அரசனது ஆணையாலே அரவு புலி முதலியன துன்பம்செய்யாவென்பது, "வாள்வரிவேங்கையு

மான்கண மறலா, அரவுஞ் சூரு மிரைதேர் முதலையுர், உருமுஞ் சார்ந்தவர்க் குறுகண் செய்யா, செங்கோற் றென்னவர் காக்கு நாடென" என்பதனுலறிக. (சிலப் 13: 6-9) வேட்டல்—விரும்புதல். "வேட்டவை யெய்தி வினைமு வொழிதல் பொய்போலும்" என்னும் புறப்பொருள் வெண்பா மாலையினும் (11: 6) இப்பொருட்டாய் வருதல் காண்க. அசைஇ—இளைப்பாறி. "கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட்டசைஇ" என்றார் புறநானூற்றினும் (141) நசை—விருப்பம். இப்பொருட்டாதலை "உரனசை இ உள்ளந்துணையாகச் சென்றார்" என்னும் திருக்குறளினும் (127: 3) காணலாகும்.

(46—50) முழுமரம்—குறடு. அக்குறட்டிடத்தே தைத்துக் கிடப்பது ஆர். சூட்டு என்பது உருளையின் விளிம்பிலே வைத்த வளைந்த மரம். எழு—கணைய மரம். இது கதவுக்கு வலியாக உள்வாயிற்படியிலே நிலத்திலே விழவிடும் மரமாகும். "திண்ணெழுப் போக்கிக் காப்புள் ளுறுத்த கடிமதில் வாயில்" என்றார் பெருங்கதையினும். பருக்கை என்பது அச்சுமரத்தின் மேலே நெடியவாய் இருபக்கத்தும் நெடுகக் கிடக்கின்ற பருமரங்கள் என்க. அம்மரங்களிரண்டினையும் நெருங்கத் துளைத்துக் குறுக்கே ஏணிபோலக் கோத்ததனைப்பார் என்றார். ஆரைவேய்ந்த—தொத்துளிப்பாயாலே வேய்ந்த. ஆரை—கொத்தளிப்பாய் என்பர் திலாகரத்தும். "ஆரைவேய்ந்த வறைவாய்ச் சகடத்து" என்றார் அகநானூற்றினும்.

(51—58) குரம்பை—குடில். சேக்கும்—கிடக்கும். புதவு—வாயில். "பொய்கை வாயிற்புனல்பொரு புதவின்" என்றார் பதிற்றுப்பத்தினும். (27:9) முளைஎயிறு-உவமைத்

தொகை. இரும்பிடி—கரியபிடி. பிடியென்னும் பெண்பாற் பெயர் யானைக்குரியவாதலை, "பிடியென் பெண்பெயர் யானைமேற்றே" என்னும் தொல்காப்பியமரபிற் சூத்திரத்தால் அறிக. (51) கோத்துத் தூக்குதற்குத் துளையிடுதலின் 'துளையமைச் சிறுரல்' என்றார். நாடகம்—சுவைதழுவி வருங் கூத்து. இது சாந்திக் கூத்தின்வகை நான்கனுள் ஒன்று என்க. இதனை,

"சாந்திக் கூத்தே தலைவ னவிநய
மேந்திநின் றடிய வீரரு நடமவை
சொக்க மெய்யே யவிநய நாடக
மென்றிப் பாற்படூஉ மென்மனார் புலவர்"

என்பதனாலறிக. விசித்தல்—வலித்துக்கட்டுதல். "விசிபிணி முழவின் வேந்தர்" என்றார் பட்டினப்பாலையினும். (243) இயய—வாச்சியம். இங்கே முழவு கடுப்ப—ஒப்ப. காடி—ஊறுகாய். "ஊர்ப்பெண்டிர் மாங்காய் நறுங்காடி கூட்டுவேம்" எனக் கலித்தொகையினும் (109) வருதல் காண்க. இனிக்காடி நெய்யென்பாருமுளர். காடி வைத்த கலன் என்பதற்கு பாரிற் கழுத்தான விடத்தே வைத்த மிடாவென்றுமாம். கலன்—கலம் என்பதன் போலி. மகவு—குழந்தை. மகடூஉ—பெண்பாற் பொதுச்சொல். புறம் தூரப்ப—முதுகிலே அடிப்ப.

சகடப் (50) புதவின் (52) மூக்கின்கண்ணே (57) மகடூஉத் தூரப்ப எனமுடிக்க.

(59—65) கோடு—கொம்பு. இணர்—பூங்கொத்து; "பொன்னிணர் வேங்கை கவினிய பூம்பொழிலும்" என்றார் ஐந்திணையைம்பதிலும். ஏட்டிலை—மேன்மையையுடைய

இலை; படலைக்கண்ணி-தழைவிரவின மாலை; "முறிமிடைப் படலைமாலைப் பொன்னிழை மகளிர்" என்றார் சிந்தாமணியினும் (483) கண்ணி—ஆடவர் தலையிலணியும் மாலை. "பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்" என திருமுருகாற்றுப்படையில் வருவதுங் காண்க. ஏறு—வலிமை. இப்பொருட்டாதலை "ஏறும் வலியாகும்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தால் (உரி 92) அறிக. முடலையாக்கை-முறுக்குண்ட உடம்பு. படலைக்கண்ணியினையும் திணிதோளினையும் முடலையாக்கையினையும் உடைய மாக்கள் என்க. "படலைக்கண்ணிப் பரேரெறுழ்த் திணிதோள் முடலையாக்கை முழுவலி மாக்கள்" என நெடுநல்வாடையில் வருதல் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது. 'கொடுநுகம்' என்றார், துறைகளிற் செருகின கழிகள் கழுத்தையப் பட்டு நிற்றலின். ஒரு சகடத்திற் பல எருதுகள் பூட்டுதல் தோன்ற 'நெறிப்பட நிரைத்த பெருங்கயிற் றொழுகை' என்றார். ஒழுகை—வண்டியொழுங்கு; "குஞ்சரவொழுகை பூட்டி" என்னும் பதிற்றுப்பத்தினும் இப்பொருட்டாதல் காண்க. உப்பைச் 'சில்பத வுணவு' என்றார் இடப்படும் பொருளுக்குச் சிறியவாக இடப்படும் உணவாகலின். கொள்ளை—விலை. இதனை, "வயமீன் முகந்து கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்" என்னும் மதுரைக்காஞ்சியானும் (225—6) அறிக. உமணர்—உப்பு வாணிகர். 'பல்லெருத்துமணர்' என்றார், வண்டியிற் பூட்டிய எருதுகள் இளைத்தவிடத்து அவைகளை நீக்கி வேறு பூட்டுவதற்குப் பல எருதுகளைக் கொண்டு சென்றாராகலின். பதி—ஊர்.

மகடூஉத்தூரப்ப (58) மாக்கள் (61) காப்பச் (63) சாற்றிப் (64) போகு நெடுநெறி என முடிக்க.

(66—70) எல்லிடை—பகற்பொழுது. "எல்லிடை யசைந்த கல்லென் சீறூர்" என்றார் ஐங்குறுநூற்றினும். (381 2) மலைய—மலையிலுள்ளன. அவை: சந்தனம் அகில் பொன் முதலியன; கடல—கடலிலுள்ளன. அவை: முத்து, சங்கு, பவளம் முதலாயின. "ஓர்க்கோலை சங்க மொளிர் பவளம் வெண்முத்த நீர்ப்படு முப்பிறே னைந்து" என்பதுங் காண்க. அருந்தும்—நுகரப்பண்ணும். நோன்றாள்—வலியையுடைய கால். அடிபுதையரணம்—செருப்பு. படம்—சட்டை; இது மெய்ப்பை எனவும் குப்பாயம் எனவும் படும்.

(71—76) வெண்கை ஒள்வாள்—யானைக் கொம்பாற் கடைந்திட்ட வெள்ளிய கைப்பிடியினையுடைய ஒள்ளிய வாள். புடை—பக்கம். சுரிகை—உடைவாள். "எஃகி னிருளற வடிக்கப்பட்ட வரும்பெறற் சுரிகை" என்றார் சிந்தாமணியினும் (698) எழுழ்த்தோள்—வலியையுடைய தோள். "மாதாங் கெழுழ்த்தோள் மறவர்" என்றார் மதுரைக்காஞ்சியினும் (729) கடம்பமர் நெடுவேள் - கடம்பினிடத்தே யிருந்த நெடிய முருகக்கடவுள். கடம்பு முருகவேளுக்கு இடமாதலை, "ஆலமுங் கடம்பு நல்யாற்று நடுவுங் கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும் அவ்வவை மேய வேறு வேறு பெயரோ டெவ்வயினோயு நீயே" என்னும் பரிபாடலானும் (4) "கடம்பமர் மன்றற் றொங்கற்கந்தனைச் சிந்தை செய்வாம்" என்னும் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தானுமறிக. மீளியுடம்பிடி—கூற்றுவனையொத்த வேல். "காலன் வடிவாய வேலான்" என்றார் நளவெண்பாவினும். வம்பலர்—புதியோர். இப்பொருட்டாதலை "வம்பலர்ச் சேக்குங் கந்துடைப் பொதி

யில்'' என்னும் பட்டினப்பாலையினுஞ்சான்க. "கடம்பமர் நெடுவேளன்ன மீளியுடம்பிடித் தடக்கையோடா வம்பலர்'' என்னும் இவ்வடிகளில் நெடுவேள் என்னும் ஒருமைப்பால் வம்பலர் என்னும் பன்மைக்கு உவமையாயிற்று. இங்ஙனம் உவமையில் ஒருமைப் பன்மைப்பால் மயங்குதல் "முதலுஞ் சினையுமென் றாயிரு பொருட்கும்'' என்னும் தொல்காப்பிய உவமவியற் சூத்திரத்தில் 'உரியவை யுரிய' என்பதனால் முடிக்க.

(77—82) தடவு—பெருமை. "தடவுங் கயவும் நளியும் பெருமை'' என்பது தொல்காப்பிய உரியியற் சூத்திரம். முழுமுதல்—பெரிய அடி. இதனை "கருஞ்சினை வேம்பின் முரரை முழுமுதல் துமியப்பண்ணி'' என்னும் பதிற்றுப் பத்தினும் (பதிகம் 5) அறிக. மிரியல்—மிளகு. இதனை "செறிதரு மிளகினும் மிரியலுஞ் செப்பலாமே'' என்னும் சூடாமணிநிகண்டுடையார் கூற்றானுமறிக. வடு—தழும்பு. அணர்செவிக் கழுதை—மேல்நோக்கின செவியையுடைய கழுதை. "அணர் செவிக்கழுதையா யாண்டுத் தோன்றிய'' என்றார் பாகவதபுராணத்தும். (ஆரவின் மேல் 6) கழுதைச் சாத்து—கழுதையிலே மிளகெடுத்துக் கொண்டு போகின்ற திரள். உல்கு—சுங்கம். இது "கலத்தினுங் காலினும் வரும்பண்டங்கட்கிறையாயது'' என்பர் பரிமேலழகர். கவலை என்பது கவர்த்தவழி. 'உன்ன மரத்த துன்னருங் கவலை' என்னும் புறப்பாட்டினும் இப்பொருட்டாயிற்று. வியல்—அகலம். "வியலென்கிளவி யகலப்பொருட்டே'' என்றார் தொல்காப்பியனார். (உரி. 68). இயவு—வழி. "நீர்மருங் கறுத்த நிரம்பாவியவின்'' என்றார் ஐங்குறுநூற்றினும். (326).

(83—88) அணிலோடுஎலி திரியாதபடி ஈந்திலையாலே வேய்ந்த எய்ப்பன்றியின் முதுகுபோலும் புறத்தினை யுடைய குரம்பை என்க.

இளையினது காயின் முதுகு விரிந்து பஞ்சு தோன்றுவது போன்ற, வரியைய முதுகினையுடைய அணில் என்க. "தோன்றுமுழு விலைத் தங்கட் டொகையணில் அனைய பைங்காய் கான்ற மென்பஞ்சி" என்னும் சிந்தாமணி ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது. ஈந்திலையால் குரம்பையை வேயும் வழக்கத்தினை, "ஈந்து வேய்ந்திடைக் கருப்பையாடாக்குடில் கஞல்வ" என்னும் திருவானைக்காப் புராணத்தானும் அறிக. அலங்குதல்—அசைதல். கருப்பை—காரெலி "கருப்பை காரெலியினுமப்" என்பதுங் காண்க. (சூடாமணி. 3:29) அறல்—நுண்ணிய கருமணல். வெரிநுடை—முதுகினையுடைய. மடலினடி தன்னிடத்தே (மரத்தில்) நிற்க மேல் அறுப்புண்ட ஈந்து அறல் போன்றிருக்குமாறு அறிக. கூர்மையான முனையினையுடைமையின் ஈந்திலைக்கு வேற்றலை உவமையாயிற்று. "கருவிருந்து கொள் நெறியிலை யீந்து" என்றார் கல்லாடத்தும். வை—கூர்மை. இதனை "வையே கூர்மை" என்னும் தொல்காப்பிய உரியியற் சூத்திரத்தாலறிக. "இலையே முறியே தளிரே" என்னும் மரபியற் சூத்திரவுரையில் புல்லினுள் ஒரு சாரனவும் இலையெனப் படுமெனக் கூறி "ஈந்திலை வேய்ந்த வெய்ப்புறக் குரம்பை" என்னும் இவ்வடியினை மேற்கோள் காட்டினர் பேராசிரியர்.

(89—94) மான்றோற் படுக்கையிலே பிள்ளைப்பெற்ற எயிற்றி கிடக்கப்போய், வலிய பாரைகளால் கருநிலத்தைக் குத்திப் புழுதியை யகழ்ந்து புல்லரிசியை வாரிக்கொண்ட எயிற்றியர் என்க.

மான்றோற் பள்ளி—மான்தோலாகிய படுக்கை: "சீரூர் மரையதள்விற்றங்கு சங்கூற் சிறுதயிலே" என்றார் திருக்கோவையாரிலும். மகவு—மக்கட்குரிய இளமைப் பெயர். ஈன்பிணவு—பிள்ளையைப் பெற்ற பெண். பிணா என்பது உயர்திணைப் பெண்பான் மரபுப்பெயர். "பெண்ணும் பிணவு மக்கட்குரிய" என்பது தொல்காப்பியம். இரும்பு தலையாத்த—பூணைத் தலையிலே அழுத்தின. உளிவாய்—உளிபோலும் வாய். உவமத்தொகை. சுரை—குழைச்சு. இங்கே கோல் செருகப்படுகின்ற சுரையையுடைய பாரையையுணர்த்துதலின் சுரை என்பது ஆகுபெயர். இருநிலக்கரம்பை—கருநிலமாகிய தரிசுநிலம். படிதல்—உண்டாதல். நீறு ஆடி—புழுதியை யளைந்து. மிகவிளைந்து உதிர்ந்த புல்லை எறும்பிழுத்துச் சேரவிட்டுவைத்த இடமறிந்தெடுத்தல் அந்நிலப் பண்பாதலின் 'நுண்புல்லடக்கிய எயிற்றியர்' என்றார்.

போகி (90) விழுக்கோளால் (91) மிளிரமிண்டு கையிறாலை (92) ஆடி (93) அடக்கிய எயிற்றியர் என்க.

(95—100) பார்வையாத்த பறைதாள் விளவு—பார்வை மிருகம் கட்டிநின்ற தேய்ந்த தாளினையுடைய விளாமரம். வேட்டையாடுவோர் மிருகங்களை இலேசாக அகப்படுத்தற் பொருட்டு மான் முதலான மிருகங்களை வளர்த்து வேண்டியவாறு பழக்கி வேட்டையாடுமிடத்தில் விடுவர். மற்றைய மிருகங்கள் இம்மிருகங்கள் நிற்குமிடத்தை நாடி வரும். அதனால் அவற்றை இலேசாக வேட்டையாடிப் பிடிப்பர். பழக்கப்பட்டமிருகமே பார்வை மிருகமாகும். இங்ஙனம் பார்வை மிருகங்களைப் பழக்கி வைத்திருத்தல் பண்டை வழக்கமென்பது, "பார்வை

மடப்பிணை தழீஇப் பிறிதோர் தீத்தொழிற் றனிக்கலை திளைத்து விளையாட" எனப் புறநானூற்றினும் (320) "பன்றியும் புலியும் எண்கும் கடமையும் மானின் பார்வை யன்றியும்" எனப் பெரியபுராணத்தும் வருவனவற்றாலறிக. பறைதல்—தேய்தல். "நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழ் கொட்டில்" என இப்பாட்டில் வருவதுங் காண்க. (189) முன்றில்—இலக்கணப் போலி. நிலவுரல்—நிலத்திலே தோண்டின உரல். முரவுவாய்க்குழிசி—ஓறுவாய் போன பானை. "முரவுவா யாடுறு குழிசி பாடின்று தூக்கி" என்றார் புறநானூற்றினும். (371) வராதட்ட வாடூன் புழுக்கல்-அரியாது சமைத்த உப்புக்கண்டத்தோடு கூடிய சோறு. "வாடூன் கொழுங்குறை, கொய்குரலரிசியொடு நெய்பெய் தட்டு" என வருவதுங் காண்க. (புறம் 328).

எயிற்றியர் (94) பெய்து (96) ஓச்சி (97) தோண்டி (98) ஏற்றி (99) அட்ட புழுக்கல் என முடிக்க.

(101—104) வாடாத்தும்பை வயவர்—கெடாத தும்பை சூடின போர்வீரர். வயவர் என்பதனை இரண்டிடத்துங் கூட்டுக. வலிமைமிக்க போர்வீரர், அப்போர் நிகழ்ச்சிக்குரிய தும்பைப் பூவைத் தலையிலே சூடிச்செல்லுதல் மரபாகலின் 'வாடாத் தும்பை வயவர்' என்றார். இதனை, "போர்கருதித், துப்புடைத் தும்பை மலைந்தான் துகளறுசீர், வெப்புடைத் தானையெம் வேந்து" என்னும் புறப்பொருள் வெண்பாமாலை யானுமறிக. தும்பை—'போர்ப்பூ' என்றும் சொல்லப்படும். 'தொடியணி தோளாடவர் தும்பை புனைய" என்பதனுரையில் (பு. வெ. 241) தும்பை போர்ப்பூ என உரையெழுதி யிருத்தலுங் காண்க. ஓடாத்தானை—முதுகிட்டோடாதபடை. கழல் என்பது

ஆடவர் கொடையினாலும் வீரத்தினாலும் அணியும் காலணி. "ஆடவர் கொடை வீரத்தாலணிவது கழலென்றாமே" என வருவதுங் காண்க. (சூடாமணி 7: 26) சென்னியம்—பாணச்சாதியேம். பதம்—உணவு.

நெடுநெறியையும் (55) வம்பலர் (76) சழுவைதச் சாத்தொடு வழங்கும் (80) உல்குடைப்பெருவழிக் கவலையையுங் காக்கும் (81) வில்லுடை வைப்பின் வியன்காட்டியவுகளின் (82) குரம்பையில் (88) எயிற்றியர் (94) அட்ட புழுக்கலை (100) பெருமகன் (101) சென்னியம் எனின் (103) தேக்கிலையிலே குவிக்கையினாலே (104) நும் கடும்பொடு அதனைப் பெறுகுவிர் என முடிக்க.

(106—117) மானடி அழுந்திக் கிடக்கின்ற வழியிடத்தில் குழித்த குழத்தின் பக்கலிலுள்ள மட்டுக்குழிகளில் மறைந்தொதுங்கிப் பன்றியின் வேட்டை ஒழிந்தார்களாயின் அதன் பிற்றை நாளில் நாய்களுடன் சென்று தூறுகளையடித்துக் கிடவாமலோட்டி முயல்களைப் போகாதபடி வளைத்து கானவர் கொன்றுண்ணும் பாலை நிலமென்க.

பொறித்த-அழுந்திக் கிடக்கின்ற. வான்மடி பொழுது-மேகம் மழை பெய்தலைத் தவிர்ந்தகாலம். அகழப்படுதலின் குழத்தை அகழென்றது ஆகுபெயர். பயம்பு—குழி. "மாப்பயம்பின் பொறை போற்றாது" என்றார் புறநானூற்றினும் (17) இது, குளத்திலே தண்ணீர் குடிக்க வரும் மிருகங்களை மறைந்திருந்து வேட்டையாடற் பொருட்டுக் குளத்தைச் சூழப்பறித்த குழி என்க. புகழும்வாகை வெற்றியாதலின் புகழாவாகை அசத்திக்கு வெளிப்படை. பூவாவஞ்சிஎன்பதுபோல. ஏனம்—பன்றி. பன்றியின் கொம்பினுக்கு அகத்திப்பூ உருவத்தாலும்

வடிவத்தானும் உவமையாயிற்று. பன்றியின் கொம்பு விளைந்து வெண்மையாகவிருத்தலை "ஏனத்து வளைவெண் கோடு பறித்து" என்னும் சிலப்பதிகாரத்தானும் (12: 24-5) அறிக. அரைநாள்—நடுவியாமம். நாய்க்கு வாய் அங்காந்திருத்தலியல்பாதலின் 'பகுவாய் ஞமலி' என்றார். புதல்—தூறு, பற்றை. தொடர்வலை—ஒன்றோடொன்று பிணைத்த வலை. முள்ளரைத்தாமரை—முள்ளைத் தண்டிலே யுடைய தாமரை. "முட்டாட்டாமரை" என்றார் திருமுரு காற்றுப்படையினும் (73) கடுங்கண்-தறுகண்மை. கடறு-காட்டிலுள்ள முயல் முதலியவற்றிற்கு ஆகுபெயர். கானவர் என்பது குறிஞ்சிக்குரியதாயினும் "வந்தநிலத்தின் பயத்த வாகும்" (தொல். அகம் 19) என்பதனால் திணைதொறும் மருவிய பெயராய்ப் பாலைக்கு உரியதாயிற்று.

அதர்மருங்கின் (106) குழித்த (107) பயம்பின் ஒடுங்கி (108) ஏனம் வரவுபார்த்திருக்கும் (110) இரா வேட்டமழுங்கிற் பகனுளிலே (111) எருக்கி (112) மாட்டி (113) முயலைப் போக்கறவளைத்துக் (115) கானவர் உண் ணும் (116) அருஞ்சுரம் எனமுடிக்க.

(117—129) பகைவரைக் குத்தி நுனி மழுங்கிய வேலைப் பலகையொடு நிரைத்து வில்லைச் சார்த்தி வைத்த அம்பு கிடக்கும் வீடுகளையும், ஊகம்புல்லால் வேய்ந்த மதிலையும், அம்புக்கட்டுக்களுடன் துடி தூங்கும் பந்தரினையும் நாய்கட்டிய காவலுடைய வீட்டினையும், காவற்காட்டினை யுடைய பக்கத்தினையும், கழுக்கள் நிரைத்த வாயிலினையு முடைய எயினரின் குறும்பு என்க.

ஒன்னாத் தெவ்வர்-பொருந்தாத பகைவர். "தெவ்வுப் பகையாகும்" என்பது தொல்காப்பியம். எஃகு—வேல்.

பலகை—கேடகம். "விளங்கு பொன்னெறிந்த நலங்கிளர் பலகையொடு" என்றார் புறநானூற்றினும் (15:1[illegible]) கணை—அம்பு. வியல்—அகலம். இப்பொருட்டாதலை "வியலென் கிளவி யகலப் பொருட்டே" என்பதனானறிக (தொல்.உரி. 68) ஊகம்—ஊகம்புல். வரைத்தேன்—மலையிற் றேனிறால். தேன், தேனையுடைய கூட்டிற்கு ஆகுபெயர். கடுந்துடி—கடியதுடி. தொடர்நாய் யாத்த—சங்கிலிகளாலே நாய்களைக் கட்டிவைத்த. "கடுங்குரற் கதநாய்நெடுந்தொடர் பிணித்து" என்றார் திருவாரூர்மும்மணிக் கோவையினும். எயினர் குறும்பு—எயினச் சாதியிலுள்ளாருடைய அரண்.

கணைதுஞ்சு வியனகரையும் ( 21) வரைப்பினையும் (122) பந்தரினையும் (124) கடிநகரினையும் (125) படப்பையினையும் (126) வாயிலினையுமுடைய (128) எயினர்க்குறும்பு என முடிக்க.

(130—133) காழ்—விதை. சுவல்விளைநெல்—மேட்டு நிலத்தே விளைந்த நெல். அவிழ்ச்சொன்றி—அவிழாகிய சோறு. "யாவருங்கண்டு மதிமருளும் வாடாச் சொன்றி" எனப் பதிற்றுப்பத்தினும். (24) வருதல் காண்க. வறை—பொரியல். கால்யாத்தல்—மறைத்தல்.

(134—147) மறத்தைப்பூண்ட வாழ்வினையும், கொள்ளை கொண்டுண்ணும் உணவினையுமுடைய வாட்டொழில் செய்யும் குடியிற்பிறந்த குறிஞ்சி நிலத்துத் தலைவன் காவலாளருடன் பகைப்புலத்தே சென்று அவர்கள் பசுக்களைக் கொண்டுபோந்துகள்ளுக்கு விலையாகப்போக்கிப் பின் தோப்பிக்கள்ளையுண்டு கிடாயை யறுத்துத் தின்று மத்தளம் முழங்கப் பகற்பொழுதிலே ஆடும் முரண்டலை என்க.

பி. ரை.— இடு. வலிகூட்டுணவு—தமது வலிமையினாலே கொள்ளை கொண்டுண்டிடும் உணவு. புலிப்போத்து—புலியினது போத்து. "பொறிவரியிருப் புலிப்போத்து" என்றார் பெருங்கதையினும். போத்து என்னும்பெயர் புலியின் ஆணுக்குரித்தாதல் "பெற்ற பெருமை புலிமரைபுல்வாய், மற்றிவையெல்லாம் போத்தெனப் படுமே" என்னும் தொல்காப்பியமரபியற்சூத்திரத்தாலறிக. புலிப்போத்தை வீரனுக்கு உவமை கூறுதலை "குயவரி வேங்கை யனைய வயவர்" என்னும் புறப்பொருள் வெண்பாமாலையானுமறிக. தோப்பி—நெல்லாற் செய்யும் கள். மதவிடை—வலிமையுடைய ஆட்டுக்கிடாய். "செங்கண் மழவிடை கொண்டுச் சிலைமறவர்" எனப் பெரும்பொருள்விளக்கத்தினும் வருதல் காண்க. மடிவாய்த்தண்ணுமை—தோலை மடித்துப் போர்த்த வாயையுடைய மத்தளம். "மடிவாய்த் தண்ணுமை நடுவண் ஆர்ப்ப" என்றார் நற்றிணையிலும். (130: 2)

காளை (138) சுற்றமொடு (139) கடிபுலம் புக்கு (140) தந்து தொலைச்சி (141) பருகி 142) கெண்டி (143) சிலைப்ப (144) மூச்சி (145) தூங்கும் (146) இருக்கை என முடிக்க.

(147—154) மறிய குளகு—ஆட்டு மறிகள் தின்று தின்னும் தன்மையுடைத்தான தழை. குரம்பை—குடில். செறி கழிக்கதவு—கட்டப்பட்ட கழிகளான கதவு. சாய்ப்பு—சேக்கை. இது வரிந்த கழிகளிடத்தே வாருக் கற்றைகளாலே வேயப்பட்டது. அதளோன்—தோலைப்பாயலாகவுடைய முதியோன். உதளநெடுந்தாம்பு—ஆட்டினது நெடியகயிறு. உதள் என்னும் பெயர் ஆட்டிற்குரித்தாதலை "மோத்தையுந் தகரு முதளு மப்பரும், யாத்த வென்ப

யாட்டின் கண்ணே" என்பதனாலறிக. (தொல் மரபு 47) துருவை—செம்மறிக்கிடாய். "துராஅய் துற்றிய துருவையம் புழுக்கின்" என்றார் பெருநராற்றுப்படையிலும். (103) வெள்ளை—வெள்ளாடு. இடூமுள்—கட்டுமுள்.

காலினையும் (148) வாயிலினையும் கதவினையும் (149) சாம்பினையும் (150) காப்பினையும் (151) உடைய குரம்பை என்க.

குரம்பையினையும் (148) முன்றிலினையும் (152) வேலியினையுமுடைய வரைப்பென்க.

(155—162) விடியற்காலையில் எழுந்துபோய்த் தயிரைக்கடைந்து வெண்ணெயை யெடுத்தபின் மோர்ப்பானையைச் சுமந்து சென்று மோரை விற்கும் ஆய்மகள் என்க.

நள்ளிருள்விடியல்—செறிந்த இருள்போகின்ற விடியற்காலம். புள்ளெழப்போகி—புட்கள் துயிலெழா நிற்க எழுந்து போய். நள்ளிருள் விடியலிற்போய்த் தயிர்கடைந்து என ஆற்றொழுக்காய் பொருள் கொள்க. போகி என்பதனை புகர்வாழ்க்குழிசி பூஞ்சுமட்டிரீஇப் போகி என 159-ம் அடியோடு கூட்டிப் பொருளுரைப்பர் நச்சினார்க்கினியர்.

புலிக்குரல் மத்தம்—புலியினது முழக்கம் போலும் முழக்கத்தையுடைய மத்து. தயிர்கடையும் ஓசை புலி முழக்குப் போன்றிருத்தலை "தயிர்கடையு மோதை, கொல் புலி முழக்க மென்ன வயின்றொறுங் குழூஉம்" என்னும் நைடதத்தினும் காண்க. முகை—மொட்டு முகிழ்—ஆடையின்மேல் புடைத்து நிற்பது. கடையுங்காலத்துத் தயிர் புள்ளியாகத் தெறித்துப் பானையிற் கிடத்தலின் 'புகர்

மோர்க்குழிசி' என்றார். பூஞ்சுமட்டிரீஇ—மெத்தென்ற சுமட்டைத் தலையின்மேல் வைத்து. "பூஞ்சுமட்டிரீஇப் பொற்புமைந் தாங்க" என்றார் பெருங்கதையினும். துயல் வருஉம்—அசையும். இச்சொல் இப்பொருட்டாதலை "நகை தாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை" என்னும் திருமுருகாற்றுப்படையினும் காண்க. பணைத்தோள்-மூங்கிற்போலுந் தோள். பெருமையையுடைய தோள் எனினுமாம்.

புள்ளெழப்போகி (155) வாங்கி (156) கலக்கித் தெளிக்கும் (158) இரீஇ (159) மாறும் (160) ஆய்மகள் என்க.

(163—168) அளைவிலையுணவு—மோர்விற்றதனாலுண்டாகிய உணவு. "அளைவிலையுணவி னாய்ச்சியர்" என்றார் சிலப்பதிகாரத்தார். (16: 3.) கருநாகு—கரிய எருமை நாகு. நாகு என்பது இளமையையும் பெண்மையையும் உணர்த்தும் பெயர். இங்கே இளமையை யுணர்த்திற்று. இப்பொருட்டாய் வருதலை "நல்லாவின் கன்றாயி னாகும் விலைபெறூஉம்" என்னும் நாலடியாரினும் காண்க. (115) ஆய்மகள் குறிஞ்சி நிலத்தே சென்று நெய்யை விற்று அவர்கள் அடுத்துக்கொண்ட எருமை முதலாயவற்றை விலையாக வாங்கினளென்க. மடிவாய்க் கோவலர்—சீழ்க்கை யடித்தலாலே மடித்த வாயையுடைய இடையர். பார்ப்பு என்பது இளமையை யுணர்த்தும் பெயர்.

ஆய்மகள் (162) அருத்திக் (163) கொள்ளாளாய்ப் (164) பெறூஉங் (165) கோவலர் குடிவயிற் சேப்பின் (166) இளைமுரல் பாலொடு பெறுகுவிர் என முடிக்க.

(169—175) வலிமையுடைய அடியிணையுங் கடுமையூன்றினவும் ஒடியெறிந்து கொடுச்சுட்கோடாரியால் தழும்பிருந்தனவுமாகிய கைகளையும் மயிரெழுந்த தோட்கட்டிணையும் ஒன்றாகப் பொருந்திய உடையிணையுமுடைய இடையன் என்க.

தொடுதோல்—செருப்பு. விழுத்தண்டு—பகைவருக்குத் துன்பஞ் செய்யும் தடி. விழுமம்-துன்பம். இப்பொருட்டாதலை, "விழுமங்கூர வேய்த் தோளரிவை" என்னும் புறப்பொருள்வெண்பாமாலையினும் காண்க. (266) மழு—கோடாரி. மயிர்ச்சுவல்-மயிரெழுந்த தோள். "சுவலெழுந்தப் பலகாயசில்லோதிப் பல்லிளையர்" என்றார் பிறரும். (புறம் 139) மேம்பால் உரைத்தஓரி—பசுக்கறக்கும்போது கையில் மேவிய பாலை தடவின மயிர். எல்லைமணமும் பொருந்தும் பசுக்கறந்த பாற்கையைத் தடவின மயிர் என்றுரைப்பர் நச்சினார்க்கினியர். படலைக்கண்ணி—கலம்பகமாகிய மாலை. "முறியிடைப் படலைமாலைக் குருதிகொப்பளிக்கும் தாரான்" என்றார் சிந்தாமணியினும். (189) ஒன்றமர் உடுக்கை—இருநுனிகளும் ஒன்றாகப் பொருந்திய உடை. உடுக்கப்படுவது உடுக்கை. 'உடுக்கையிழந்தவன் கைபோல' என்றார் திருவள்ளுவநாயனாரும்.

அடியிணையும் (169) கையிணையும் (170) சுவலிணையும் (171) ஓரியிணையும் (172) கண்ணியிணையும் (174) உடுக்கையிணையும் (175) உடைய இடையன் என முடிக்க.

(176—184) இடையன் கானத்தில் தங்கி குழலில் வாசித்த பாலைப்பண்ணை வெறுக்கின் வில்யாழிடத்து வாசிக்கின்ற குறிஞ்சிப்பண்ணை வண்டுகள் தம் சுற்றத்தின்

ஓசையாகக் கருதிக் கேட்கும் அகற்சியையுடைய முல்லை நிலம் என்க.

அல்கி—தங்கி. ஞெலிகோல்—தீக்கடைகோல். ஞெலிதல்—கடைதல். தீக்கடை கோலாலே கடைந்து தீயை எடுத்தல் பண்டைக்கால வழக்கம். "புல்லென் மாலைச் சிறு தீ ஞெலியும் கல்லா விடையன்போல" என வருதலுங் காண்க. (புறம்331) தொட்ட—துளையிட்ட. இன் தீம்பாலை-மிகவு மினிய பாலை என்னும் பண். இனிமை யென்னும் பொருளைத்தரும். இன், தீம் என்னும் சொற்கள் பிரிவின்றித் தொடர்ந்து வந்தமையை, "ஒருபொருளிருசொற் பிரிவில வரையார்" என்னும் தொல்காப்பிய எச்சவியற் சூத்திரத்தால் முடிக்க. பல்காற்பறவை—வண்டு. கிளை செத்து ஓர்க்கும்—சுற்றத்தின் ஓசையெனக் கருதிச்செவி கொடுத்துக் கேட்கும். வண்டுக்குச் செவியுணர்வுண்டென்பதை. "பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த, தாதுண் பறவை பேதுற லஞ்சி, மணிநா யாத்த மாண்வினைத் தேரன்" என்னும் அகநானூற்றினுலறிக. (4) வியன்புலம்-அகற்சியையுடைய நிலம்.

இடையன் (175) அல்கி (176) குழலின் (179) பாலையைத்தான் முனையின் (180) வில்யாழிசைக்கும் குறிஞ்சிப் பண்ணைப் (182) பறவை ஓர்க்கும் (183) வியன்புலம் என முடிக்க.

(185—196) விடத்தர் முதலியன வளர்ந்த காடுகள் சூழ்ந்த வரைப்புக்களின் சீறூர்களில் வரகரிசிச் சோற்றை அவரைவிதையின் பருப்பை இட்டுப்புழுக்கிய மூரலோடே பெறுகுவிர் என்க.

திரிமரம்—திரிகை. நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழ் கொட்டில்—நெடிய சுவர் தேய்ந்த புகைசூழ்ந்த கொட்டில். நெடுகக் கட்டி ஒருபக்கத்தே அடுப்பெரித்து, ஒரு பக்கத்திலே தொழிலொழிந்த நாளில் சகடையினுருளைகளையும் கலப்பையையுஞ் சார்த்தி வைத்து எருதுகளுங் கட்டி நிற்றலிற் கொட்டிலென்றார். பா—பரந்த. இச் சொல் இப்பொருட்டாதலை, "படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தாள் நெடுநல் யானையும்" என்னும் புறநானூற்றானறிக. (72) கருவை—வரகு வைக்கோல். சீறூரென்றது முல்லை நிலத்து உழுதுண்பாரிருப்பினை. நெடுங்குரல்—நெடிய பூங்கொத்து. இப்பொருட்டாதலை "அரும்பீன்றவிழ்ந்த கருங்குரல் நொச்சி" என்னும் கார்நாற்பதினும் காண்க. வீ—பூ. "சுரும்புண நறுவீ புரைக்கும் நாகம்" என்னும் சிறுபாணாற்றுப்படையினும் இப்பொருளாதல் காண்க. வேங்கைப்பூ வரிகளையுடைய அவரைவிதைக்கு உவமை. புழுக்கு—புழுங்க வெந்தது.

முன்றிலினையும் (186) பந்தரினையும் (187) கொட்டிலினையும் (189) கவின்குடியினையுமுடைய சீறூரென்க.

(196—206) உழவுத் தொழிலுடையோர் அத்தொழிலிலே பயின்ற எருதுகளை நுகத்திற் பூட்டிச் சென்று கொழுக்கள் மறைய அமுக்கி யுழுது விதைத்த தோட்டத்தை அறுக்குங் காலத்தில், அவ்வுழவர் ஆரவாரத்திற் கஞ்சி அவ்விடத்தினின்றுபோய் குஞ்சுகளுடனே குறும்பூழ் தங்கும் வன்புலம் என்க.

செஞ்சாலுழவர்—செவ்விய சாலாக உழுகின்ற உழவர். நவில் பகடு—உழவுத் தொழிலிலே பயின்ற எருது.

நாஞ்சில்—கலப்பை. உடுப்புமுக முழுக்கொழு—உடும்பி னது முகத்தை யொத்த பெரிய கொழு. "உடுப்புமுகத்த கூர்ங்கொழு" என்றார் கூர்மபுராணத்தும், (வருணச் 15) துளர்படு துடவை—களைக்கோட்டால் களைகளைக் கொத் தும் தோட்டம். கொட்டு—மண்வெட்டி. "தொய்யாது வித்திய துளர்படு துடவை" என மலைபடுகடாத்து வருவதுங் காண்க. (122) இளம்பிள்ளை—இளையகுஞ்சு. பிள்ளையென்னும் இளமைப் பெயர் பறப்பனவற்றுக்கு உரியதாதலை "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை" என்னும் தொல்காப்பிய மரபியற் சூத்திரத்தால் அறிக. கறையணல்—கருமையான சுழுத்து. "மையார ணல் மணி நாகம்" என்றார் சிந்தாமணியிலும். (2345) வன்புலம் என்றது மருத நிலத்தைச் சார்ந்த முல்லை நிலத்தையென்க.

உழவர் (197) பூட்டி (198) ஊன்றி (200) உழுத துடவை (201) அரிபுகு பொழுதில் போகி (202) பிள்ளை தழீஇ (204) குறும்பூழ் சேக்கும் (205) வன்புலமென்க.

(206—212) நெண்டினது முழை கெடும்படி பசிய கோரையைக் குத்தியெடுத்த கரிய கடாக்கள் தம்மிற் பொருத இடமகன்ற செய்யின்கண் உழவர் நாற்றை நட்ட அச்செறுவில் என்க,

மென்தோல் மிதியுலைக் கொல்லன் — மெத்தென்ற துருத்தியை அமுக்கி ஊதுகின்ற உலையிற் கொற்றொழில் செய்கின்றவன். "மிதியுலைக் கொல்லன் பொதியுலை" என் றார் பெருங்கதையினார். அளறு அளை—சேற்றின்கண் ணுண்டாகிய முழை. பைஞ்சாய்—பசிய கோரை. உழாஅ நுண்தொளி — உழப்படாத நுண்ணிய சேறு. "உழாஅ நுண்டொளியுள் புக் கழுந்திய" என்றார் சிலப்

பதிகாரத்தும் (10:120) முடி நாறு — முடியாகக் கிடக்கின்ற நாற்று. செறு (211) என்பது சுட்டுப் பொருளாய் நின்றது. சிதையக் (208) கொன்ற மருப்பின் (209) ஏறு பொருத செறுவில் (210) தொளியை நிரவிய வினைஞர் (211) நாற்றை யழுத்திய செறுவெனச.

(213–217) அச்செய்யில்களை பறிப்பார் பறித்தெறிந்த நெய்தற் பூவை வெறுத்தாராயின், முள்ளியின் பூவைப் பறித்துக்கொண்டு தண்டான் கோரையைக் கிழித்து முடிந்த நாராற் கட்டிய மாலையை கரிய தலையிற் சூடி என்க.

கணைக்கால் — திரண்ட கால். தகடு — பூவின் புறவிதழ். இப்பொருட்டாதலை "வேங்கை மாத்தகட் டொள்வீ" என்னும் புறநானூற்றானு மறிக. (202) கொடுங்கால் - பூவினது வளைந்த காம்பு. பஞ்சாய்க்கோரை — தண்டான் கோரை. பல்லிற் சவட்டி—பல்லினாலே கிழித்து. புணர் நார் பெய்த—ஒன்றோடொன்று முடிந்த நாராற் கட்டின. பல்லினாற் சவட்டிய நாரினால் மாலை கட்டலை "பல்லினாற் சுகிர்ந்த நாரின் பனிமலர் பயிலப் பெய்த முல்லைம் கண்ணி" என்னும் சீவகசிந்தாமணியாலு மறிக (438).

(220—242) தொழில்செய்வாருடைய சிறு பிள்ளைகள் பழைய சேற்றை வெறுத்து அவலையிடிக்கின்ற உலக்கை ஓசைக்குக் கிளிகள் அஞ்சுகின்ற கழனியிடத்து விளைந்த நெல்லினை யறுத்த வினைஞர் மருதமர நிழலில் போராக அடுக்கிப் பின் அவற்றின் அடியை விரிச்துக் கடாவிட்டு வைக்கோலையும் கூளத்தையும் நீக்கி மேல்காற்றிலே தூவித் தூற்றின பொலி செம்பொன் மலைபோலத் தோன்றும் தண்பணை தழீஇய இருக்கை என்க.

பொன்வாள் வட்டணை—பொன்னை யுரைத்து அதன் மாற்றறிதற் கமையும் உரைகல். “பொன்னின் உரைதிகழ் கட்டளை யன்ன ஏறுந்தோன்றியினும். (192) சண்பி னது சார்ந் தோன்றிய தாது பொற்பிலே மீளக் கிடத்தல் உரைகல்லிலே பொன்னை யுரைத்தாற்போன்றிருந்தது என்க. எதிர்த்தால் என்பது இரும்பு முதலான அயன பொருட்களை அடித்து நெகிழ்த்துச் செய்யும் வேலையி னும் கொல்லுத் தொழிலும் பழகிய கை என்க. என்னை? கொல்லாழ் தொழிலினும் வன்பணித் தொழிலினர், நன்றிய தொழிற்றலைக் கருங்கை யெனப்படுவர்” என்பது ஆசிரியம் என்க. (சிலப். 5:29 மேற்கோள்) வினைஞர் என்றது பள்ளர் முதலியோரை. கவிகுடில்—கவிந்த குடில். இக்குடில்கள் பன்றி முதலான பிராணிகள் பயிர்களை அழிக் காமல் காத்தற்பொருட்டுக் கட்டப்பட்டவை என்க. பாடு—முதை. விறந்து—செறிந்து. இச்சொல் இப் பொருட்டாதலை “விறப்பும் உறப்பும் வெறுப்புஞ் செறிவே” என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. (எச் 51) படுபகை—தமக்கு உண்டாகின்ற பகை. நீங்கா யாணர்— இடையறாத புதுவருவாய். கடுப்புடைப் பறவை—எறியப் பட்டார்க்குக் கடுக்கும் தன்மையைக் கொடுக்கும் குளவி. பழைய மரப் பொந்துகளில் பாம்பு கிடத்தலியல்பாகலின் ‘பாம்புறை மருது’ என்றார். பலிய வற்றி—மிகவும் நிறை யப் போராகவிட்டு. துணங்கை—கைபுணர்ந்தாடும் ஒரு வகைக் கூத்து. “முடக்கிய இருகை பழுப்புடை யொற்றத், துடக்கிய நடையது துணங்கையாகும்” என்பது திவாகரம். சிலம்பி வால்நூல்—சிலந்தியினது வெள்ளிய நூல். சிலந்தி யின் வலைக்குத் துகில் உவமையாதலை “முழுமெய்யும் சிலம்பி வலந்ததுபோல் போர்வை போர்த்து” என்பதனாலறிக.

(சீவக 340) செம்பொன்மலை—மேருமலை. "செய்யபொற் குன்றும் வேறு நவமணிச் சிலம்பு மென்னக் கைவினை மள்ளர் வானங் கரக்க வாக்கிய நெற்குன்றால்" எனப்பெரிய புராணத்து வருவதுங் காண்க.

மார்பினையும் (221) தோலினையுமுடைய (222) வினைஞர் சிறார் (223) முனைஇ (224) அவமெறியுலக்கைப் பாடு விறக்கையாலே (226) கிள்ளை வெரூஉம் (227) கழனிகளில் (228) விளைந்த (230) துமித்த வினைஞர் (231) ஏற்றித் (233) தொலைச்சி (237) நீக்கி (236) எறிந்த குப்பை (240) தோன்றும் இருக்கையெனக் கூட்டுக.

(243—253) அழியாத்தன்மைவாய்ந்த கூடுகள் வளர்ந்த இல்லினையும், சிறுதேர் உருட்டிய பிள்ளைகள் செவிலித்தாயரின் பாலையுண்டு துயில் கொள்ளும் நல்ல இல்லினையும், மிடியறியாத குடியிருப்பினையுமுடைய ஊரின்கண் ணே தங்கின் நெற்சோற்றை ஊனோடு பெறுகுவிர் என்க.

பகட்டா—பெருமையுடைய பசு. கொடுநடைக்குழவி—வளைந்த அடியையுடைய கன்று. குழவி—இளமைப் பொருளுணர்த்தும் பெயர். "மளவுங் குழவு மிளமைப் பொருள" என்பது தொல்காப்பியம். (உரி 15) கவை என்பது கவைத்திருக்கும் தாமணியை யுணர்த்துதலின் ஆகுபெயர். தாம்பு—கயிறு. காழ்ஊன்று அல்குல்— தறிகள் நட்டபக்சர். நெடுமார்பு—நெடிய வடிவு. பழம்பல்லுணவு—பழையவாகிய பலநெல்லு. செந்நெல் முதலிய சாதிப்பன்மைகருதிப் 'பல்லுணவு என்றார். குமரிமூத்த கூடு—அழியாத்தன்மையவாய் முதிர்ந்த கூடு. "குமரிக் கூட்டிற் கொழும்பல்லுணவு" என்றார் சிலப்பதிகாரத்தும். (10:123)

அல்குலினையும் மார்பினையும் உணவினையுமுடையகூடென்க. ஊராநற்றேர்—பிறரால் ஏறப்படாத நல்ல சிறியதேர். தளர்நடை—தளர்ந்தநடை. "குழவி தளர்நடையைக் காண்டலினிதே" என்பது இனியது நாற்பது. படுக்கை. "பொற்புடை யாளி யங்கட் பூவணைப்பள்ளி" எனச் சீவகசிந்தாமணியில் வருதலுங் காண்க. செவிலியர் பெண்டிர் என்பது ஒருமை பன்மை மயக்கம். மல்லல்—வளப்பம். இப்பொருட்டாய் வருதலை "மாடமோங்கிய மல்லல் மூதூர்" என்னும் நெடுநல்வாடையினுங்காண்க. "மல்லல் வளனே" என்றார் தொல்காப்பியனாரும். (உரி 7) வெண்ணெல் வல்சி—வெள்ளிய நெற்சோறு. மனைவாழ் அளகு—மனையின் கண் வாழும் கோழிப்பெடை. அளகு என்னும் பெயர் கோழிக்குரியதாதலை "கோழி கூகை யாயிரண்டல்லவை, சூழுங்காலையளகெனலமையா" என்னும் தொல்காப்பிய மரபியற்சூத்திரத்தானறிக.

செறுவிற் (212) புதுப்பூ முனையின் (214) மாமலர் கொய்துகொண்டு (216) சுவட்டிப் (217) பெய்த கன்னியைச் (218) சூடித் (219) தளராவிருக்கைகளிற் (242) கூடோங்கு நல்ல இல்லையும் (247) அளகினையுடைய நல்ல இல்லையும் (252) துளங்காவிருக்கையினையுமுடைய பேரூரிலே தங்குவீராயின் (254) வல்சியை (255) வாட்டொடும் பெறுகுவிரெனக் கூட்டுக.

(257—262) பக்கமலையிலே யாளி பாய்கையினாலே யானை கலங்கிக் கூப்பிட்டாற்போல ஆலை ஆரவாரிக்கும் கருப்பஞ்சாற்றைக் காய்ச்சும் கொட்டில்கள் தோறும் கரும்பின்சாற்றைக்குடிக்கு அக்கரும்பின் கட்டியைத் தின்பீராக என்க.

கரும்பின்சாற்றை இடையறாது காய்ச்சுதலால் உண்டாகும் புகை சூழ்ந்திருத்தலின 'புகைசூழ் ஆலை' என்றார்.

"கரும்புகண் ணுடைப்பவ ராலைதோ றெலாம்
விரும்பிவந் தடைந்தவர் பருகி விஞ்சிய
திருந்துசா றடுவுழிப் பிறந்த தீம்புகை
பரந்துவிண் புகுதலிற் பருதி தேய்ந்ததே"

என்னும் சீவகசிந்தாமணிச் செய்யுள் ஈண்டு அறிதற்பாலது.

முகில் விளையாடும் கழைவளர் அடுக்கம்—மேகங்கள் விளையாடுகின்ற மூங்கில் வளர்ந்த பக்கமலை. "மழைவிளையாடுங்குன்று" என்றார் குறுந்தொகையினும். கணர்—திரட்சி. எந்திரப்—ஆலை. "கழைக்கரும் பெறிந்துகண் ணுடைக்கு மெந்திரம்" எனவருவதுங்காண்க. (சீவக1614) ஆலை—கொட்டில். கரும்பாலையின் ஓசை, யானையின் ஒலி போன்றிருக்குமென்பதை "கரும்பினெந்திரங் களிற்றெதிர் பிளிற்றும்" என்னும் ஐங்குறுநூற்றினுங் (55) காண்க. மிசைதல் என்பது தின்றலென்னும் ஒருவினைப் பொருளில் வந்தது. இங்ஙனம் வருதலை, "மூங்கின் மிசைந்த முழந்தா ளிரும்பிடி" என்னும் கலித்தொகையினும் (50:2) "வீழ்களிறு மிசையாப் புலியினும்" என்னும் அகநானூற்றினும் (29:3) காண்க.

(263—274) பந்தரிலே இளையவர்களும் முதியவர்களும் நிறைந்திருந்து கயல்களோடே இறுப்பிறழும் குணங்களிலே உலாவி மீனைப்பிடித்துக் கோடை காலத்தும் வற்றாத குளங்களைக் காத்திருக்கும் வலைஞர் என்க.

வேழக்கோள்-பேய்க்கரும்பந்தட்டை. தாழைமுடித்து-தாழைநாரால் கட்டி. தாழை என்பது தாழையிலிருந்து

எடுக்கப்படும் நாரையுணர்த்துதலால் ஆகுபெயர். முடி தந்து முடித்தென விகாரம். தருப்பை வேய்ந்த-தருப் பைப் புல்லால் வேய்ந்த. பந்தர் புன்னை மரத்தின் கொம் புகளை வெட்டியிட்டதென்க. பைங்காய்—பசியகாய். அவை சுரைக்காய் முதலியன. பசுமையையும் நிலையையும் கயலுக் கும் இறவுக்கும் உவமையாக நிர நிறையாகக் கொள்க. இறவுக்குச் சிலை உவமையாதலை "முடங்கிறவு பூட்டுற்ற வில்லேய்க்கும்" என்பதனுல் (திணைமாலை 131) அறிக. குட்டம்-ஆழம். இப்பொருட்டாதலை "இருமுந்நீர்க்குட் டமும்" என்னும் புறநானூற்றுனும் (20) அறிக. இங்கே ஆழமான குளங்களை யுணர்த்திற்று. தோள்தாள் குளத்த கையை மேலே கூப்பி முழுகி நீர்நிலை சாட்டும் காலத்துக் கையமிழ்ந்தாங் குளங்களினுடைய. "வெளிற்றுடற் குருதி வெள்ள நிலையிது வென்ப வேபோற், களிற்றுகிர்ப் பிறழ்பற் பேய்கள் கைகளை யுச்சி கூப்பி, யளித்தவை பாடி யாட" என்றார் சிந்தாமணியினும். (804) வலைஞர்-வலையை வீசுவார். வலையான் முயன்றுண்பவன் வலையன் என்பர் பிரயோகவிவேக நூலார்.

குறியிறைக் குரம்பையிலையுடை முன்றிலினையு (265) முடைய குடி (274) என்க.

பந்தரிலே (267) துவன்றி (268) வழங்கிக் (271) காத்திருக்கும் (273) வலைஞரென்க.

(275—282) கொழியலரிசியைத் துழாவி யட்ட கூழைப் பிழாவிலே உலரவாற்றி நல்ல முளையை யிடித்து அதிலே கலந்து சாடியிலே இளையறும்படி முற்றின நறிய கள்ளை மீனைச்சுட்டதனோடே பெறுகுவிர் என்க.

அவையா அரிசி—குற்றாத கொழியலரிசி. அவையல்—குற்றல். இதனை "ஆய்தினையரிசியவைய லன்ன" என்னும் பொருநராற்றுப்படையானும் (16) அறிக. துழவை—துழாவியட்ட கூழ். குரும்பி—புற்றாம்பழஞ்சோறு. எல்லை—பகல். இச்சொல் இப்பொருட்டாதலை "திருவின் மாந்தர் நெஞ்சி னெல்லை யிருளிற் றாகி" என்னும் சிந்தாமணியானும் (1416) அறிக. வளைச்சற விளைதல்—இளமையறும்படி முற்றுதல். "வழைச்சறுசாடிமட்டயின் று" என (சீவக 1614) வருவதுங் காண்க. தண்மீன்—மிகவும் உலராத மீன்.

துழவையை (275) ஆற்றி (376) அளைஇக் (278) சழிப்பி (279) விளைந்த (280) பிழி (281) யென்க.

வலைஞர் குடிவயிற் சேப்பின் (274) பிழியைச் (281) சூட்டொடு பெறுகுவிர் என முடிக்க.

(283—296) வாளைமீன் நீர்க்குச் சமீபத்தில் நின்ற பிரம்பின் கிழலை நீரிற்கண்டு அஞ்சும் குளத்தில் பூத்த தாமரைப் பூவைப் பறித்தலைப் பரிகரித்து, இந்திரவில்லை யொப்ப நிறம் மாறுபட்ட பூக்கள் மலிந்த பொய்கைகளிடத்தே பறிப்பார் நுங்களுக்கிட்ட பூக்களை நாட்காலத்தே சூடிப்போமின் என்க.

பச்சூன் பெய்த பைந்தோலென்றது, தூண்டிலே கோக்கும் ஊனுகிய இரையை இட்டு வைக்கும் தோற் பையை. இதனைத் தோளிடத்தே இட்டு வைத்திருத்தலின் 'சுவல்பிணிப் பைந்தோல்' என்றார். பொதியிறை—தூண்டில் மறையும்படியாகப் பொதிந்த இரை. தூண்டிலினுக்கு எப்பொழுதும் வாய் மடிந்திருத்தலின் 'மடிவாய் இருப்பு' என்றார். புலம்ப—இரையின்றித் தனிப்ப. "புலம்பே தனிமை" என்பது தொல்காப்பியம். நீர்க்

கணித்தாய் நின்ற பிரப்பின் நிழல் காற்றுலைசைய அதனைத் தன் பகையென எண்ணியதால் வாளைமீன் அஞ்சியது. நீத்தம்-பெருக்கு. கடவுள் ஒள் பூ— கடவுள் சூடுதற்குரிய ஒள்ளிய தாமரைப் பூ. உறை— நீர்த்துளி. இப்பொருட்டாதலை "பாபமை, வாள்போழ் விசும்பில் வள்ளுறை சிதறி" என்னும் திருமுருகாற்றுப்படையானுமறிக. குறைவில்-இந்திரவில். உயற்சி என்னும் பொருளைத் தரும் ஓங்கு, உயர் என்னும் சொற்கள் பிரிவின்றித் தொடர்ந்தமை "ஒருபொருளிருசொற் பிரிவிலவரையார்" என்னும் தொல்காப்பியச்சூத்திரத்தால் கொள்க. (சொல், எச்ச 64) குறுநர்-பறிப்பவர்.

வாழை (287) வெரூஉம் (288) நெடுங்கயத்திலே மலர்ந்த (289) பூவை ஓம்பிக் (290) குறைவில்லேய்ப்பப் (292) பூமலிந்த பொய்கைகளிடத்தே (294) குறுநரிட்ட மலைப் (295) பிணையினிர் சமிமின் என முடிக்க.

(297—310) வளவிய கன்றைக்கட்டின பந்தரினையும் வழிபடு தெய்வங்களையுடைய அகங்களையுமுடைய மறைகாப்பாளர் உறைபதியில் தங்குவீராயின் பார்ப்பனி பதமறிந்து அட்டனவற்றை ஞாயிறுபட்ட காலத்து நெற்சோற்றை ஊறுகறியோடே பெறுகுவிர் என்க.

செழுங் கன்று-வளவிய கன்று. கன்று என்னும் இளமைப் பெயர் இங்கே ஆன் கன்றை யுணர்த்திற்று, "கன்று புகுமாலை நின்றோ ளெய்தி" என்றார் அகநானூற்றினும். ஆவுக்குக் கன்றென்னும் பெயர் உரித்தாதலை "யானையுங் குதிரையுங் கழுதையுங் கடமையு மானோடைந்துங்கன்றெனற்குரிய" (தொல். மரபு 15) என்பதனாற் கொள்க. பைஞ்சேறு-சாணம். படிவம்—தாம் வழிபடு

தெய்வம். மனையுறைக் கோழியொடு ஞமலி துன்னாது—மனைகளிலே உறைகின்ற கோழிகளுடனே நாயுஞ் சேராமல், "பார்ப்பாரிற் கோழியும் நாயும் புகலின்னா" (இன்னா நாற்பது 3) என்பது ஈண்டறியற்பாலது. மறைகாப்பாளர்-வேதத்தைக் காத்தற்றொழில் செய்கின்ற அந்தணர். வானத்து வடவயின் விளங்கும் சிறுமீன்-விசும்பின் வட திசையில் விளங்கும் அருந்ததி. வானிடத்து வடதிசைக் கண்ணே துருவநட்சத்திரத்தின் அண்மையிலுள்ள எழுமுனி நட்சத்திரங்களில் ஆறுவதாகிய வசிட்டமுனிவரின் பக்கலில் ஒருசிறுவிண்மீன் வடிவமாகத் தோற்றுபவளாகலின் 'வானத்து வடவயின் விளங்குஞ்சிறுமீன்' என்றார். அருந்ததிக்கு சிறுமீன் என்னும் பெயரேயன்றி வடமீன் கடவுண் மீன் அந்திமீன் என்னும் பெயர்களுமுண்டு. மகடூஉ என்பது பெண்பாற் பொதுச்சொல். வயினறிந்து அட்ட என்றது பாற்சோறு பருப்புச்சோறு முதலியவற்றை. பறவைப் பெயர்படு வத்தம்-பறவையின் பெயரைப் பெறுகின்ற நெல்லு. என்றது இராசான்ன மென்னும் பெயர்பெறுகின்ற நெல்லென்றவாறு. இந்த நெல்லுச்சோறே ஆகுதி பண்ணுதற்குச் சிறந்ததென்று இதனைக் கூறினார். வெண்ணெயில் கொப்பட்டி மாதுளையினுடைய வெய்மையுறுகின்ற வகிரோடு மிளகுப்பொடி கலந்து கருவேப்பிலையழாவி மாவடுவினைப் பலவாகப்போகட்ட ஊறுகறியென்க. உருப்பு-வெம்மை "உரிதிமிர்ந்" தன்ன வுருப்பவிரமையத்து என்றார் குறுந்தொகையினும் (151).

மறைகாப்பாளர் உறைபதி சேப்பின் (301) மகடூஉ அட்ட (304) வத்தத்தானுண்டான சோற்றைச் சுடர்க் கடையிலே (305) காடியுடன் பெறுகுவிர் என முடிக்க.

(311—319) நீருண்ணுந் துறையிலே நீராடுமகளிர் இட்ட பொலங்குழையினை சிச்சிலி இரையென எடுத்துக் கொண்டு பனைமடலிற் செல்லாது அந்தணர் யாகசாலையிடத்து நட்ட யூபத்தின் இருந்து யவனர் இட்ட ஓதிம விளக்குப் போலவும் வைகுறு மீனைப்போலவும் தோன்றும் நீர்ப்பெயற்றென்னும் ஊர் என்க.

ஆயம்-திரள், கூட்டம். "ஒருங்கமர் ஆயமொடு ஏத்தினர் தொழுமே" என்றார் பரிபாடலினும். புனலாடு மகளிட்ட பொலங்குழை-நீராடுகின்ற மகளிர் இட்டுப் போன பொன்னாற் செய்த குழை. "புனலாடு மகளிரிட்ட ஒள்ளிழை" என்னும் ஐங்குறுநூறு ஈண்டு (100) ஒப்பு நோக்கற்பாலது. பொன் என்னும் சொல் பொலம் என்று வருதலை "பொன்னென் கிளவி யீறுகெட முறையின்" என்னுந் தொல்காப்பியப்புள்ளிமயங்கியற்சூத்திரத்தால் அறிக. மணிச்சிரல்-நீலமணிபோலும் சிச்சிலி. "புலவுக் கயலெடுத்த பொன்வாய் மணிச்சிரல்" என்றார் சிறுபாணாற்றுப்படையினும். (181) புலப்பு மடல்-ஓலை முதலியனவற்ற தனித்த மடல். "புலம்பே தனிமை" என்பது தொல்காப்பியம். யாகஞ்செய்தலைத்தமது இன்றியமையாத கடமையாகக் கொண்டொழுகினாராகலின் "அந்தணர் அருங்கடனிறுத்த வேள்வி" என்றார். "கேள்வி முற்றிய வேள்வி யந்தணர்" என (புறம் 361) வருவதுங் காண்க. வேள்வித் தூணம்-யாகசாலையிடத்து நட்ட யூபத்தம்பம். "கேள்வி மலிந்த வேள்வித் தூணத்து" எனப்புறநானூற்றினும் (400) 'கிளர்மறை முறையான், வேள்வியாற்றிய யூபமும் சிறந்தன வனேகம்". எனக் காஞ்சிப்புராணத்தும் (நகரேற்றுப் 181) வருவன காண்க. யவனர்-சோனகர். ஓதிம விளக்கு-அன்னவிளக்கு.

வெகுறுமீன்-இராக்காலம் விடிதற்குக் காரணமாகிய வெள்ளியாகிய மீன்.

அசைஇ (316) விளக்கின் (317) மீனிற்றோன்றும் (318) நீர்ப்பெயற்றெனக.

(319—336) மரக்கலங்கள் சூழ்ந்து கிடக்கப்பட்ட கடற்பக்கத்தினையும் மாடங்கள் மலிந்த பலவேறு தெருக்களையும் மிகவுயர்ந்த பண்டசாலைகளையும் நன்றாகிய அகங்களையுமுடைய பட்டினம் என்க.

வாலுளைப்புரவி-வெள்ளிய தலையாட்டத்தினையுடைய குதிரை. "வாலுளைப் புரவியொடு வையக மருள" என்றார் சிறுபாணாற்றுப்படையினும். (92). குதிரைகள் பிறநாடுகளிருந்து நாவாய் வழியாக இங்கு கொண்டுவரப்பட்டன. "நீரின்வந்த நிமிர்பரிப்புரவியும்" எனப் பட்டினப்பாலையிலும் இவ்வாசிரியர் இதனைக் குறிப்பிட்டிருத்தல் காண்க. பரதவர் மலிந்த பல்வேறுதெரு-பரதவர் மிக்க பலவாய் வேறுபட்ட தெருக்கள். சிலதர்-தொழில் செய்வார். மேழகத்தகர்—செம்மறியாட்டின் ஆண். இதனை ஏழகம் என்றும் கூறுவர். கொடும்பூண் மகளிர்—வளைந்த அணிகலங்களையுடைய மகளிர். பைங்காழ்-பசிய மணிகள் கோத்த வடங்கள். வரை—கணு. அது கணுக்களையுடைய மூங்கிலையுணர்த்துவதால் சினையாகுபெயர். வரை என்பது மலையாகாதோவெனின் மால்வரை நிவந்த சேணுயர் வெற்பில்" என்றாராகலின் (திருமுரு 12) ஆகாவென்க. பீலிமஞ்ஞையினியலி-தோகையையுடைய மயில்போலே உலாவி. "மணிவரைச்சாரன் மஞ்ஞைபோல, ஆணிபெறவியலி" என்றார் பெருங்கதையினும். காலதமனியப் பொற்சிலம்பு—கால்களிடத்தனவாகிய தமனியமாகியபொன்னாற்செய்த சிலம்பு.

தமனியக் கால பொற்சிலம்பு எனக்கூட்டிப் பொற்பூண் களையுடைய கால்களிடத்தனவாகிய பொன்னாற் செய்த சிலம்பு என்றுரைப்பர் நச்சினார்க்கினியர். மகளிர் பொற் சிலம்பொலிக்குமாறு வானைத்தீண்டும் மாடத்திடத்தே பந்தையடித்து இளைத்தனர் என்க. வான்றோய் மாடம் என்பதனை மகளிர் என்பதோடுகூட்டி வான்றோய் மாடத்து மகளிர் பந்தடித்து இளைத்து எனப் பொருளுரைப்பர் நச்சினார்க்கினியர். பையபய பொற்கழங்காடும் என்றும் மகளிர் பந்தடித்து இளைத்தாராகலின்.

மகளிர் (327) நுடங்க (329) இயலி (331) மூலிப்ப (332) மாடத்து அசைஇப் (333) பின்னர்ப்பையயக் (334) கழங்காடும் பட்டினம் என்க.

படப்பையினையும் (321) தெருவினையும் (322) வரைப் பினையும் (324) இல்லினையு (327) முடைய பட்டினம் என்க.

(337—345) கள்ளுநண்பார் பலரும் புகுகின்ற வாயி லித்துத் தூவின பூ வாடலையுடை முற்றத்தில் கள்ளைச் சமைக்கின்ற மகளிர் வட்டில்கழுவினநீர் பலகால்வடிதலின் நிறைந்து எழுந்த குழம்பிடத்துச் சேற்றை யளைந்த குட்டி களையுடை பெண்பன்றிகளுடன் புணர்ச்சிக் கருத்தாற் போகாமல் பலநாள் குழியிலே விட்டுப் பாதுகாத்த ஆண் பன்றியின் தசையோடே களிப்புமிக்க கள்ளைப் பெறுகுவிர் என்க.

கள்ளுக்கடைகளின் வாயிலிலே கள்ளிற்போர் கொடி கட்டிப் பூவைத் தூவுதல் பண்டைய வழக்கம். இவ்வழக் கத்தினை இவ்வாசிரியர் "மணற்குவைஇ மலர் சிதறி,

பலர்புகுமனைப் பலிப்புதவின், னறவு நொடைக் கொடியொடு பிறபிறவு நனிவிரைஇப், பல்வே றுருவிற் பதாகை நீழற், செல்கதிர் நுழையாச் செருநகர் வரைப்பில்'' என்று அழ பெறப்பட்டினப்பாலையில் (178-83) குறிப்பிட்டிருத்தலுங் காண்க. பன்றிகள் சேற்றை யளையும் இயல்புடையன வாகலின் ஈர்ஞ்சேறாடிய பிணவு என்றும், ஆண்பன்றியை வெளியே விட்டு வளர்ப்பின் பிணவுடன்சேர்ந்து கொழுப் பின்றுமதலின் குழிநிறுத்தோம்பிய என்றும் அங்ஙனம் விட்டு வளர்த்தமையின் கொழுப்பு மிக்கதாகலின் கொழு நிணத்தடியொடு என்றுங் கூறினார்.

பலர்புகுவாயில்- கள்ளுண்பார் பலரும் புகுகின்ற கட்கடையின் வாயில். செதுக்கு-பூவாடல். வள்ளம் நடக் கிய-வட்டில் கழுவின. பன்மயிர்ப்பிணவு-பல மயிர்களை யுடைய பெண்பன்றி. பிணவு என்னும் பெண்பாற் பெயர் பன்றிக்குரியவாதலை, "பன்றி புல்வாய் நாயென மூன்று மொன்றிய வென்ப பிணவின் பெயர்க்கொடை'' என்பதனு லறிக. (தொல் மரபு 58) பாயம்போகாது-புணர்ச்சியைக் கருதுங் கருத்தாற் போகாமல். நெல்மாவல்சி தீற்றி-நெல்லை யிடித்த மாவாகிய உணவைத் தின்னப்பண்ணி. "நுறுங்கு பெய்தாக்கிய கூழாரவுண்டு, பிறங்கிரு கோட்டொடு பன்றியும் வாழும்'' என அறநெறிச்சாரத்து வருதல் ஈண்டறியற்பாலது. குறுந்தாள் ஏற்றை-குறியகாலையுடைய ஆண்பன்றி. ஏற்றை யென்றார் * ஆற்றலொடு புணர்ந்த வாண்பாலாதலின். கூர்நறா-களிப்பு மிக்க கள்ளு.

வாயிலிடத்து (337) முற்றத்துக்(338)குழம்பிடத்துச் (340) சேறாடிய (340) பிணவொடு போகாது (342) தீற்றி (343) ஓம்பிய ஏற்றின் (344) தடியொடு நறாப் பெறுகுவிர் என முடிக்க.

---

* ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற் கெல்லாம் ஏற்றைக் கிளவி யுரித்தெனமொழிப'' (தொல். மரபு49)

(346—351) தேவருலகுக்கு முட்டுக்காலாக ஊன்றிய பற்றுக்கோடு. போல விண்ணைத் தீண்டும்படி ஓங்கிய மாடத்தில் இராக்காலத்தே கொளுத்திய விளக்கு, கடற்பரப்பிலே வேறொரு துறைக்கண் ஓடுங் கலங்களை அழைக்கும் துறை என்க.

மதலை-பற்றுக்கோடு. இச்சொல் இப்பொருட்டாதலை "பருஉக்கொடி வலந்த மதலை பற்றி" என்னும் மலைபடுகடாத்தும் (216) காண்க. சென்னியையுடைய மாடம் என்க. வேயா மாடம்-கற்றை முதலியவற்றாலே வேயாது சாந்திட்ட மாடம். "வேயா மாடமும் வியன்கலவிருக்கையும்" எனச் சிலப்பதிகாரத்து (5: 7) வருவதுங் காண்க. உரவு நீரழுவம்-கடற்பரப்பு. ஓடு கலம் கரையும்-ஓடுகின்ற கலங்களை இது நம் துறையென்று அழைக்கும். "இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்" என்றார் சிலப்பதிகாரத்தும். ஞெகிழி-நெகிழ்ந்து. இனி ஞெகிழி யென்பதனைக் கடைக்கொள்ளியாக்கி அதனை எரித்துக் கொளுத்தின இலங்கு சுடர் என்றுரைப்பினுமமையும்.

(351—362) தென்னிலையால் வேய்ந்ததும் பஞ்சளையுடைய முன்றிலையும் பூந்தோட்டங்களையுமுடையதுமாகிய தோப்புக் குடிகளின் மனையில் தங்கின் பலாப்பழத்தையும் இளநீரையும் வாழைப்பழத்தையும் நுங்கொடு வேறு பலபண்டங்களையும் சேம்பினையும் தின்பீர் என்க.

கறையடி-உரல்போலும் அடி. தென்னையின் மேற்புறம் சருச்சரையுடைத்தாகலின் யானையின் உடம்பை உவமை கூறினர். படப்பை-பூந்தோட்டம். சூழ்சுளைப்

பெரும்பழம் என்பதற்குத் தின்பார் விரும்பிச் சூழும் கிளையையுடைய பெரிய பழம் என்றுரைப்பினுமமையும். வீழில் தாழை என்பது தென்னைக்கு வெளிப்படை. ஏறு ஏணி என்பதுபோல. தாழைக்கு வீழு திருத்தலின் இதனை வீழில் தாழை என்றார். குழவித்தீநீர்-இளநீர். "பழவுங் குழவு மிளமைப் பொருள" என்பதுங் (தொல் உரி.) காண்க. "பிள்ளை குழவி கன்றே போத்தெனக், கொள்ளவு மமையு மோரறி வுயிர்க்கே" என்றதனாற் குழவித்தீநீர் என்றார் குலைமுதிர்வாழைக் கூனி வெண்பழம்-குலைகள் முதிர்ந்த வாழையினது வளைந்தவெள்ளிய பழம். சவுளுடத்துக் கொம்பு நிறத்தினாலும், வடிவினாலும் வாழைப்பழத்திற்கு உவமையாயிற்று. தாரம்-பலபண்டம். இப்பொருட்டாதலை, "மலைத்தாரமுங் கடற்றாரமும் தலைப் பெய்து வருநர்க்கீயும்" (343) என்னும் புறநானூற்றனு மறிக.

சேப்பிற் (355) பழத்தையும் (356) நீரையும் (357) பழத்தையுப (358) நுங்கோடே (360) பலபண்டங் களையும் முனையிற் (361) கிழங்கார்குவிர் என முடிக்க.

(362—371) தெங்கினதுகாய் வழிச்செல்லுப் புதியோர் சோற்றை யாக்குகின்ற பானை அடுப்பினின்று கீழே விழுமாறு நிலத்திலே விழுகின்ற புதுவருவாயினை யுடைய பாக்கத்தினிடத்து நீண்ட வழியாகப் போய் நன்றாகிய ஊர்களிலே மாடங்களையுடை மதிலின் புறத்துச் சூழ்ந்த வள்ளிக் கூத்தின் வளப்பம் பலவற்றைத் தருதற்குக் காரணமாகிய புறநாடு கழிந்த பின்பு என்க.

தெங்கின் முப்புடைத் திரள்காய்-தெங்கினுடைய மூன்று புடைப்பினையுடைய திரண்டகாய். "தாழை முப் புடைக் காய்வீழ்ந்து தாற்றிளங் கமுகு செற்று" என்றார்

னைடதத்தினுர். நன்ருகப் பழுத்தால் அடிமுன்ருகப் புடைத்திருத்தல் அதற்கியல்பாகலின் 'முப்புடைத் திரள் காய்' என்ருர். வம்பலர்-புதியோர். காய்பசி-மிக்கபசி. வியா யாணர் - விடாத புதுவருவாய். நீளிடை-நீண்டவழி. "நீரில்ல நீளிடைய" என்னுர் புறநானூற்றினும் (3) இப்பொருட்டாதல் காண்க. வாடா வள்ளி-வாடுங் கொடியினையுடைய வள்ளியல்லாத வள்ளிக்கூத்து. அஃது இளிந்தோர்காணுங்கூத்து. வளம்பலவென்ருர், இக்கூத்து ஆண்பாற்கும் பெண்பாற்கும் பொதுவாய் வருதலின். நாடுபல என்றது புறநாடுகள் பலவற்றை என்க. சிறப்புடைய நாடுகளை இத்துணையுங் கூறிப் போந்து இப்பகுதியால் தாழ்ச்சிபெற்ற இழிகுலத்தோருறையும் புறநாடுகளைப் பாடாமல் தொகுக்கின்ருர். அவை புறநாடென்பது தோன்ற இழிகுலத்தோர் காண்டற்குரிய வள்ளிசுகூத்தினைக் கூறி அதனை வெளிப்படுத்திஞர். இது தொல்காப்பியம் புறத்திணையியலினுள்ள "வெறியறிசிறப்பு" என்னும் சூத்திரத்து "வாடாவள்ளி" என்பதனுலுணர்க.

(371—392) பூங்கொத்துக்களையுடைய காந்தள் பாருந்திய பக்கமலையில் யானை கிடந்தாற்போல பாம்பணையில் துயில் கொண்டோனுடைய திருவெஃகாவிடத்து இளமரக்காவில் குருக்கத்தியின் பூ, வார்ந்த மணலிடத்துக் குழிகளினின்ற நீரிடத்தே விழும்படி நீர் பெருகிய காலத்துத் தூய்தாக்கிப் போன பொழில்களிடோறும் மடவரல் மகளிரொடு பசற்காலத்தே விளையாடிப் பெருந்துறையிடத்து இளவேனிற் செல்வியை நுகர்வாரொடு இளைப்பாறி அத்திருவெஃகாவணையில் திருமாலை வாழ்த்தி பாழை வாசித்து அவ்விடத்தினின்றும் போமின் என்க.

நீடுகுலைக் காந்தளஞ் சிலம்பு-நீண்ட பூங்கொத்துக்களையுடைய காந்தளையுடைய பக்கமலை. "சாரற் றேனுக மலர்ந்து சாய்ந்த சேயிதழ்க் காந்தள்" என்றார் கம்ப ராமாயணத்தும். (கார். 27) பாம்பணைப்பள்ளி அமர்ந் தோன் - பாம்பணையாகிய படுக்கையில் துயில் கொண்ட திருமால். "கொளுமணிச் சுடிகை நெற்றிப் பாம்பணை" என்றார் பாகவதபுராணத்தும். (கஜேந்) காந்தள் என்றதற்கேற்பப் பாப்பணை என்பதனைப் பாம்பணை யென மெலித்தார். ஆங்கண் என்றது திருவெங்காவை. இது காஞ்சிநகரிலுள்ள திருப்பதி. திருமாலுக்குரிய நூற்றெட்டுத் திருத்தலங்களு ளொன்று. இங்கே திருமால் சர்ப்பசயனத் திருக்கோலமுடையவராய் எழுந்தருளி யிருக்கின்றார். இதனைப் "பாந்தட் பாழியிற் பள்ளி விரும் பிய வேந்தனைச் சென்று காண்டும் வெஃகாவுளே" எனப் பெரிய திருவாய்மொழியில் வருவதனானறிக.

வெயினுழை பறியாப் பொதும்பர் - ஞாயிற்றின்கதிர் உட்சென்றறியாத இளமரக்கா. இலை நெருக்கத்தினாலே சிறியனவாகிய குயில்களும் நுழைந்து செல்லவேண்டி யிருத்தலின் 'குயினுழை பொதும்பர்' என்றார். "கதிர் நுழைகல்லா மரப்பயில் கடிமிளை" எனப் புறநானூற்றி னும். (21) "வெயிலொளி யறியாத விரிமலர்த் தண்காவிற் குயிலாலும்" எனக் கலித்தொகையினும் (30) "வெங் கதிர் நுழையா விரிபொழில்" என இராமாயணத்தும். (சீதை வனம்புகு 22) "விரிகதிர்ச் செஞ்ஞா யிற்றின் வெயில்புகாப் பொதும்பர்" எனச் சீகாளத்திபுராணத் தும் (கண்ணப்ப 66) வருவன ஈண்டறியற்பாலன.

பொதும்பர் என்பது பொதும்பு என்னும் மென் றொடர்க் குற்றியலுகரத்தின் போலி. பொதும்பு-மரச்

செறிவு. குருகின்புன்புற வரிப்பூ - குருக்கத்தியினுடைய பொலிவிழந்த புறத்தினையும் வரிகளையுமுடைய பூக்கள். காரகல் கூவியர் - கரியசட்டியையுடைய அப்பவாணிகர். "கூவியர் காரகற் குடங்கால் விளக்கமும்" என்றார் சிலப் பதிகாரத்தும் (6: 138) இழைசூழ் வட்டப்-நூல்போலச் சூழ்ந்து கிடக்கின்ற அப்பம். (இடியப்பம்) சட்டியிலே கிடந்த அப்பம் பின்பு பாலிலே கிடந்தவை போல வெண்க. நீர்முகத்து உறைப்ப-நீரிடத்தே மிகவிழும்படி. உறைப்ப என்பது மிகுதியைக் குறித்து நின்றது. புனல்கால் கழீஇய பொழில்-நீர் பெருகிய காலத்திலே ஏறிய இடத்தைத் தூய்தாக்கிப் போன பொழில். "நீர்கால் கழீஇய வார் மணலெக்கர்" என்னும் பெருங்கதை ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது. பைங்குடம் தொலைச்சி - பச்சைக்குப்பிகளிலிருந்த கள்ளை உண்டு போக்கி. கள்ளைக் குப்பிகளிலே இட்டு வைத்துண்ணல் பண்டைக்கால வழக்கம். இளைதாகிய பிறையைச் செம்பாம்பு தீண்டுதலின்மையின் "சிறுகோட்டுக் குழவித் திங்கட் கோணேர்ந் தாங்கு" என்றது இல் பொருளுவமையாகும். இளம்பிறையை அராச் சேரா என்பது "இளம்பிறை யாயக்கால் திங்களைச் சேரா, தணங் கருந் துப்பினரா" என்னும் நாலடியாராலும் (25:1) அறிக. கிரகணகாலத்திலே சூரிய மண்டலத்தை மறைக்கின்ற சந்திரனது சாயையினையும் சந்திர மண்டலத்தை மறைக்கின்ற பூமியின் சாயையினையும் கரும்பாம்பு செம் பாம்பு (ராகு கேதுக்)களாகக்கூறுவது கவிமரபாகும். சுறவு வாய்-சுறாவினது அங்காந்த வாயாகப் பண்ணின தலைக் கோலம். "எறிமகர வலய மணிதிகழ் நுதலியர்" என்றார் பரிபாடலினும். (10: 77) நறவு பெயர்த்தமைத்த கண் என்பதற்கு நறவம் பூவினிதழைப் பெயர்த்தமைத்தாற் போன்ற கண் எனினும் பொருந்தும். மகளிர் கண்ணுக்கு

நறவம் பூவிதழை உவமை கூறுதல் பண்டை வழக்கமாதலை "நயவரு நறவிதழ் மதருண்கண்" என்னும் பரிபாடலி னும். "நறவின் சேயிதழ் ழனைய வாகிக் குவளை, மாயிதழ் புரையு மலிர்கொ ளீரிமை" என்னும் அகநானூற்றினுங் காண்க. மடவரல் மகளிர் - மடப்பத் தோற்றுதலையுடைய மகளிர். மடமை-பேதமை. அறிந்தும் அறியாதுபோலி ருக்குந் தன்மை. 'கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை' என்பர் நக்கீரனார். இது மகளிர்க்குரிய நான்கில் ஒன்று. மற்றவை-அச்சம் நாணம் பயிர்ப்பு என்பன. "அச்சமு நாணு மடனு முந்துறுத்த, நிச்சமும் பெண்பாற் குரிய வென்ப" என்று தொல்காப்பியம் கூறுவதுங் காண்க. துறை, நுகர் பொருட்களால் குறைவின்றியிருத் தலின் பெறற்கரு தொல்சீர்த்துறக்க மேய்க்கும் துறை என்றார். செவ்வி கொள்பவர்-இளவேனிற் செவ்வியை நுகர் பவர். அவ்வயின்-அத்திவெஃகாவணையில். இத்தலம்பிரமா செய்த வேள்வியை அழிக்கும்படி வந்த வேகவதி நதியைத் தடுத்தற் பொருட்டு திருமால் அணைபோன்று கிடந்த தலமாகும். இதனால் இத்தலத் தெழுந்தருளிய திருமா லுக்கு வேகா சேது என்பது திருநாமமாகும். இன்னியம்- இனிய யாழ்.

ஆங்கட் (373) பொதும்பர் (374) குருகின்பூ (376) உறைப்பக் (379) கழீஇய பொழிசெறும் (380) நீலப்பைங் குடம் தொலைச்சி (382) மரீஇக் (383) மகளிரொடு பகல் விளையாடிப் (387) பெருந்துறைச் (389) செவ்விகொள்பவ ரோடு அசைஇ (390) கடவுள் வாழ்த்தி (391) இயக்கினிர் கழிமின் என முடிக்க-

(393—96) காழோர்-பரிகோற்காரர். யானைவலிசெய்யு மாயின் அதனைக் குத்துதற்கு அதன் முன்னே இவர்கள்

நடந்து செல்பவர்கள். யானைக்கு நெய்யுடனே கலந்த கவளங்களை மந்தி கவர்ந்து செல்லும் சோலை என்க. கதன் கோபம். கந்து-யானை கட்டுந்தறி.

(397—411) திண்ணியதேர் பலகால் ஓடுதலின் குழிந்த நெடிய தெருவினையும் கொடுப்பாரையும் கொள்ளுவாரையும் தடுத்த வாயிலினையும் காவற்காடு சூழ்ந்த பக்கத்தினையும் செங்கல்லாற் செய்யப்பட்ட உயர்ந்த மதிலினையும் உலகத்து நகரில் விசேடித்தும் பலரும் தொழும்படி எழுந்த விழாக்களால் மேலான வெற்றியினையுமுடைய மூதூர் என்க.

இளந்திரையனது கொடைப் பெருமையால் பிறர் கொடை தவிர்ந்தாரெனவும், இவனிடத்துப் பெற்ற பெரும்பொருளினால் பிறரிடத்து ஏற்கச் செல்வாரிலராதலின் கொள்ளுதல் தவிர்ந்தாரெனவும் அறிக. நீனிறவுருவின் நெடியோன்—திருமால்.

சுடுமண் ஓங்கிய வரைப்பு-செங்கல்லாற் செய்யப்பட்ட உயர்ந்த மதில். சுடுமண்-ஓடு என்பர் அடியார்க்குநல்லார். இழுமென் புள்ளு-இழுமென்னும் ஓசையையுடைய புறவு. கோளி-பூவாமற் காய்க்கும் மரம். பலர்தொழ-பல சமயத்தாரும் தொழ. பலசமயத் தெய்வங்களுக்குக் காஞ்சி இடமாதலின் பலர்தொழ விழவு மேம்பட்ட மூதூர் என்றார்.

காவினையும் (395) தெருவினையும் (397) அடையா வாயிலினையும் (401) படப்பையினையும் (401) வரைப்பினையும் (405) உடைய மூதூர் என்க.

காண்வரத் தோன்றிப் (404) பலாப்போல (408) விழவு மேம்பட்ட மூதூர் என்க.

(412—420) துரியோதனன் முதலிய நூற்றுவரும் களத்திலே படும்படி போரை வென்ற தருமன் முதலியோரைப் போல அடங்காத சேனையுடன் தன்மேல் வந்த பகைவர் தோற்றவிடத்துக் களிப்பினால் ஆரவாரித்து காஞ்சிபுரத்தே யிருக்கின்றான் கைவண்மையையுடைய தோன்றல் என்க.

அவ்வாய்—அழகிய இடம். அந்தியென்பது பகலுடனே இரவு சேருங்காலமாகிய மாலைச் சந்திக்கும் இரவுடனே பகல் கூடுங்காலமாகிய காலைச் சந்திக்கும் பொதுவாகும். அக்காலத்தில் ஆகாயம் சிவந்திருத்தலின் 'செவ்வாய் அந்திவானம்' என்றார். இரும்பிணம்-கரிய யானைப் பிணம். கொடிஞ்சி-தாமரைப் பூவாகப் பண்ணித் தேர்த் தட்டின் முன்னே நடுவது. ஆராச் செரு - தொலையாத போர். உடன்று-கோபித்து. தெவ்வர்-பகைவர். "தெவ்வுப்பகையாகும்" என்பது தொல்காப்பியம்.

குருதியீர்ப்ப (414) பொருது(415) ஐவர்போல(417) ஆர்த்துக் (419) கைவண் தோன்றல் கச்சியிடத்தே யிருக்கின்றான் என்க.

(422—435) அளியும் தெறலும் எளிய வாகலின்-அளித்தலும் அழித்தலும் தனக்கு எளியவாய் நடக்கையினாலே. "வலியுந்தெறலு மளியு முடை யோய்" எனப் புறநானூற்றுள் வருவதுங் காண்க. நன் பொன் பூப்ப-திருமடந்தை பொலிவுபெற்றிருப்ப. கல்வீழருவி கடற் படர்ந்தாங்கு-மலையினின்றும் விழுகின்ற அருவியானது அம்மலையிலுள்ள பண்டங்களை வாங்கிக்கொண்டு கடலுக்குக் கொடுப்பதாகச் சென்றாற் போல. பல்வேறுவகை—பலவாகிய வேறுபட்ட திறைப்பொருள்களின் கூறுபாடு.

வெண்டிரை கிழித்த கங்கை எனவும் பொன்கொழித் திழிதரும் கங்கை எனவும் கங்கை என்பதனை ஈரிடத்துங் கூட்டுக. இமையவருறையும் சிமையச் செவ்வரை விளங்கு சுடர் நெடுங்கோடு என்க. சிமையம்-மலைஉச்சி. பெருநீர் போகும் இரியன் மாக்கள்-பெரிய நீரைக் கடந்து போகும் விரைந்து செல்லுதலையுடைய மக்கள். "பெருநீர் போகு மிரியன் மாக்களொடு" எனச் சிலப்பதிகாரத்து (6: 112) வருதல் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது. தொய்யாவெறுக்கை-கெடாத யானை முதலிய செல்வம். செவ்வி பார்க்கும் செழுநகர் முற்றம்-காலம் பார்த்திருக்கும் வளவிய நகரின் முற்றம். பணிந்த மன்னர் அரசனைக்கண்டு வணங்கவும் கொண்டுவந்த திறைப்பொருள்களைச் செலுத்தவும் வந்து அரண்மனையிலே செல்வதற்கு இடமின்மையின் வெளியே காத்திருந்தாரென்க.

எளியவாகலின் (422) நயந்திசினோரும் (425) துணையி லோருமாய்ப் (426) பணிந்த மன்னர் (428) தூங்கியாங்குச் (433) செவ்விபார்க்கும் முற்றமென்க.

(436—447) திருத்தங்கும் அகற்சியையுடைய கோயிற் கண்ணே, முந்நீர்க்கு நடுவே ஞாயிறு தன் கிரணங் களைப் பரப்பித் தோன்றினாற்போல முறைவேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும் அருளிச் செய்து நடுவு நிலைமையை ஆராய்ந்தறியும் அறிவாலே கொடைக்கடனிறுத்த குவியாத நெஞ்சத்தோடே மந்திரச் சுற்றத்தோடு இருந்தோன் என்க.

கருங்கை-வலியகை. விசைத்து எறித்தல்- உரத்து அடித்தல். இசைவெரீஇ-ஓசைக்கு வெருவி. மாடத்து

இறை உறைப்புறவு-மாடத்தில் தங்கியிருக்கிற புறா. இறை வுறை என்பதனை நகர் (440) என்பதனுடன் கூட்டி இறைவன் இருக்கும் நகர் எனப் பொருள் கொள்ளலுமொன்று. பொன்றுஞ்சு நகர்-திருத்தங்குகின்ற கோயில். நகர் இருந்தோன் (447) என்க. முந்நீர்-கடல். பகற்செய் மண்டிலம்-பகற் பொழுதைச் செய்யும் சூரியன். பகற்பொழுதைச் செய்வோன் எனப் பொருள்படும் 'திவாகரன் என்னும் பெயர் சூரியனுக்கு வழங்கப்படுதலீண்டு அறியற்பாலது.

முறை வேண்டுநர் - முறைப்பாட்டை விரும்புவார். குறைவேண்டுநர்-காரியங்களைப் பெற விரும்புவார். முறை வேண்டினார்-வலியாரான் நலிவெய்தினார் எனவும் குறை வேண்டினார்-வறுமையுற்றிரந்தார் எனவும் பரிமேலழகர் உரை யெழுதியிருத்தல் காண்க. (திருக்குறள் 386) காட்சி-அறிவு. இப்பொருட்டாதலை "ஆசறுகாட்சியைவர்க்கும்" என்னும் குறிஞ்சிப்பாட்டினும் (17) காண்க. கொடைக்கடன்-கொடையாகிய கடன். பரிசிலர்க்குக் கொடுத்தலைத் தமது இன்றியமையாத கடமையாக மேற்கொண்டொழுகினானாதலின் 'கொடைக்கடனிறுத்த' என்றார். உரும்பில் சுற்றம்-கொடுமையில்லாத மந்திரச் சுற்றம். "உரும்பில் கூற்றத்தன்ன" என்றார் பதிற்றுப்பத்தினும். (26: 13). இனி 'உருமில் சுற்றம்' எனப் பாடங்கொண்டால் அச்சமில்லாத சுற்றம் எனப் பொருள் கொள்க. கடல் சுற்றத்திரட்சிக்கு உவமையாயிற்று. இனி ஞாயிறுபோல இருளைக் கடிந்து முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும் வேண்டுவன வேண்டுவன முடித்துக் கொடுத்தான் என உரைத்தலுமொன்று.

(448—456) பொறிவரிப்புகர்முகம்-ஒளியினையும் வரியினையுமுடைய யானை. புகர்-யானையின் மத்தகத்திலே

யுள்ள புள்ளி. வயப்-வலி. இச்சொல் இப்பொருட்டாதலை "துன்னருந் துப்பின் வயமான் தோன்றல்" என்னும் புறநானூற்றினும் (44:10) காண்க. "வயவலியாகும்" என்பது தொல்காப்பியம். யானையைப் பாய்ந்து அதன் மத்தகத்தைக் கொள்ளுதல் சிங்கக் குருளையின் இயல்பு. "ஆளி நன்மா னணங்குடை யொருத்தல், மீளி மேழுத்து நெடுந் தகை புலம்ப, வேந்தல் வெண்கோடு வாங்கிக் குருகருந்துய்" என்னும் அகநானூறு (381) ஈண்டு அறியற்பாலது. குருளை என்னும் இளமைப்பெயர் சிங்கத்துரித்தாதலை "நாயே பன்றி" என்னும் தொல்காப்பிய மரபியற்சூத்திரத்து 'ஆயுங்காலை' என்பதனுன் முடிக்க. குடுமிகொள்ளும் வென்றி-அரசருடைய முடிக்கலம் முதலியவற்றை வாங்கிக் கொண்டு வீரமுடிபுனையும் வெற்றி. கொண்டியுண்டி-பகைப்புலத்துக் கொள்ளையாகிய உணவு. "கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக" என்னும் பதிற்றுப்பத்துரையில் (43: 25). 'கொண்டி-கொள்ளை' என்று எழுதியிருத்தல் காண்க. தொண்டை யோண் மருக-தொண்டையைச் சூடியோனுடைய குடியிலுள்ளவனே. மள்ளர்-வீரர்.

(457—8) வெண்டிரைப் பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற பைம்பூட் சேஎய்-வெள்ளிய திரையினையுடைய கடலிலே சென்று சூரனைக் கொன்ற பசிய பூணையுடைய சேய். முருகக்கடவுள் சூர்கொன்ற வரலாற்றை, "சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்" என்னும் அகநானூற்றினும் (59) "பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச் சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்" என்னும் திருமுருகாற்றுப்படையினும் (45-6) "நளியிரும் பரப்பின் மாக்கடன் முன்னி யணங்குடை யவுண ரேமம் புணர்க்குஞ், சூருடை முழுமுத றடிந்த பேரிசைக் கடுஞ்சின விறல்வேள்" என்னும் பதிற்றுப்பத்தினும் (11) அறிக.

(459—64) துணங்கை அம்செவ்வி-துணங்கைக் கூத்தினையும் அழகினையுமுடைய இறைவி. அணங்கு கொடித்தாங்கு-பேய்மகள் கொடி சொன்னாற்போல. "பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய்கொடித்தாங்கு" என்றார் கலித்தொகையினும். (89) தண்டாவிகை-அமையாக் கொடை. தண்டாவிகை என்பதற்கு 'தணியாதவண்மை' எனவரும் புறநானூற்றுரை (6:26) ஈண்டு அறியற்பாலது. முறையுளி என்பதில் உளி: பகுதிப்பொருள் விகுதி. பழிச்சி-தொழுது.

(465—67) நாவலந் தண்பொழில்-சம்புத்தீவு. இப்பெயர் வந்த வரலாற்றை "கடிகமழுநாவலொன்று தென்பாலின்ற காரணத்தாற் பாரதன்றன் கண்ட முற்று மிடனுடைய நாவலந்தீ வெனப் பேர்பெற்ற" என்னும் கந்தபுராணச் செய்யுளானும் "நறவனைய கனியுதிரு நன்னாவலெக்நாளு—முறுதியுற வுயிர்க்கெல்லாந் தென்கிரியிலோங்குதலாற் பெறுநவ கண்டமும் பெரிய நாவலந் தீவெனும் பெயரை" என்னும்சிவதநுமோத்திரச் செய்யுளானுமறிக. வீவு-கேடு. இப்பொருட்டாதலே "விறலிழை நெகிழ்த்த வீவருங் கடுநோய்" என்னும் குறிஞ்சிப்பாட்டினும் (3) காண்க. யாக்கை செல்வம் முதலாயின நில்லாவுலகத்து என்றும் நிலைபேறுடைய பொருளை ஆராய வேண்டுதலின் நிலைமை நோக்கி என்றுங் கூறினார். நிலைமை நோக்கி-நிலைபேறுடைய புகழைப் பெறுதல் நன்றென்று ஆராய்ந்து. "மன்னாவுலகத்து மன்னுதல் குறித்தோர், தம்புகழ் நிறீஇத் தாமாய்ந்தனரே" என்றார் புறநானூற்றினும் (165) நிலைபெறுந் தகைமையுடையதாகலிற் புகழை நிலைமையென்றார். புகழின் நிலைபேற்றை "ஒன்றாவுலகத் துயர்ந்த புகழல்லாற்பொன்றாது நிற்பதொன்றில்" என்னும் திருக்குற

ளானும் "இந்நிலத்து மன்னுதல் வேண்டி னிசை நடுக" என்னும் நான்மணிக்கடிகையானுமறிக.

(468—479) சிதர்வை - சிதரினசீரை. ஆவியன்ன வவிர்நூற்கலிங்கம்-பாலாவியையொத்த விளங்குகின்ற நூலாற் செய்த துகில். "ஆவியன்ன பூந்துகில்" "பாலாவிப் பைந்துகில்" என சீவகசிந்தாமணியினும் "ஆவிநுண் டுகில் யாப்புறுத்தாயினும்" எனப் பெருங்கதையினும் வருவன காண்க. மடைத்தொழில் செய்வோன் பலகாலும் கொழுவிய தசைகளைக் கொடுவாளால் அறுத்தலால் கையில் சுழும்புண்டாகுமாதலின் "கொடுவாள் கதுவிய வடுவாழ் நோன்கை" என்றார். கதுவுதல்-கைக்கொள்ளுதல். அரி செத்து-நிறத்தால் ஞாயிற்றை ஒத்து. அரிசெய்தென்று பாடமாயின் அரிதலைச் செய்து என்று பொருள் கொள்க. உணங்கிய-உலர்ந்த. "உணங்குபுலவறுவொன்றோர்குரம்பை" எனவும் புறப்பொருள் வெண்பாமாலையினும் (67) இப் பொருட்டாதல் காண்க. செந்நெல்லின் தெரிகொள். அரிசித் திரள் நெடும் புழுக்கல் - செந்நெல்லின் பொறுக்கிக் கொண்ட அரிசியாலாக்கின திரண்ட இடை முறியாத சோறு. "முகிழ்த்தகை முரவை போகிய முரியா வரிசி, விரலென நிமிர்ந்த நிரலமை புழுக்கல்" என்னும் பொருநராற்றுப்படை (112-4)கண்டொப்புநோக்கற்பாலது. அடிசில்-உணவு.

நீக்கி (468) உடீஇ (470) குறையும் (472) புழுக்கலும் (474) அமுதொடு பிறவும் (475) ஆகிய அடிசிலை (576) பரப்பி (477) ஊட்டி என முடிக்க.

(480—493) மங்குல்வானம் – இருட்சியையுடைய ஆகாயம். மங்குன் மாப்புகை என்பதற்கு இருட்சியை

யுடைய கரிய புகை எனவரும் புறநானூற்றுரையுங் காண்க. (103) அழல் அவிர் தாமரை-நெருப்பினிடத்தே கிடந்து விளங்கின பொற்றாமரை. இரும்பித்தை—கரிய மயிர். பாணர்க்குப் பொற்றாமரையையும் விறலியர்க்கு மாலையையும் கொடுத்து உபசரித்தல் பண்டைத்தமிழரசர் மரபு. "அழல் புரிந்த வடர்தாமரை, யைதடர்ந்த நூற் பெய்து புனைவினைப் பொலிந்த பொலனறுந் தெரியல், பாறுமயிருந்தலை பொலிச்சூடிப்பாண்முற்றுகநின் னொண்மகி ழி——" என்ப் புறப்பாட்டில் வருவதுங் காண்க. உரவுக்கடல் முகந்த பருவவானம்-பலவுஞ் சேர உலாவுகின்ற கடலிடத்தே முகந்த கூதிர்க்காலத்து மேகம். முழங்குகடன் முகந்த கமஞ்சூன் மாமழை எனவும் (நற் 347) 'கடனீர் முகந்த கமஞ்சூ லெழிலி' எனவும் (கார்நாற் 33) வருதல் காண்க. மேகம் கடலிடத்தே நீரை முகந்து அதனைச் சொரிவதாக கூறுதல் கவிமரபு. விறலியர்-விறல்பட ஆடும் மகளிர். விறல்-சத்துவம். அதுவமெய்ம்மயிர் சிலிர்த்தல் கண்ணீர் வார்தல் முதலாயின. "மெய்ம்மயிர் பொடித்தல் வெதும்பல் வெயர்த்தல், துய்யபொற் பசலை தோன்ற னடுங்குறல் விழிபுன லரும்பல் வெவ்வுயிர்ப் பாவித்தல், மொழிதளர் வுறனகை முதலிய சத்தும்" என்பது மாறனலங்காரம். (சூத் 201) குதிரையின் இலக்கணங்களைக் கூறும் நூல்களைக் கற்று அவ்வறிவானே அவற்றின் குணகுணங்களை அறிந்து வந்தனராதலின் நூலோர்புகழ்ந்த மாட்சியவுரவியென்றார். "உன்னய முதலாம் புரவிநூலறிவோன் உள நிகழ்தருக் கொடு சென்றான்" என மகாபாரதத்து வருவதனால் குதிரையின் இலக்கணங்களைக் கூறும் உன்னயம் முதலான நூல்கள் இருந்தன வென்பது அறியப்படும். நான்கு என்னும் பெயர் நால்கு என வந்தது. இது பெயர்த் திரிசொல்.

நான்கு நால்கு எனப் பயின்று வருதலை, "பால்புரை புரவி நால்குடன் பூட்டி" எனவும் (பொருந 165) "நால்குப் பண்ணினர் நால்வருமேறினர்" எனவும் (சீவக. 1774) வருவனவற்றாலறிக. இவுளி-குதிரை. பசும்படை-பொன்னாற்செய்த பக்கரை. இது குதிரைச் சேணமாகும்.

(493—500) கின்னரப்-இசையின் குணகுற்றமறிவதொரு பறவை. இது "மாதர்யாழ் தடவர வந்த மைந்தர் கைக், கீதத்தான் மிண்டன கேள்விக் கின்னரம்" என்னும் சீவகசிந்தாமணியால் அறிய. (660) அணங்குடைச் சாரல்-தெய்வங்களையுடைய மலைப்பக்கம். கலை-முசுக்கலை. கலையென்னும் ஆண்பாற் பெயர் முசுவிற்குரியவாதலை "கலையென்காட்சி யுழைக்கு முரித்தே" "நிலையிற்றப்பெயர் முசுவின் கண்ணும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரங்களாலறிக. (மரபு 456) மந்திகள் அரராலைவாரும்முற்றத்தே மானும் புலியும் துயில் கொண்டன. ஒன்றினுக்கொன்று பகையாய பிராணிகள் ஒரு சேரத் துயின்றமை ஆண்டு வதியும் முனிவரானையான் என்க. களிறு தருவிறகு-யானையால் முறித்துக் கொண்டு வந்த சமிதை. முனிவரின் தவமிகுயால் யானையும் ஏவல் செய்தது. தவஞ்செய்வோர்க்கு யானைகள் விறகு தருமென்பதை 'கானயானை தந்த விறகிற் கடுந்தேறற் செந்தீ வேட்டு" என்னும் புறநானூற்றினாலுமறிக. மலைகிழவோன் - மலையையாளும் உரிமையுடையோன்.

## வினை முடிவு.

புலவுவாய்ப்பாண (22) பெருவளனெய்தி (26) முகந்து கொண்டு (27) யாம் அவனூரினின்றும் வருகின்றேம்; நீயிரும் (28) திரையற்படர்குவிராயின் (37) அவனிலைகேள்; நின்னவலங் கெடுக; (38) அவன்புலம் கொடியோரின்று (41) அதுவேயன்றி அப்புலத்தில் உருமு முரறாது; அரவும் தப்பா (42); மாவும் உறுகண் செய்யா; ஆகலின் ஆங்கு (43) அசைவுழி அசைஇத்தங்கிச் (44) சென்மோ, இரவல நின்னுள்ளஞ் சிறக்க (45); அங்ஙனஞ் செல்லுங்கால் எல்லிடைக் கழியுநர்க்கு ஏமமாக (66) வில்லுடை வைப்பிற் (82) குரம்பையில் (88) எயிற்றியர் (94) தாங்களிட்ட புழுக்கலையும் வாடூனையும் (100) பெருமகனாகிய (101) வரைநாடன் சென்னியமெனிற் (103) தேக்கிலையில் குவிக்கையினாலே (104) கடும்போடே மிகப்பெறுகுவிர் (105); பின்னர் அருஞ்சுர மிறந்த அம்பர்க் (117) குறும்பிற் சேப்பின் (129) சொன்றியை (131) வறைகால் யாத்தது வயின் றேறும் பெறுகுவிர் (133); பின்னர்த் தூங்கா (146) முரண்டலை (147) யிருக்கை (146) கழிந்த பின்றைக் (147) குடிவயிற் சேப்பின் (166) மூரல்பாலொடும் பெறுகுவிர் (168); பின்னர்ப் பறவையோர்க்கும் (183) புலத்தைப் போய்ச்(184) சீறூர்களிலே(191)வரகின்சொன்றியை(193) புழுக்கையட்டி (195) மூரலோடேபெறுகுவிர்பின்னர் ஞாங்கர் (196)வன்புலமிறந்தபின்றை(206)மல்லற்பேரூர்மடியின் (254) வல்சியை (255) வாட்டொடும் பெறுகுவிர் (256) பின்னர்க் கரும்பின் தீஞ்சாறு விரும்பினிர் மிசைமின் (262) பின்னர் வலைஞர் குடிவயிற் சேப்பின் (274) பிழியை (281) வாட்டொடும் பெறுகுவிர் (282); பின்னர்த் தீப்பட மலர்ந்த (289) பூவையோப்பிக் (290) குறுநரிட்ட மலரைப்

(295) பிணையினிர் கழிமின் (296); பின்னர் மறைகாப் பாளர் உறைபதிச் சேப்பின் (301) வளைக்கை மகடூ வயின் றித்தட்ட (304) வத்தத்தாலுண்டான சோற்றை சுடர்க் கடையிலே (305) காடியோடேபெறுகுவிர் (310); பின்னர் 'நீர்ப்பெயற்'றெல்லை போகிப் (319) பட்டின மருங்கினசை யின் முட்டுப்பாடின்றாகக் (336) கொழுநிணத்தடியொடு கூர்நறாப் பெறுகுவிர் (345); பின்னர்த் துறைபிறக் கொழி யப்போகித் (351) தனிமனைச் சேப்பின் (355) ஆண்டைத் தீம்பலொருரமுனையிற் சேம்பின் (361) முளைப்புற முதிர் கிழங் கார்குவிர் (362); இவற்றை இவ்வழிக்கண்ணே பெற் றுப் பின்னர்ப் பன்மரநீளிடைபோய் (368) நாடுபலகழிந்த பின்றைப் (371) பள்ளியமர்ந்தோன் ஆங்கட் (373) பொழி ெறாறும் (380) தொலைச்சி (382) ஆடி (387) அசைஇத் (390) கடவுள் வாழ்த்தி (391) இயக்கினிர் கழிமின் (392) இங்ஙனஞ் சென்று, குருதியீர்ப்பப் (414) பொருது (415) ஐவர்போல (417) ஆர்த்துக் (419) கைவண்டோன்றல் கச்சியிடத்தே யிருந்தோன் (420); அவ்வூரிற் பணிந்த மன்னர் (428) செவ்விபார்க்கும் முற்றத்தினையுடைய (435) பொன்றுஞ்சு வியனகர்க் கண்ணே (440) பகல்செய் மண்டி லம் பாரித்தாங்கு (442), அருளி (444) மிக்க காட்சியாலே (445) கடனிறுத்த உள்ளத்தோடே (446) சுற்றத்தோடே இருந்தோனைக் குறுகித் (447) தொண்டையோர்மருகனே (454) மள்ளனே மறவனே (455) செல்வனே செருமேம் படுநனே (446) செல்விக்கு அணங்கு நொடித்தாங்கு(459) நின்பெயருட் சிலவற்றைச் சொல்லிப் புகழ்ந்து (460) வந் தேன்; பெருமானே! வாழிய நெடிதெனச் சொல்லிக் (461) கழிப்பிப் (462) பழிச்சி (463) நின்னுடைய கலைக ளெல்லாந் தனக்குத் தெரிவதற்கு முன்னே (464) நாவலந்

தண்பொழில், வீவின்று விளங்கும்படி மலைகிழவோன் (500) நில்லாவுலகத்து நிலைமை தூக்கி (466) அந்நிலையணு கல்வேண்டி அழைத்துச் (467) சிதர்வைநீக்கி (468) உடீஇ (470) குறையும் (472) புழுக்கலும் (474) அமுதொடுபிறவு மாகிய (475) அடிசிலைக் (476) கலங்களைப் பரப்பித் (477) தான் (479) முகனமர்ந்து மகமுறை நோக்கி (478) முன் னின்றூட்டி (479) விறலியர் மாலைவேயா நிற்க (486) நுமக்குத் தாமரை பொலியச்சூட்டி (482) அரிதேர் நல்கி யும் அமையானாய் (490) இவுளியொடு மசும்படை தரீஇ (492) அவன் அன்றே (493) இவைபொழிந்த பிறபரிசில் களையும் தந்து விடுக்கும் என வினைமுடிபு செய்க.

முற்றும்.

வெண்பா.

கங்குலு நண்பகலுந் துஞ்சா வியல்பிற்றாய்
மங்குல்சூழ் மாக்கட லார்ப்பதூஉம்—வெஞ்சினவேற்
கான்பயந்த கண்ணிக் கடுமான் றிரையனை
யான்பயந்தே னென்னுஞ் செருக்கு.



## பெரும்பாணாற்றுப்படை

# அருஞ்சொற்பொருள்.

---

### அ

அ-அழகு 412. நெடுநல்வாடை 41. மலைபடுகடாம, 32.

அகம்-இடம் 5. உரை 5:5.

அகல்-சட்டி 377, அகன்ற292.

அகழ்-குளம் 108

அசைஇ-இளைப்பாறி 44; 390 இருந்து 316; இளைத்து 333

அசைவுழி-இளைத்தவிடத்து 44

அட்டி-இட்டு 195 திருமுருகாற்றுப்படை 28

அடங்காத்தானை-ஒன்னொணி லும் அடங்காதபடை 418.

அடிசில்-உணவு 476. "குய்க் கொள் கொழுந்துவை நெய் டை யரிசில்" புறம் 160.

அடிபுதையரணம்-அடியை மறைக்கின்ற செருப்பு 69

அடுக்கம்-பக்கமலை 267, மலைபடு 141, புறம். 168.

அடூஉம்-காய்ச்சும் 261.

அடை-முளை 278.

அடையாவாயில்-பரிசிலர்க்கு அடையாத வாசல் 401.

அணங்கு-வருத்துதல்258. புறப் வெண்பாமாலைஉரை கரந்தை 12; பேய் 459 பு வெ. 160. தெய்வம்494. ஐங்குறுநூறு28.

அணர்செவி-நிமிர்ந்தசெவி 80

அணல்-தாடி 138 புறம் 83,258 உரை; ஐங்குறுநூறு 389

அத்தம்-வழி 39; அருஞ்சுரம் புறம் 23; அரியவழி ஐங் 377

அதர்-வழி 106. பொருந 49; புறம் 138; பு.வெ. கரந்தை.

அதள்-தோள் 151. மதுரைக் காஞ்சி 310. புறம் 193.

அந்தணர்-315. 'அந்தத்தை அணுவார் அந்தணர்; என்றது வேதாந்தத்தேயேநோக்குவார் ாறு. திருமுரு. 96 நச், உரை

அந்திவானம்-அந்திக்காலத்துவானம்413.

அம்-அழகு 7,177, 275. திருமுருகு 191. ஐங். 106.

அம்பர்-அப்பால்117.

-கட்டி 224. சோற்றுத் திரளை புறம் 177 உரை;

அமளி-படுக்கை 252; சீவகசிந் தாமணி 1941

அரக்கு-சாதிலிங்கம் 293. "அரக்குவிரித்தன்ன பரோரம்பழகுடன்" குறிஞ்சிப்பாட்டு 96.
அரி-சூரியன் 473. பொன் 490.
அருங்கடன்-செய்தற்கரியகடன் 315.
அருஞ்சுரம்-அரியபாலைநிலம் 117
அரும்பொருள்-பெறுதற்கரிய பொருள் 68.
அரை-தாள் 417, 83, தண்டு 114 அடி 360.
அரைநாள்-நடுவியாமம் 111. "இரைநசைஇப் பரிக்கு மரைநாட் கங்குல்" அகநா. 112:4
அல்கி-தங்கி 176 புறம் 220 உரை
அல்குல்-பக்கம் 234
அல்லது-மறம் 36.
அலங்குதல்-அசைதல் 83 புறம் 22:14 உரை
அலர்முலை-பால்சுரந்தமுலை 250
அலவன்-ஞெண்டு 208 "அலவனைக்காதலித்துக் கான்முறித்திட்டின்றபழவினைவந்தடைந்தக்கால்" நாலடியார்
அலற-கலங்க 9.
அவ்வாய்-அழகிய இடம் 412.
அவலம்-பிடி 38
அவிர்தல்-விளங்குதல் 469
அவிழ்-சோறு 192 சோற்றுப் பருக்கை, புறம் 159
அவையாவரிசி- குற்றுதகொழிய வரிசி 275.
அழகு-கோழிப்பெடை 256.
அழுங்கின்-ஒழிந்தால் 111.
அழுவம்-பரப்பு 350 "நீண்டெடாவியழுவம்" புறம் 161. அகநானூற்றுரை 20:1.
அளவை-தன்மை 464. பொருநராற்றுப்படை 92.
அளறு சேறு 208 மதுரைக்காஞ்சியுரை 45.
அளை-மோர் 163, முழை 208.
அளைஇ-கலந்து 278, 308 மதுரைக்காஞ்சி 439.
அறை-ஒலிக்கின்ற 50.

ஆ

ஆ-பசு 243 புறம் 9.
ஆங்கண்-அவ்விடத்து 373.
ஆடுமழை-உலாவுகின்ற மேகம் 413.
ஆம்பி-குடைக்காளான் 157. புறம் 164
ஆய்மகள்-இடைப்பெண் 162.
ஆயம்-திரள் 311
ஆரம்-குறட்டிடத்தே தைத்த மரம் 46 [417
ஆராச்செரு-தொலையாதபோர்
ஆலுதல்-ஆரவாரித்தல் 330. புறம் 128.
ஆலை-கருப்பஞ்சாறு காய்ச்சும் இடம் 261, பட்டினப்பாலை 9
ஆளி-சிங்கம்போல்வதொரு மிரு

உயர்மிசை-மேலிட்ட 317.

உரவு-பரத்தல் 453. உலாவுதல் 483.

உரவோன்-,31

உராஅது-இடியாது 42.

உருப்பு-வெம்மை 307. மதுரைக் காஞ்சி 625 குறிஞ்சிப்பாட்டு 45. அகநானூற்றுரை 11:2.

உரும்-இடியேறு 42. புறநா 37.

உரும்பு-கொடுமை 447.

உருளி-உருளை 47.

உல்கு-சுங்கம், 81. பட்டினப் பாலை, 125. பரிமேலழகர் உரை திருக்குறள், 756.

உலை-207.

உவரி-உவர்நீர் 98.

உளை-பிடரிமயிர் 27,320, 488. தலையாட்டம், அகநானூறு 4:8 உரை

உறுகண்-வருத்தம் 43

உறை-துளி 291 புறநா 147:3 உரை, நீர்த்துளி, திவாகரம்.

ஊ

ஊகம்-ஊகம்புல் 122.

ஊட்டி-உண்ணல் பண்ணுவித்து 479.

ஊட்டுறு-திறமூட்டிய 6.

ஊர்பு-கடாவிட்டு 238.

ஊரா-ஏற்படாத 249.

ஊன்றி-அமுக்கி 200.

எ

எஃகம்-வேல் 119 புறநா 370. நெடுநல்வாடை 176, திவாகரம்.

எகினம-நாய் 326.

எந்திரம்-ஆலை 260.

எய்-முட்பன்றி 88, மலைபடு 301.

எயிற்றியர் - எயின்குடிப் பிறந்த மகளிர் 94.

எருக்கி-அடித்து ஓட்டி 112.

எல்-பகல் 66 புறநா 170.

எழூஉ-கணையமரம் 48, புறநா 341. சிறுபாண் 49.

எறிந்து-அழித்து 451.

எறுழ்-வலி 60, 74,145. பட்டினப்பாலை, 294.

ஏ

ஏடு-மேன்மை 59 "ஏடுமதிக்கண்ணியானை" தேவாரம் திருநாவு.

ஏமம்-காவல் 421. புறநா 3. மதுரைக்காஞ்சி 686. முல்லைப் பாட்டு, 54. திவாகரம்.

ஏய்ப்ப-ஒப்ப 51, 292, புறநா 33

ஏர்-அழகு 60.

ஏற்றை-ஆண்பன்றி 344.

ஏறு-உருமேறு 135. இடி, புறநா 160.

ஏனம்-பன்றி 110. மலைபடு கடாம் 247.

ஐ

ஐவர்-தருமன் முதலிய ஐவர் 417.

குழிசி" புறநா 168:9.
குழிக்க-தோண்டின 109.
குழீஇ-திரண்டு 134, புறநா. 161:2 உரை. பட்டினப் பாலை 265.
குழூஉம்-திரண்ட 237.
குளகு-தழைஉணவு 148. "மறி குளகு உண்டன்ன" நாலடி யார 16
குறிஞ்சி-குறிஞ்சிப்பண் 182.
குறியிறை-குறிய இறப்பு 265.
குறுந்தொடி-கையிலணியும் ஆபரணம 334.
குறுநர்-பறிப்பார் 295.
குறும்பு-அரண் 129. "உரவோர் குறும்பினைச் சுற்றினர் போகாமற் சூழ்ந்து" புறப்பொருள் வெண்பாமாலை, வெட்சி 7.
குறும்பூழ்-காடை 205.
குறை-தசை 472.
குறைவில்-இந்திரவில் 292.

கூ

கூட்டுண்ணல்-கொள்ளைகொண் டுண்ணல் 116.
கூடம்-வீடு, 437.
கூம்பா-குவியாத 446.
கூம்பு-குவிதல் 295.
கூர்ந்த-மிகுந்த 25, புறநா 75. புறப்பொருள் வெண்பாமாலை பெருந்திணை 9 உரை. தொல் உரி 18.
கூர்நறா-களிப்புமிக்க கள் 345.
கூவியர்-அப்பவாணிகர் 377. சிலப்பதிகாரம் 5:24 உரை.
கூழ்-சோறு 175, 327 திருக்குறளுரை 64.

கெ

கெண்டி-அறுத்துத்தின்று 143
கெழீஇ-பொருந்தி 399.
கேழ்நிறம்-319 தொல்காப்பியம் உரியியல் 5.
கேள்வி-யாழ் 16; நூற்கேள்வி, 315. திவாகரம்.

கை

கைப்பொருள்-கையிலுள்ள பொருள் 40.
கைவண்தோன்றல்- கைவளப்பத்தையுடைய தலைவன் 420.

கொ.

கொக்கு-மாமரம் 319.
கொட்கும்-சுழன்று திரியும் 326. சுழல்வருங. புறநா 43.
கொடிறு-ஒருவகைக் குறடு 207
கொடுங்கால்-வளைந்தகால் 266.
கொடுஞ்சி-தாமரைமுகை வடிவாகச் செய்த தேருறுப்பு 416
கொடுநுகம்-கொடிய நுகம் 62.
கொடுமை-வளைவு 226, 243, 266, 327.
கொடுவரி-வளைந்த வரி 449.
கொடுவாள் - வளைந்த அரிவாள் 441.

தண்டா-அமையா 460. தணியாத, புறநா 6.
தண்டு-தடி 170.
தண்பணை-மருதநிலம்242.
தப்பல்-கொல்லுதல்42. "யானிற்றப்பிய வல்வினையன்றே" மணிமேகலை21:60.
தப-நீங்கும்படி 238.
தமனியம்-பொன்,332. "தமனியம்வளை இப தாவில் விளங்கிழை" மதுரைக்காஞ்சி 704
தரீஇ-தந்து 492
தரூஉம்-கொடுக்கும்67. [91
தலையாத்த-தலையிலே அழுத்தின
தவாஅ-கெடாத 26.
தழீஇப-சூழ்ந்த 242. முல்லைப் பாட்டு 24.
தளரா-அசையாத 242.
தறி-முளைகள் 152.

## தா

தாக்கல்-எதிரே செல்லல் 134 பாய்தல் 258.
தாங்குநர்-புரப்பார் 18.
தாம்பு-கயிறு 152. 244. பிங்கலந்தை; காமணி, திவாகரம்.
தாரம்-பலபண்டம் 361. புறநா 343 சிலப்பதிகார அரும்பதவுரை 6:153.
தாழ்-தாழ்ந்த356.
தாழை-தாழைமரம் 264
தானை-படை102, 418.காலாட்படை, திவாகரம்

## தி

திங்கள்-சந்திரன் 384,480. புறநா 13.
திணிதோள்-இறுகினதோள் 60
திரி-முறுக்கு
திரிமரம-திரிகை 187.
திருகிய-முறுகிய 3, புறநா 25.
திருந்துதொடை - தப்பாததொடை 68.
திவவு-வார்க்கட்டு 13.

## தீ

தீஞ்சாறு-இனியசாறு 262.
தீற்றி-தின்னப்பண்ணி343. புறநா 337.

## து

துகள்-குற்றம்238 புறப்பொருள் வெண்பாமாலைஉரை தும்பை1
துகில்-ஆடை 235, 'துகில் வெண்மைசெம்மையிரண்டிற்கும் பொது' என்பர் நச்சினார்க்கினியர், சீவகசிந்தாமணி 34
துஞ்சா-மாறாத260.
துஞ்சுதல்-தங்குதல்121. "அறநதுஞ்சும் செங்கோலையே" புறநா 20:17.
துடவை-தோட்டம் 201 மணிமேகலை 13:10 "தொய்யாதுவித்திய துளர்படு துடவை" மலைபடு 142.;
துடி-பாலைப்பறை 124.

புறவு-காடு 496; முல்லைநிலக் காடு பிங்கலந்தை. சிறுகாடு அகநானூற்றுரை 84:9.

பூ

பூ-பொலிவு 278. புறநா 13.
பூஞ்சுமடு-மெத்தென்றசுமடு 159.
பூண்-பூண்ட 136.
பூதய, 255.
பூப்ப-பொலிவுபெற்றிருப்ப 424.
பூளை-பஞ்சு 84. சிறுபூளை 192.

பெ

பெண்ணை-பனை 314, 360. புறநா 61.
பெருநீர்-பெரியநீர் 432. [462
பெரும்பெயர்-பெரும்பொருள்
பெருமகன்-தலைவன் 101.

பே

பேரமர்-பெரியபோர் 416.
பேரூர்-பெரிய ஊர் 254.

பை

பைங்காழ் பசியமணிகள்கோத்த வடம் 329.
பைஞ்சேறு-சாணம் 298. மணிமேகலை 19:115.
பைநீர்-பசுமைநீர்ந்த 105.
பைந்துணர்-பசியகொத்து 308.

பொ

பொருட்டு-கொட்டை 404.
பொதும்பர்- இளமரக்கா 374. "வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்" மணிமேகலை 4:5.
பொருதல்- இசைதல் 9.
பொலம்-பொன் 312. "பூரண கும்பமும் பொலம்பாலிகைகளும்" மணிமேகலை 1;44.
பொறி- ஒளி 448. கண்பொறி கண்ணொளி புறநா 161:13 உரை.
பொன்-திரு 440. "பொன்னேரனையாய் புகுந்தது கேளாய்" மணிமேகலை 2:16.

போ

போழ்-வகிர் 307.

ம

மங்குல்- இருட்சி 480. புறநா, 103. சிலப்பதிகார அரும்பதவுரை 10:152.
மஞ்ஞை-மயில் 331. புறநா 50. திவாகரம்.
மடந்தை-பெண் 12.
மடவரல்- மடப்பந்தோற்றுதல் 387. மடப்பம் என்பர் புறநானூற்றுரைகாரர் 89:2.
மடிதல்-தவிர்தல் 107.
மடிவாய்-வளைந்தவாய் 199; மடித்தவாய் 166.
மடை-பலி 104.
மண்டிலம்-ஞாயிறு 442.
மணி-நீலமணி 14. புறநானூற்றுரை 50:3.
மத்தம்-மத்து 156.
மத-வலி 143. "மதவேமடனும்,

வலியுமாகும்" தொல் உரி81.
மதலை-பற்றுக்கோடு 346.
மதவிடை- வலிமையுடைய விடாய் 143.
மந்தி-பெண்குரங்கு 395, 497.
மயங்கதர்-மயங்கித்திரியும் வழி 106.
மரபு-முறைமை463. புறநா,98 புறப்பொருள் வெண்பாமாலை யுரை. வெட்சி 19.
மருங்கு-இடம் 336.
மருங்குல்-உடம்பு 352. [209.
மருப்பு-தண்டு 14, கொம்பு110,
மல்லல்- வளப்பம் 143, 254. புறநா, 18 தொல் உரி 7
மலைந்தோர்-பொருதோர் 423.
மலைய-சூடாநிற்க 486.
மழு- கோடரி 170.
மழை- மேகம் 49, 190, 257, 413; குளிர்ச்சி 386 [136.
மறம்பூண்- மறத்தைப்பூண்ட
மறு-தழும்பு 171.
மறுகு-தெரு 322. புறநா, 160. நெடுந்தெரு என்றுரைப்பர் நச்சினார்க்கினியர். சீவகசிந். 615 உரை.
மறைகாப்பாளர் -அந்தணர் 311.
மறைவிளி- வேதவோசை 300.
மன்றம்-பொதுஇடம் 143,423
மன்னுயிர்- நிலைபெற்ற உயிர்32.
மனவு- அக்குமணி 132.
மனை- வீடு 256.

மா

மா-பெரிய 14, மாமை நிறம் 160; விலங்கு 497.
மாக்கள்- மக்கள் 61, 432
மாட்டிய- கொளுத்தின 349. புறநா, 19
மாண்பயன் - மாட்சிமைப்பட்ட பயன் 67.
மாத்தாள்- பெரியதண்டு 363.
மார்பு- வடிவு 245.
மால்- பெருமை 330, கருமை 487.
மாலை- தார் 486.
மாறுதல்- விற்றல் 160.
மான-ஒப்ப 269.

மி

மிசை-உச்சி 172.
மிசைதல்- தின்றல் 262.
மிடைதல்- நெருங்கிய 174. "பூமலர்ப்பொழிலும் பொய்கையுமிடைந்து" மணிமேகலை 26:73.
மிண்டி-குத்தி 92.
மிரியல்-மிளகு 78.
மிளிர-மேலாக 92.
மிளை-காவற்காடு 126, 401. புறநா 181. மணிமேகலை 28:25, சிலப். 13:183உரை. சீவகசிந். 1142 உரை.

மீ

மீக்கூறும்—மேலாகக்கூறும் 34. 408.

யூ

யூபம்-யாகத்தம்பம். புறநா 400,

வ

வகை-கூறுகள் 310.

வசை-குற்றம் 35 திவாகரம்.

வடவளம் - வடதிசைக்கணுள்ள நுகர்பொருள் 320.

வடி-வடு 309.

வடிமணி-வடித்தமணி 120. 'தெளிந்தமணி' பு.வெ. பொதுவியல் 14.

வண்டல்-விளையாட்டு 311

வத்தம்-நெல் 305.

வம்பலர்-புதியோர் 76, 365. பட்டினப்பாலை 249.

வய-வலி 27, 128, 448 "வய வலியாகும்" தொல். உரி 70.

வயமான்-வலியையுடையசிங்கம் 448.

வயவர்-வீரர் 101. பு.வெ. உரை தும்பை 17, புறநா 20

வயின்-பதம் 304.

வரிப்பந்து - நூலால்வரிதலையுடையபந்து 333,

வரை-மலை 72, 123; மூங்கில் 330.

வரைப்பு-உலகு 18; மதில் 122. 405. ஊர் 154; பண்டசாலை 324; எல்லை 421;

வல்சி-உணவு 197, 848. சோறு 255

வல்லூற்று-சில்லூற்று 98.

வல்லேறு-வலியஉருமேறு 135.

வலந்த-சூழ்ந்த 236.

வலம்புரி - உயர்ந்தசங்கு. "வரி வளை சூழும் வலம்புரி' என்பதனுரையில் ஆயிரஞ்சங்கு சூழத்திரிவது வலம்புரிஎன்பர் நச்சினார்க்கினியர். சீவகசிந்தாமணி 2103 உரை.

வலன்-வலப்பக்கம் 145. அகநானூறு 3.

வலைஞர்-வலையை வீசுவார் 274

வழைச்சற-இளமையறும்படி 280.

வள்-பெருமை 5

வள்ளி-ஒருகூத்து 370

வளை-வளைந்த 110, 300; சங்கு 488 திவாகரம்.

-வளைத்து 115.

வளையூஉ-வளைந்து 145.

வறத்தல்-வற்றுதல் 10.

வறம்-வற்கடம் 23. புறநா 224.

வறுவாய்-உண்ணுக்கிளையில்லாதவாய் 10. பொருந 12.

வறை-பொரியல் 133.

வன்புலம்-முல்லைநிலம் 206.

வா

வாங்கி-வலித்து 156.

வாங்கு-[illegible]

வாட்டு-பொரியல் 256.

ர்-உப்புக்கண்டம் 100.

பெரும்பாணாற்றுப்படையின் அருஞ்சொற்பொருள் முற்றும்.